# தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி



டாக்டர் ப. கோபாலன்

# தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி



டாக்டர் ப. கோபாலன்
தமிழ் விரிவுரையாளர்
அரசு கலைக் கல்லூரி
உடுமலை - 642 126



விற்பனை உரிமை :




ஐந்திணைப் பதிப்பகம்
279, பைகிராப்ட்ஸ் (பாரதி) சாலை
திருவல்லிக்கேணி
சென்னை-600 005

முதற் பதிப்பு : அக்டோபர் 1989





விலை ரூ. 35-00



இந்நூல்

தமிழில் சிறந்த நூல் வெளியீட்டுக்கான தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் நிதியளிப்புப் பெற்றது—1985

வெளியீடு :

இலட்சுமி பதிப்பகம்
7/7 நரசிம்மபுரம்
குனியமுத்தூர், கோவை-641 008

அச்சிட்டோர் :
சாலை அச்சகம், 11, திருவீதியான் தெரு, தொ.பே. 47 78 20
கோபாலபுரம், சென்னை-600 086 [சாலை 157]

# பதிப்புரை

அகராதிகள் பலவகையின. அவற்றுள்ளும் தமிழில் அறிவியல் தொடர்பான கலைச் சொல் அகராதிகள் என்பனவும் இந் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. தமிழ் இலக்கியக் கலைச் சொற்கள் பற்றிய அகராதி இதுகாறும் வாராதிருந்த குறையை நிவர்த்தி செய்யும் வண்ணம், "தமிழ் இலக்கியக் கலைச் சொல்லகராதி" எனும் இவ்வகராதியைத் தமிழுலகத்திற்குப் படைக்கின்றோம்.

தமிழ் இலக்கிய — இலக்கண ஆய்வாளர்களுக்கும் பட்ட மேற்படிப்பு மாணவர்களுக்கும் சிறந்த கையேடாக விளங்கக் கூடியது இந்த அகராதி. தமிழ் வளர்ச்சியிலும் ஆராய்ச்சியிலும் நாட்டம் கொண்ட அறிஞர்கள் அனைவரும் டாக்டர் கோபாலன் அவர்களின் இந்த நல்ல பணியைப் பாராட்டி வரவேற்பார்கள் என்பது திண்ணம்.

பேராசிரியர் டாக்டர் ப. கோபாலன் அவர்களின் முந்திய படைப்புக்களான, "பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் இலக்கிய மதிப்பீடு", "பாண்டியன் பரிசு அறிமுகம்" எனும் திறனாய்வு நூல்களை அறிந்து ஏற்ற தமிழுலகம், இப்படைப் பினையும் இனிது வரவேற்று ஊக்குவிக்கும் என்று நம்பு கின்றோம்.

இந்நூலினைச் சிறந்த முறையில் குறித்த காலத்திற்குள் செவ்வனே அச்சிட்டுத் தந்த பேராசிரியர் டாக்டர் சாலை இளந்திரையனார் அவர்களுக்கும் சாலை அச்சக ஊழியர் களுக்கும் எம் நன்றி உரியதாகும்.

கோயமுத்தூர்
7-10-1989

சரஸ்வதி கோபால்
இலட்சுமி பதிப்பகம்

## BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the Book | Tamil Ilakkiya Kalai-Chol Akaraathi (Dictionary of Tamil Literary Terms) |
| Editor-cum-Author | Dr. P. GOPALAN, M.A., Ph.D., Lecturer in Tamil Government Arts College Udumalpet Post - 642 126 Coimbatore District |
| Publishers | LAKSHMI PATHIPPAGAM 374, V.G.R. Puram Alagesan Road Saibaba Colony Coimbatore - 641 011 |
| © Copy Right | Dr. P. Gopalan |
| Publication Number | 3 |
| Language | Tamil |
| Edition | Ist Edition—Oct. 1989 |
| Size of the book | D/Dy. 21 × 18 cms |
| Paper used | 14.0 Kg. (Cream wove) |
| Types used | 11 point & 8 Point bold |
| No. of copies printed | 1000 |
| Number of pages | 4 + 256 = 260 |
| Price | Rs. 35-00 (Rupees Thirty Five) |
| Printers | Saalai Achaham, 11, Thiruveethiyan St. Gopalapuram Madras - 600 086 Phone: 17 78 20 |
| Binding | Card Board |
| Subject | Classical Tamil Literary terms with examples |
| Call No. | P, 31, D, 3; 4 "K M 9 |

# தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி

தமிழ் மொழியிலுள்ள சொற்கள், பொருள் உணர்த்தும் முறைகளில் இரண்டு வகையினைக் கொண்டவை. ஒன்று சொல் உணர்த்தும் பொருளை, உணர்ந்து கொள்பவர், பிறர்க்கு எளிதில் உணர வைக்குமாறு அமைவது; மற்றொன்று, சொல் குறிக்கும் பொருளை ஒருவர் உணர்ந்து கொள்ள முடியு மானாலும், அவற்றை வரையறைப்படுத்தி, பிறர்க்கு உணர வைப்பது அவ்வளவு எளிதில் இயலாததாய் அமைவது. இவ்விரண்டாவது வகையைச் சேர்ந்ததே கலைச்சொல் எனும் சொல். இதன் பொருள் உணர்வதற்கு எளிதேயானாலும், விளக்குவதற்கு அரிதாகும். ஆயினும் இயன்றவரை இங்கு வாசகருக்கு விளக்கப்படுகிறது.

## கலைச்சொல் விளக்கம்

"அறிவுலகம் பல திறப்பட்ட பிரிவுகளுடன் திகழும் பான்மையது. இப்பிரிவுகளுள் ஒன்றின்கண் பயில்வார்க்கு மட்டும் ஒரு குறிப்பிட்ட பொருளை உணர்த்தும் ஆற்றலுடைய சொற்களை அல்லது சொற்றொடர்களையே நாம் குறியீட்டுச் சொற்கள் என்றழைக்கிறோம். மொழியியற் கலைச் சொற் களைப் பற்றிக் கூறுமிடத்து, "இன்று மொழியியலில் பயின்று வழங்கும் சொற்கள் பயிற்சியால் சிறப்புப் பொருள் பெற்று விட்டன. அவை மொழியியற் கலைச்சொற்கள் (Linguistic Terminology) எனப்படும்" என்பர். கலைச்சொல் என்பதற்கான விளக்கத்தை இனி விரிவாகக் கண்போம்.

ஒரு கலைக்கு உரிய சொல் கலைச்சொல்லாகும். இவ்வாறு கூறியதால் ஒரு கலையில் அமையும் எல்லாச் சொற்களும் கலைச்

சொற்கள் என்பது பொருள் அன்று. ஒரு கலையில் செய்திகளில் கலைச் சொற்கள் மட்டுமன்றி, பொதுவான வழக்கிலுள்ள சொற்களும் அமையக்கூடும். ஆகவே கலைப்பொருள் மட்டும் கொண்டிருக்கும் சொல் கலைச்சொல்லாகும். சான்றாகப் பெயரெச்சம், வினையெச்சம் போன்றவற்றைக் கொள்வோம். இவை இலக்கணத்திற்குரிய பொருளைக் கொண்டு இலக்கணத்தில் மட்டுமே ஆளப்படுகின்றன. இந்நிலையில் இவை கலைச் சொற்கள் எனப்படுகின்றன.

மேலும், மக்கள் வழக்கில் ஒரு பொருளைக் குறித்து நிற்கும் ஒரு சொல், ஒரு கலைத்துறையில் இடம்பெறும் பொழுது, அக்கலைக்குரிய பொருளைச் சுட்டினால், அச்சொல்லும் கலைச்சொல் எனக் குறிக்கத்தகும். சான்றாக, 'இடம்' என்ற சொல்லைக் காணலாம். இச்சொல் மக்கள் வழக்கில் பொதுவாக ஏதேனும் ஊர், வீடு, காடு போன்ற இடத்தையோ அல்லது ஒரு பகுதியையோ குறிக்கப் பயன்படுகிறது. ஆயின் இதே சொல் இலக்கணத்தில் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் இவற்றை மட்டும் குறிக்கிறது. இவ்வாறு மக்கள் வழக்கில் சாதாரணப் பொருள் தரும் ஒரு சொல், கலையில் அக்கலைக் குரிய பொருளை மட்டும் தருவதாக அமைந்தால், அச்சொல் 'கலைச்சொல்' எனப்படுகிறது.

## வழக்குச்சொல் - கலைச்சொல் வேறுபாடு

வழக்குச் சொல்லுக்கும், கலைச்சொல்லுக்கும் வேறுபாடு கள் காணப்படுகின்றன. இவ்வேறுபாடுகளைச் சொல்லாலும், பொருளாலும், ஆட்சியாலும் நன்கு அறியலாம்.

### சொல்லால் வேறுபாட்டினை அறிதல்

ஒரு சொல் தன் வடிவிலேயே வழக்குச் சொல்லினின்று வேறுபட்டு, கலைப் பொருளைத் தரும் சொல்லாக அமைவதைக் காணலாம். சான்றாக, உயிரளபெடை என்ற சொல்லை எடுத்துக் கொள்ளலாம். இச்சொல் மொழித்துறையில் இலக் கணத்தில் மட்டுமே எடுத்தாளப்படுகிறது. மக்கள் வழக்கில் சாதாரணப் பொருள் தரும் சொல்லாக ஆளப்படவில்லை. இச்சொல் தன் உருவிலேயே தான் ஒரு கலைத்துறையைச் சார்ந்த சொல் என்பதை உணர்த்துகிறது. இவ்வாறே

குற்றியலுகரம், குற்றியலிகரம், ஒற்றளபெடை, மகரக்குறுக்கம் போன்ற பல சொற்கள் மொழித்துறையில் இலக்கணத்திற்கு உரியனவாய் அமைகின்றன. இச்சொற்கள் முறையே உயிரளபெடுத்து நிற்றல், குறுகி வரும் உகரம், குறுகிய இகரம், ஒற்றளபெடுத்தல், குறுகி வரும் மகரம் என்று இவ்விலக்கணப் பொருளையே தருகின்றன. இச்சொற்களால் பெறப்படும் பொருள்கள் இலக்கணத்தைப் பயின்றாலன்றி விளங்குவதில்லை. ஆயின் ஓடினான், பாடினான், பூ, பழம், காய் போன்ற சொற்கள் யாவர்க்கும் எளிதில் விளங்குமாறு அமைகின்றன. இவற்றின் பொருளை உணர்த்துவதற்கு ஏதேனும் ஒரு கலைத் துறையறிவு பெறவேண்டும் என்ற தேவையில்லை. இவ்வாறு கலைச்சொற்கள், சாதாரணச் சொல்லினின்று வேறுபட்டு நிற்பதைக் காண்கிறோம். சில கலைச்சொற்கள் வடிவில் சாதாரணச் சொற்களைப் போலவே அமைகின்றன. அவற்றின் தோற்றத்தின் மூலம் அவை கலைச்சொற்களா, சாதாரணச் சொற்களா என்று பிரித்தறிய முடியாது. ஆயின், இச்சொற்கள் வழக்குச் சொல்லாய் வரும்பொழுது ஒரு பொருளையும், கலைச்சொல்லாய் வரும்பொழுது வேறொரு பொருளையும் தருவதைக்கொண்டு இவற்றை வேறு பிரித்தறியலாம். சான்றாக, பெயர் என்னும் சொல்லை எடுத்துக் கொள்வோம். இச்சொல், சாதாரண மக்கள் வழக்கில் ஏதாவதொன்றின் பெயரைச் சுட்டும் சொல்லாகப் பயன்படுகிறது. ஆயின், இச்சொல், இலக்கணத்தில் வேற்றுமை உருபினை ஏற்கும் இயல்பினைப் பெற்ற ஒரு சொல்வகையைக் குறிக்கிறது. இவ்வாறு சொற்கள் ஒரே தோற்றமளித்தாலும் பொருளால் அவை வேறுபட்டு நிற்றலைக் காணலாம்.

### ஆளுமிடத்தால் வேறுபாட்டினை அறிதல்

தோற்றத்தில் ஒத்தமைந்து, சாதாரணச் சொல்லாகவும் கலைச் சொல்லாகவும் வரும் சில சொற்கள் ஆளுமிடம் கொண்டு வேறுபட்டு நிற்பதையும் காணலாம். இச்சொற்கள் கலைச்சொல்லாய் வரும்பொழுது ஒரு பொருளிலும், சாதாரணச் சொல்லாய் வரும்பொழுது ஒரு பொருளிலும் அமைவதைக் காணலாம். பொதுவாக இவ்வகைச் சொற்கள், கலைச்சொல்லாய் வரும்பொழுது, சாதாரணச் பொல்லினின்று பொருள் வேறாகாது, அதனின்று குறுகிய பொருள் தரும் நிலையிலேயே அமைவதைக் காணலாம். சான்றாகப் பிறப்பு

என்ற சொல்லைக் காண்போம். இச்சொல் சாதாரணச் சொல்லாய் வரும்பொழுது பொதுவாக ஒன்று தோன்றுவதைச் சுட்டி நிற்கின்றது. உயிரினங்கள் தோன்றுவதைக் குறிப்பதாக அமைவதோடு, 'நல்ல காலம் பிறந்தது' 'இராகு காலம் பிறக்கிறது' 'அட்டமி பிறக்கிறது' என்று ஒன்றன் தோற்றத்தைக் குறிக்கின்றன. ஆயின், இச்சொல் இலக்கணத்தில் கலைச் சொல்லாக வரும்பொழுது எழுத்துக்களுக்குரிய ஒலிகள் தோன்றுவதை மட்டும் சுட்டி நிற்கின்றது. (வ. உ.சிதம்பரம் பிள்ளை பதிப்பு, இளம்பூரணம், எழுத்ததிகாரம், தொல்காப்பியம், நூற்பா 83; வை.மு. சடகோப ராமானுஜாசாரியார், சே. கிருஷ்ணமாசாரியார் பதிப்பு, காண்டிகை உரை, நன்னூல், நூற்பா 148).

இவ்வாறே சாதல், அழிவு போன்ற சொற்கள் வழக்கில் பொதுவாக ஒன்றின் இறப்பையும், ஒன்று அழிதலையும் சுட்டுகின்றது. இலக்கணத்தில் சொற்புணர்ச்சியில் எழுத்துக்களின் மறைவை மட்டும் சுட்டுவதாக அமைவதைக் காண்கிறோம்.

ஆகவே சொற்கள் உருவாலும், பொருளாலும், பயன்படுத்துமிடத்தாலும் கலைச் சொற்கள், சாதாரணச் சொற்கள் என்று வேறுபடுவதைக் காண்கிறோம்.

இனி, இவ்வழக்குச் சொற்கள் எவ்வெவ்வாறு கலைச் சொற்களாக ஆக்கப்படுகின்றன என்பதைப் பின்வரும் பகுதியில் காணலாம்.

## வழக்குச் சொல்லைக் கலைச்சொல்லாக்கல்

ஒரு மொழியில் வழங்கும் சாதாரணச் சொற்களில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து, அவற்றிற்கு ஆழமும், சிறப்புமிக்க ஒரு பொருளைச் சுட்டிப் பல்வகைக் கலைகளிலும் அறிஞர்கள் கலைச்சொற்களை வழங்கி வருகின்றனர். இவ்வழக்குச் சொற்களைக் கலைச்சொற்களாக ஆக்கும் முறைகளைக் கீழே காண்போம்.

### (அ) வடிவை மட்டும் கொள்ளல்

சாதாரணச் சொல்லை அதன் வடிவை மட்டும் எடுத்துக் கொண்டு, அதற்குக் கலைப்பொருள் அளித்து வழங்குவது.

கெடுதல் என்ற சொல்லைச் சான்றாகக் கொள்ளலாம். இச் சொல், சாதாரணப் பேச்சு வழக்கில், ஏதேனும் ஒன்று, அதன் முன்பிருந்த நிலையினின்றும் இழிவடைந்த நிலையைக் குறித்துச் சுட்டுகின்றது. ஆயின் இலக்கணத்தில், 'கெடுதல்' என்ற சொல் வடிவு மட்டும் கொள்ளப்பட்டு, அதற்குரிய பொருளாக, எழுத்துக்கள் புணர்ச்சியில் மறைவதையே குறிக்கின்றது. (நன்னூல் நூற்பா. 154).

### (ஆ) பொருளைச் சுருக்கி அமைத்தல்

வழக்குச் சொல்லை, அதன் பொருள் குறிப்பிட்ட எல்லைக்குள் அமையுமாறு கலைச்சொல்லாக ஆக்குவது மற்றொரு வகை. சான்றாக, மென்மை என்ற சொல்லை எடுத்துக் கொள்ளலாம். இச்சொல் வழக்குச் சொல்லாக வருமிடத்துப் பொதுவாக மென்தன்மை உடையனவாக வரும் அனைத்தையும் குறித்து நிற்கும். ''குழந்தையின் கைகள் மென்மையாக இருக்கின்றன'' ''இந்தப் பறவையின் உடல் மிகவும் மென்மையாக இருக்கின்றது'' ''உன் உள்ளம் மிகவும் மென்மையானது'' ''மென்மையான மொழிகளையே எப்பொழுதும் பேசு'' என்பன போன்ற இடங்களிலெல்லாம் இம்மென்மை என்ற சொல் வருவதைக் காண்கிறோம்.

ஆனால், இலக்கணத்தில் 'மென்மை' என்ற சொல் மென்மையாக ஒலிக்கின்ற இயல்பினையுடைய மெய்யெழுத்துக்களை மட்டும் குறித்து நிற்பதைக் காணலாம்.

''.........ஆவி இடைமை இடம்மிடறு ஆகும்
மேவும் மென்மை மூக்கு உரம்பெறும் வன்மை''

(நன்னூல், நூற்பா 75)

என்னுமிடத்தினை இச்சொற் பயன்பாட்டுக்குச் சான்றாகக் கொள்ளலாம். இதில் 'மென்மை' என்பது ஙஞண நமன என்னும் ஒற்றுக்களை மட்டும் குறித்தலைக் காண்கிறோம். இவ்வாறு, சாதாரணச் சொல்லாக விரிந்து பொருள் தரும் 'மென்மை' என்ற சொல, கலைச்சொல்லாக ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் பொருள் உணர்த்துவதைக் காணகிறோம்,

### (இ) பொருள் விரிவுபட அமைத்தல்

மக்கள் வழக்கில் குறுகிய பொருள் தரும் ஒரு சொல்லை, விரிந்த பொருளைத் தருவதாக ஆக்குவதையும் இக்கலைச் சொல்லாக்க முறையில் காணலாம். சான்றாக, 'தொழில்' என்ற சொல் மக்கள் வழக்கில் அவன் வாழ்க்கைக்கு உதவுமாறு அவனால் மேற்கொள்ளப்பட்டு வரும் செயலையே குறிக்கிறது. நீண்ட நாட்களாகச் செய்து வரும் செயலையோ, வருவாய் தருவதாக அமையும் செயலையோ மட்டுமே இத்தொழில் என்ற சொல் குறிக்கின்றது. உழவுத்தொழில், தட்டச்சுத் தொழில் போன்றவற்றில் இச்சொற் பயன்பாட்டைக் காணலாம். ஆயின், இலக்கணத்தில் கலைச்சொல்லாக வரும் நிலையில் 'தொழில்' என்ற சொல் வினை நிகழ்ச்சி அனைத்தையும் குறிக்குமாறு விரிந்து பொருள் தருவதைக் காண்கிறோம். காட்டாக,

> ''தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
> ஒழிய நிற்பது வினையெச் சம்மே''
>
> (நன்னூல், நூற்பா, 342)

என்ற நூற்பாவில் வரும் 'தொழில்' என்ற சொல்லைக் காணலாம்.

### (ஈ) உவமையைக் கலைச்சொல்லாக்கல்

மக்கள் வழக்கில் அமையும் சொல்லை, உவமையாகப் பயன் படுத்தி இலக்கணப் பொருளை விளக்குவதைக் காணலாம். இவ்விடங்களில் இவ்வுவமச் சொற்களே ஆகுபெயராய் அமை கின்றன. சான்றாக, உயிர், மெய் என்ற சொற்களைக் காணலாம்.

அகரம் முதலிய பன்னிரண்டு எழுத்துக்களும் உயிர் போலத் தனித்து இயங்குவனவாதலால் 'உயிர்' எனவும், ககரம் முதலிய பதினெட்டும் 'உடம்பு' போல உயிரோடு கூடியல்லது இயங்காவாதலால் 'மெய்' எனவும் பெயர் பெற்றன. இவ்விடங் களில் உயிர் போன்ற எழுத்துக்கள் என்றும் மெய் போன்ற எழுத்துக்கள் என்றும் பொருள் அமைந்து, உயிர், மெய் என்பன உவமையாகு பெயராய் அமைவதைக் காண்கிறோம்.

## கலைச்சொல்லுக்குரிய வேறு பெயர்கள்

கலைச்சொற்களைக் குறி என்றும் குறியீடு என்றும் பண்டை இலக்கண ஆசிரியர்களும், உரையாசிரியர்களும் கூறி வந்தமையைக் காணலாம்.

தொல்காப்பியர்,

'தான் குறியிடுதல்' (தொல். இளம். பொருள். 653)

என்றும், நன்னூலார்,

'தன் குறிவழக்க மிகவெடுத் துரைத்தல்' (நன்னூல். 14)

என்றும் கூறுமிடத்தில் 'குறி' என்ற சொல்லால் கலைச்சொற்களைக் குறித்தமையைக் காணலாம். மேலும்,

"இது, தனி மெய்களுள் சிலவற்றிற்கு வேறுஓர் குறியிடுதல் நுதலிற்று" (தொல். எழு. இளம். 19 உரை)

"மெல்லெழுத்து என்னும் குறிய என்று சொல்லுவர்" (தொல். எழு. இளம். 20 உரை)

என்பன போன்ற இடங்களில் இளம்பூரணர் 'குறி' என்ற சொல்லால் கலைச்சொல்லைக் குறிப்பதைக் காணலாம். சேனாவரையர்,

"வியங்கோள் ஏவற்பொருட்டாய் வருவது வாழ்த்துதல் முதலாகிய பிறபொருளுமுடைத்தாகலின் இக்குறி மிகுதி நோக்கிச் சென்ற குறியென உணர்க" (தொல். சொல். சேனா. 222)

என்றும்,

"குறியீடு கருத்தாயின் அவ்வாறென்ப முற்றியன் மொழியே என்னாது........... (தொல். சொல். சேனா. 427)

என்றும் கூறும் இடங்களில் அவர் 'குறி' என்றும் 'குறியீடு' என்றும் கலைச்சொற்கள் வழங்குவதைக் காணலாம்.

பிற இலக்கண உரையாசிரியர்களும் கலைச்சொற்களை, குறி என்றும் குறியீடு என்றும் வழங்குவர்.

இதில் 'கலைச்சொல்லாக்கம்' என்ற சொல்லுக்கிணையாக் 'குறியிடுதல்' என்னும் கூட்டுச்சொல்லைப் பயன்படுத்தியமையைக் காணலாம்.

## கலைப் பொருள்

கலைச்சொல் என ஒன்றிருப்பதைப் போலவே, கலைப் பொருள் என ஒன்றும் அமையலாமோ என்று எண்ணத் தோன்றும். ஒவ்வொரு கலைச்சொல்லும் ஒரு கலைக்குரிய பொருளைக் குறிப்பதால், கலைச்சொல் எனப்படுகிறது. இதைப்போல் ஒவ்வொரு கலைப்பொருளும் ஒரு கலைக்குரிய தாக வருவதால், கலைப்பொருள் என்று தனியாகச் சுட்ட லாமோ என்று எண்ணுவது இயல்பே.

ஒரு குறிப்பிட்ட கலைத்துறையை எடுத்துக் கொண்டால் அக்கலை பற்றிய செய்திகளில் எல்லாச் சொற்களும் கலைச் சொல்லாக அமையா. சில சொற்களேனும் சாதாரணச் சொற் களாக அமையும். ஆகவே, கலைச் சொற்களைச் சாதாரணச் சொற்களினின்றும் பிரித்தறிய முடியும். பிரித்தறிய வேண்டிய தேவையும் ஏற்படுகிறது. ஆகவே கலைச்சொற்கள் தனியே சுட்டப்படுகின்றன. ஆயின் கலைப்பொருள் என்பது அவ்வாறன்று. ஒரு கலைத்துறையில் அமையும் எல்லாப் பொருளுமே கலைப்பொருளாகத்தானமையும் அவற்றில் குறிப்பிட்டு இதுதான் கலைப்பொருள், இது சாதாரணப் பொருள் என்று பிரித்தறியுமாறில்லை. சான்றாக, இலக் கணத்தை எடுத்துக் கொள்வோம்; இதில் வரும் அனைத்துப் பொருளும் இலக்கணப் பொருளாக, மொழி பற்றியதாக' மொழி அமைப்பினைப் பற்றியதாகவே அமைவதைக் காணலாம். ஆகவே, இதில் இலக்கணக் கலைச்சொற்கள் என்று சுட்டுவதைப் போல, இலக்கணக கலைப்பொருள் என்று பிரித்துக் கூறவேண்டிய தேவையில்லை. இதனால் கலைச்சொல் என்பது போல் கலைப்பொருள் என ஒன்று கூறுவது வேண்டாதது எனத் தீர்மானிக்கலாம்.

## கலைச்சொல்லாக்கத்தின் இன்றியமையாமை

கலைச்சொற்களைப் பொருளுக்கேற்பப் பாகுபாடு செய்தும், வகைப்படுத்தியும் கூறுவதோடு, அவற்றிற்குப் பெயரிடுவதும் இன்றியமையாததாகும். கலைச்சொல்லாக்கத்தி னால் உருவாகும் பெயர்களின் மூலம் கலைச்செய்திகள் எளிமைப்படுத்தப்படுகின்றன. மேலும், பல புதிய கலைகளை

ஒரு மொழியில் கொணர்ந்து குவிக்கின்றன. ஒரு மொழி நன்கு சொல்வளம் பெற்றுத் திகழும் வாய்ப்பினைக் கலைச் சொல்லாக்கம் ஏற்படுத்துகிறது. பொதுவாக, கலைச் சொல்லாட்சி, ஒவ்வொரு கலையினையும், எளிமையாகவும், தெளிவாகவும், நுட்பமாகவும் உணரச்செய்கிறது. இக்கலைச் சொல்லாக்கத்தின் இன்றியமையாமையினைப் பின்வரும் பகுதி களில் ஆராயலாம்.

### வரையறைப்படுத்தல்

ஒரு கலையில் செய்திகள் தொடர்ச்சியாக அமைந்து செல்லக் கூடியன. அவ்வாறு செல்லுமிடத்து அச்செய்திகளை இடையீடின்றித் தொடர்ச்சியாகப் பயின்று உணர முயல்வது அரிதான செயலாகும். ஆகவே கலைச்செய்திகளின் தொடர்ச்சி யில் பொருள்களை இடையிடையே தடுத்து, அவற்றை பயின்று உணர்ந்தபின் தொடர்ந்து பயில்வது இன்றியமையாததாகும். தொடர்ந்து செல்லும் பொருள்களைப் படிப்படியே விளங்கிச் செல்வதற்கு இவ்வகையில் கலைச்சொற்கள் உதவுவதைக் காணலாம். கலைச்செய்திகளை இடையே நிறுத்தி, கலைச் சொற்களை அமைத்து இப்பொருள்கள் இன்ன பெயருடையன, இவ்வகைபாடுகள் இன்ன கலைச்சொல்லில் அடங்குவன, இச்செயற்பாடுகள் இன்ன பெயரால் வழங்கப்படுவன என்று வரையறைப்படுத்துவதால் செய்திகள் பயில்வதற்கேற்றவாறு எளிமைப்படுத்தப்படுகின்றன. ஆகவே, ஒரு கலைபற்றிய செய்திகளை முதலில் நன்கு புரிந்து கொள்ளுவதற்கேற்ப வரையறைப்படுத்தக் கலைச்சொற்கள் உதவுவதைக் காணலாம்.

### பன்முறை ஆட்சிக்கு எளிமை

ஒரு கலைபற்றிய செய்திகளில் சில ஒருமுறை மட்டும் அமைந்து வரும். பல செய்திகள் ஒன்றுக்கு மேற்பட்ட இடங் களில் அமைந்து வரும். இவ்வாறு பலமுறை அமைந்து வரும் பொழுது, ஒவ்வொரு இடத்திலும் அப்பொருள் முழுவதையும் எடுத்தாளுவது எளிமையானதன்று. மேலும் அவ்வாறு கூறிய பொருளையே மீண்டும் மீண்டும் கூறிச்செல்வது தேவையற்றது மாகும். இவ்வாறு மீண்டும் மீண்டும் கூறுவதால் கலைச்செய்தி கள் தேவையில்லாமல் விரிந்து கொண்டே போகும். ஆகவே, இப்பொருள்களை மீண்டும் மீண்டும் அமைக்குமிடத்தில்

அவற்றிற்குப் பதிலாக அவற்றை உணர்த்தும் எளிய குறியீடுகளை அமைக்க வேண்டியது இன்றியமையாததாகும். இவ்விடங்களில் கலைச்சொற்கள் பெரிதும் பயன்படுவதைக் காணலாம். கலைச்சொற்களைக் கொண்டு கலைப்பொருளுக்குப் பெயரிடுவதால் தேவையான இடங்களிலெல்லாம் அச்செய்திகளைக் கலைச்சொற்களைக் கொண்டு வழங்க முடிகிறது. கலைச்சொற்கள் கலைச்செய்திகளில் ஒரு குறிப்பிட்ட பகுதி முழுவதையும் ஒரே சொல்லில் அல்லது தொடரில் குறிப்பாகச் சுட்டுகிறது. இவ்வாறான அமைப்பினால், கலைப்பொருளில் ஒரு பகுதியை அதற்கு அமைந்துள்ள கலைச்சொல் ஈடு செய்கிறது. ஆகவே, இக்கலைச்சொற்களைக் கொண்டு கலைச்செய்திகளை எடுத்தாளுவது எளிதாகிறது. இதனை, 'குறியீடு ஆட்சிப் பொருட்டாகலின்...' என்ற சேனாவரையர் கூற்றிலும் நன்கு உணரலாம். (தொல். சொல். சேனா. 427 உரை).

## சுருக்கிக் கூறல்

கலைச்சொல்லாக்கம் பல செய்திகளுக்குக் குறியீடுகளை அமைத்துத் தருகின்றது. இக்குறியீடுகள் விரிவான செய்திகளைக் குறுகிய அளவுச் சொற்களால் உணர்த்துவனவாகக் காணப்படுகின்றன. சான்றாகப் 'பெயரெச்சம்' என்ற சொல்லைக் காண்போம். பெயரெச்சம் செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் வாய்ப்பாடுகளில் காலமும், தொழிலும் தோன்ற அமைவது. பாலொடு செய்பவன் முதலாய அறுவகைப் பெயரும் ஒழிய நிற்பது. தெரிநிலையாகவும், குறிப்பாகவும் வருவது. இவையனைத்தையும் கூறிச்செல்வதற்கு மாறாக, 'பெயரெச்சம்' என்ற கலைச்சொல் அமைப்பால் சொற்சுருக்கம் ஏற்படுகிறது. இதனால் கலைச்செய்திகளைப் பயில்வதில் எளிமையும், விரைவும் ஏற்படுகிறது. இவ்வாறு, பன்மொழியால் விரிந்த பொருளைச் சின்மொழியால் சுருக்கிக் கூறும் முறையில் இக்கலைச்சொற்கள் பயன்படுவதைக் காண்கிறோம்.

## விளக்கம் கொண்டிருத்தல்

கலைச்சொற்களில் சில, தாமே பொருள் விளக்கம் தருவனவாக அமைவதைக் காணலாம். சில கலைச்சொற்கள் தம் குறியீட்டுச் சொற்களில் புலப்படாத ஒரு விளக்கத்தைக் கொண்டிருக்கும். அல்லது புலப்படாத ஓர் இயல்பைக் கொண்டி

ருக்கும். சான்றாக, 'மாத்திரை' என்ற சொல்லைக் காண்போம். மாத்திரை என்பது எழுத்துக்களின் ஒலி அளவைச் சுட்டி நிற்கிறது. இவ்விளக்கத்தை அறிந்த பின்னரே 'மாத்திரை' என்ற கலைச்சொல்லை நம்மால் புரிந்துகொள்ள இயலும். இவ்விளக்கத்தை அறியாநிலையில் மாத்திரை என்ற கலைச் சொல்லை நம்மால் உணர்ந்து கொள்ள இயலாது. ஆயின், பல கலைச்சொற்கள், அச்சொற்களிலேயே பொருள் விளக்கம் அமைந்தும் காணப்படுகின்றன.

சுட்டெழுத்து என்ற சொல்லுக்கு, சுட்டப்படுவதாய இயல்பை உடைய எழுத்து என்பதை அக்குறியீட்டுச் சொற் களிலேயே அறிந்து கொள்ளலாம். இதற்கு மாத்திரை என்ற சொல்லுக்குத் தனியே விளக்கம் காணவேண்டி இருந்ததைப் போன்ற தேவையில்லை. சுட்டெழுத்தைப் போலவே, உயிரள பெடை என்ற கலைச்சொல்லுக்கு உயிரளபெடுத்து நிற்றலாகிய இயல்பையும், குற்றியலுகரம் என்ற கலைச்சொல்லுக்குக் குறுகி வரும் உகரம் என்ற பொருளையும் இக்கலைச் சொற்களினின்றே உணர்ந்து கொள்ளலாம்.

இவ்வாறு இக்கலைச் சொற்களில் பல, தம் சொற்களி லேயே பொருள் விளக்கம் தருவனவாகவும் அமைவதைக் காண்கிறோம்.

### பிறழ உணர்தலை நீக்கல்

கலைச்செய்திகளில் அமையும் உட்பிரிவுகளைச் சரியாக உணர்ந்து கொள்ளாமல் பிறழ உணர்தலாகிய ஒரு நிலையினை யும் இக்கலைச் சொல்லாக்கத்தின் மூலம் விளக்கலாம். சான்றாக, 'மெய்யெழுத்துக்கள்' பிரிவைக் காணலாம். மெய் யெழுத்துக்கள் பதினெட்டும் ஒலிப்பு முறையை ஒட்டி, வன்மை யாக ஒலிப்பவை, மென்மையாக ஒலிப்பவை, இடைப்பட்டு ஒலிப்பவை என்று ஒவ்வொன்றும் ஆறாறு எழுத்துக்களாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு வகைக்கும் தனித்தனியே சில விதிகளும் அமைந்து காணப்படுகின்றன. இவ்வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற கலைச்சொற்கள் இல்லாவிடில், சில மெய்களுக்கு இந்த விதிகள், சில மெய்களுக்கு இந்த விதிகள் என்று கூற நேரிடும். இவ்வாறு ஒவ்வொரு தடவையும் சில மெய்களுக்கு என்று குறிப்பிடுவது பிறழ உணர்தலுக்கு இட

மளிக்கும். ஆகவே வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என்று தொல்காப்பியனாரும் (தொல். எழுத்து. இளம். 19, 20, 21 உரை), வல்லினம், மெல்லினம், இடையினம் என்று நன்னூலாரும் (நன்னூல் 68, 69, 70) கலைச் சொற்களைக் கொண்டு இம்மெய்யெழுத்துக்களின் பாகுபாடுகளைப் பெயரிட்டு அழைத்தமையினால் பிறழ உணர்வதைத் தடுக்க முடிகிறது. எனவே, கலைப்பொருள்களில் பிறழ உணர்தலைப் போக்குவதாகவும் கலைச்சொற்கள் அமைவதைக் காண்கிறோம்.

### பாகுபாட்டினைத் தெளிவுபடுத்தல்

சில கலைச்சொற்கள் மிக விரிவான அமைப்பு வகைகளையும் தெளிவுபடுத்துகின்றன. சான்றாக, சார்பெழுத்தின் வகைகளை ஆராய்வோம். சார்பெழுத்து பத்துப் பிரிவுகளைக் கொண்டது. இப்பத்துப் பிரிவுகளுக்கும் கலைச்சொற்களால் பெயரிடப்படவில்லையானால் இப்பத்துப் பிரிவுகளையும் இவற்றின் பொருளால்தான் நினைவுகொள்ள நேரிடும். இவ்வாறு பல பிரிவுகள் வருமிடத்து, ஒவ்வொரு பிரிவினையும், தெளிவாக உணர்வது எளிதன்று; ஆகவே, கலைச்சொல்லாக்கத்தின் மூலம் இப்பத்துப் பிரிவுகளுக்கும், உயிர்மெய், ஆய்தம், உயிரளவு, ஒற்றளபு, குற்றியலுகரம், இக்குறுக்கம், ஐக் குறுக்கம், ஔக்குறுக்கம், மகரக் குறுக்கம், ஆய்தக் குறுக்கம் என்று பெயரிடுவதால் செய்திகளை எளிதில் நினைவு கொள்வதற்கு இயலுகின்றது. எனவே கலைச்செய்திகளின் விரிவான பாகுபாட்டையும் தனித்தனியே தெளிவாக உணர்ந்து கொள்ள, கலைச்சொற்கள் உதவுகின்றன எனல் மிகையாகாது.

### பொதுமை காட்டல்

கலைச்செய்திகளின் வகைபாடுகளைக் குறிக்க அமைக்கப்படும் பெயர்கள், அவற்றின் பொதுத் தன்மையை வெளிப்படுத்துமாறும் அமைவதற்குக் கலைச்சொல்லாக்கம் பயன்படுவதைக் காண்கிறோம். சான்றாக, இலக்கணத்தில் தொகைகளை எடுத்துக் கொள்வோம். தொகைகள் ஆறும் வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உவமத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித்தொகை எனப் பெயரிடப்பட்டுள்ளன.

இவற்றிலமையும் தொகை என்னும் சொல் இரு பெயர்கள் தொக்கு நிற்றலாய பொதுத்தன்மையை இத்தொகைகள் கொண்டிருப்பதைத் தெளிவுபடுத்திக் காட்டுகின்றது. இவ்வாறே பெயரெச்சம் வினையெச்சம் என்பவை சொல் எஞ்ச நிற்றலாய ஒரு பொதுத் தன்மையைக் கொண்டிருத்தலைக் காண்கிறோம். இவ்வாறு பொதுமைப்படுத்துவதால் செய்திகளை எளிதில் உணர்கிறோம்.

## நினைவுகொளச் செய்தல்

ஒரு கலை பயிலுமிடத்தில், தெளிவும், நுண்மையும் கொண்டு விளங்கும் அக்கலைச் செய்திகளை, எளிதில் நினைவு கொள்ளுமாறு செய்வது இன்றியமையாததாகும். அவ்வாறு எளிதில் நினைவில் பதிய வைத்தற்குக் கலைச்சொற்கள் உதவு கின்றன. விரிவாகக் கலைச்செய்திகளையும் கலைச்சொற்களைக் கொண்டு பெயரிடுவதன் மூலம் அவை எளிமைப்படுத்தப்படு கின்றன. ஒரு கலைச்சொல் ஒரு கலையின் செய்திகளில் குறிப் பிட்ட ஒரு பொருளைத் தன்னுள் அடக்கி நிற்கிறது. இதன் மூலம், அக்கலைப் பொருளுக்குச் சமனாக அதற்குரிய இடத்தில் நிற்கும் குறியீடாகக் கலைச்சொல் அமைந்து சிறக்கின்றது.

இவ்வாறு அமைவதால் அக்கலைப்பொருளை நினைவு கொள்ளுவதற்குப் பதிலாக, அக்கலைச் சொற்களை நன்குணர்ந்து, அவற்றை நினைவில் கொள்வதே போதுமான தாக அமைகிறது. கலைச்சொற்கள் பல சொற்களாலாய கலைச் செய்திகளைச் சில சொற்களைக் கொண்டு சுருக்கி அமைப்பதால், கலைப் பொருளிலும் அமைப்பில் குறுகி, நினைவு கொள்வதற்கு ஏற்றவையாய் அமைவதைக் காண் கிறோம். (யாப்பருங்கலக்காரிகையின் "உதாரண இலக்கிய முதனிணைப்புச் செய்யுள்" இக்கருத்துக்குச் சான்றாக அமையக் கூடியது. யாப்பருங்கலக் காரிகையில் சான்றாக அமைக்கும் செய்யுட்களை எளிதில் நினைவு கொள்ள, அவற்றின் முதற் சொற்களை மட்டும் இச் செய்யுளில் அமைத்துக் கூறி யிருப்பது, கலைச் செய்திகளை எளிதில் நினைவு கொள்ள, கலைச்சொற்கள் உதவும் என்ற கருத்திற்கு அரணாக அமைவதைக் காணலாம்.)

## பிற மொழிக் கலைகளை மொழிபெயர்க்க உதவுதல்

ஒரு மொழியில் பிற மொழிக் கலைச்செல்வங்கள் பல வற்றைக் கொணர்ந்து, மொழியை வளப்படுத்துவதற்கும் கலைச்சொற்கள் உதவுமாற்றைக் காணலாம். பிறமொழிக் கலைகளை ஒரு மொழியில் கொணர்வதற்கு அவற்றை மொழி பெயர்க்க வேண்டியது இன்றியமையாததாகும். அவ்வாறு மொழி பெயர்க்குமிடத்து, பிறமொழிக் கலைச்செய்திகளிடை அமைந்திருக்கும் கலைச்சொற்களை மொழிபெயர்க்கும் பொழுதே அக்கலையினை வேறொரு மொழி பெற முடியும். இதற்கு அப்பிறமொழிக் கலைச்சொற்களுக்கிணை யாகக் கலைச்சொற்கள் பலவற்றை அம்மொழியில் அமைத்துக் கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும். அம்மொழியில் அப்பிறமொழிக் கலைக்குத் தேவையாகக் கலைச்சொற்கள் ஆக்கப்படும் நிலையிலேயே அக்கலையினை மொழிபெயர்க்க முடியும். இவ்வாறு, கலைச்சொல்லாக்கத்தின் மூலம் ஒரு மொழி, பல பிறமொழிக் கலைகளைப் பெற்று வளம் பெறும் நிலை ஏற்படுவதையும் காண்கிறோம்.

## ஆக்கத்திற்கு உதவும் அளவான கலைச்சொற்கள்

கலைச்சொற்களின் பயன் பலவாக இருப்பினும், அவை அளவாக ஆக்கப்பட வேண்டுமேயன்றி, அளவிற்கதிகமாக ஆக்கப்படுதல் கூடாது. மிகுதியாக இருக்கும் கலைச்செய்தி களைச் சுருக்கி எளிதாக உணரச் செய்வனவே கலைச்சொற்கள். இக்கலைச் சொற்களே அளவிற்கு மிகுதியாக அமைந்தால், அக் கலைச்சொற்கள் கலையை எளிமையாகவும் தெளிவாகவும் விளக்குவதற்கு மாறாக, கலைபற்றிய அறிவில் தளர்ச்சியையும், குழப்பத்தையும் உண்டு பண்ணும். எனவே, கலைச்சொற் களும் ஓர் அளவிற்குட்பட்டனவாக அமைதல் இன்றியமையாத தாகும்.

இதுவரை கூறியவற்றிலிருந்து கலைத்துறையில் மட்டும் பயின்று வரும் சொல்லோ, கலைத்துறையில் மட்டுமன்றி மக்கள் வழக்கிலும் பயின்றுவரும் சொல்லோ, ஒரு கலைப் பொருளைத் தருமாயின், அது கலைச்சொல்லாகும் என்பதை அறிகிறோம்.

ஒரு கலைத்துறையில் கலைச்சொல்லாக்கத் தேவையை உணர்ந்து அவ்வளவிற்கேற்பக் கலைச்சொற்களை ஆக்கிக்

கொள்வது அக்கலையை நன்கு வளரச் செய்யும் முயற்சியாக அமையும்.

## இக்கலைச்சொல் அகராதி பற்றிய குறிப்பு

ஒரு மொழியில் தோன்றியுள்ள அகராதிகளை அம்மொழி வளர்ச்சியை மதிப்பிட்டு அளந்து காட்டும் அளவுகோலாகக் கொள்ளலாம். சொற்களை அகரவரிசைப்படுத்திப் பொருள் விளக்கம் தரும் நூலை 'அகராதி' என்று குறிப்பிடுகிறோம். ஒரு மொழியில் வந்துள்ள அகராதிகள் அம்மொழி எந்தெந்தத் துறையில் சொல்வளம் பெற்றிருக்கின்றது, இன்னும் எந்தெந்தத் துறைகளில் சொல்வளம் பெறவில்லை என்பதைக் காட்டும்.

ஆங்கில மொழி எட்டு இலட்சம் சொற்களைப் பெற்றிருப்ப தால் அம்மொழியில் பல்வேறு துறை தழுவிய அகர முதலிகள் பெருகியுள்ளன. அவை வருமாறு :

1. அகரமுதலி (Dictionary)
2. அகரவரிசை (Vocabulary)
3. அகராதி (Lexicon)
4. கலைக்களஞ்சியம் (Encyclopaedia)
5. சொற்களஞ்சியம் (Thesaurus)
6. சொற்கோவை (Concordance)
7. சொற்பட்டி (Index)
8. சொல்லடைவு (Glossory)
9. திணைக்களஞ்சியம் (Gazetteer)

மேலே குறிப்பிட்ட அகராதி வகைகளில் தமிழில் ஒரு சிலவே உள்ளன எனல் மிகையாகாது.

தமிழ் இலக்கியத்தில் ஆளப்பட்டிருக்கும் பல சொற் களுக்குப் பொருள் கூறுவதோடு அச்சொல் செய்யுள் வழக்கில் வந்துள்ள தொடரும், அஃது எடுத்தாளப்பட்டுள்ள நூலின் தொடரும், பாடலின் எண்ணும் கொடுக்கப்பட்டு இருக்கும் இலக்கியக் கலைச்சொல் அகராதி ஒன்று தயாரிக்கப்பட வேண்டும் என்ற நோக்கில் இந்த அகராதி தயாரிக்கப் பட்டுள்ளது.

தமிழ் இலக்கியத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் பயில்வோர்க்குப் பயன்படும் வகையில்—இலக்கியத்தில் ஆளப் பட்டிருக்கும் இலக்கணக் கலைச் சொல்லுக்குப் பொருள் அறிய ஒருசேரப் பல இலக்கண நூல்களையும் பல உரையாசிரியர் களின் உரைகளையும் பார்த்து அறியவேண்டியிருக்கிறது. இதைத் தவிர்த்து ஒரே நூலில் இன்றியமையா இலக்கிய இலக்கணக் கலைச்சொற்கள் சுமார் 2400 சொற்களுக்கு மட்டும் பொருளும் இலக்கிய ஆட்சியும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. எனவே, இவ்வகராதி "தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி' எனப் பெயரிடப்பட்டுள்ளது.

# அ

**அக்கரச்சுதகம்**

ஒரு பொருள் பயப்பதோர் சொற்கூறி அச்சொல்லில் ஓரோரெழுத்தாகி நீக்கி வேறு வேறு பொருள் பயக்கும் சித்திரகவி. கநகாரி, நகாரி, காரி அல்லது பாலாவி, பாலா, பா

**அக்கரவர்த்தனம்**

ஒரு பொருள் பயப்பதோர் சொற்கூறி அச்சொல்லோடு ஓரோரெழுத்தாகக் கூட்ட வேறு வேறு பொருள் பயக்கும் சித்திரகவி (பி. வி. 26, உரை) கம், நகம், கநகம், கோகநகம் அல்லது கா, காவி, காவிரி

**அக்கரவர்த்தி**

ஒரு சித்திரகவி, அக்கரவர்த்தனம்

**அக்கரவிலக்கணம்**

அறுபத்து நான்கு கலையுள் ஒன்றாகிய எழுத்திலக்கணம்.

**அக்கினி கணம்**

செய்யுண் முதற்சீராக அமைக்கத் தகாததும் நிரை நேர் நிரை என வருவதுமாகிய தீய செய்யுட்கணம்

**அகக்கூத்து (நாட்)**

முக்குண சம்பந்தமான நடிப்பு (சிலப். 3, 12, உரை)

**அகச்சுட்டு (இலக்)**

அவன், இவன், உவன் (நன். 66, உரை)

**அகச்சுவை**

அகமார்க்கத்துக்குரிய சுவை (சிலப். 3, 19, உரை)

**அகத்தமிழ்**

அகத்திணை பற்றிய தமிழ் (திருக்கோ. 70)

**அகத்திணை**

அகப்பொருள் பற்றி அமைந்த ஒரு நூல் (களவியற். 8)

**அகப்பொருள்**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை, இன்பவொழுக்கம் (தொல். பொ. 1, உரை)

**அகத்திணைப்புறம்**

அகனைந்திணை நீங்கிய கைக்கிளை, பெருந்திணைகள்

**அகத்துழிஞை**
கோட்டையினுள்ளாரைப் புறத்தார் போர் வெல்லும் புறத் துறை (பு. வெ. 6, 22)

**அகநிலைக் கொச்சகம்**
கொச்சக பேதம் (கலித். 119, உரை)

**அகநிலையொத்தாழிசை**
1. கலிப்பாவகை (பாப்பா. 91)
2. கலியுறுப்புவகை (தொல். பொ. 450, உரை)

**அகப்பாட்டு**
அகப்பொருளமைந்த செய்யுள் (கலித். 37, உரை)

**அகப்பாட்டுறுப்பு**
அகப்பாட்டுக்குரிய உறுப்புக்கள் பன்னிரண்டு. அவை திணை, கைகோள், கூற்று, கேட்போர், இடம், காலம், பயன், முன்னம், மெய்ப்பாடு, எச்சம், பொருள்வகை, துறை (நம்பியகப். 211)

**அகப்பாட்டெல்லை**
குறித்த வரம்பைத் தன் கைத்தடக்கிக் கொள்ளும் எல்லை (தொல். எழுத். பாயி.இளம்.)

**அகப்பாட்டு வண்ணம்**
இறுதியடி ஏகாரத்தான் இறாது இடையடி போன்று வருஞ் சந்தம் (தொல். பொ. 536)

**அகப்புறக் கைக்கிளை**
காமஞ்சாலா இளமையோள்வயிற் குறுகி ஒருவன் அவள் குறிப்பறியாது மேன்மேலுங்கூறும் ஒழுக்கம் (நம்பியகப். 241)

**அகப்புறத் தலைவன்**
கைக்கிளை பெருந்திணைகளுக்குரிய தலைவன் (கலித். 108, உரை)

**அகப்புறத்திணை**
அகத்திணைக்குப் புறம்பான கைக்கிளை பெருந்திணை முதலியன (யாப். வி. பக். 529)

**அகப்புறப்பாட்டு**
கைக்கிளை பெருந்திணைகளுக்குரிய செய்யுள் (நம்பியகப். 250)

**அகப்புறப் பெருந்திணை**
அகனைந்திணைக்குப் புறமாகிய பெருந்திணை (நம்பியகப் 243)

**அகப்புறம்**

ஒருசார் தொடர்பு கொண்டு புறம்பானது (தொல்.பொ. 54, உரை)

**அகப்பொருட்டுறை**

அகப்பாட்டுறுப்புள் ஒன்று

**அகப்பொருள்**

1. அகத்திணையாகிய பொருள் (புலவோராய்ந்த வருந் தமிழ் அகப்பொருள். நம்பியகப். 1)
2. இன்ப வொழுக்கம் கூறும் நூல் (நம்பியகப். 215)
3. அகத்திணையிலக்கணம் (இறையனாரகப் பொருள் 4)
4. காம வின்பம் (நீ புறப்பொருளை விரும்பி அகப் பொருளைக் கைவிட்டதிலே. கலித். 15)
5. உட்பொருள் (நான்மறையகப்பொருள் புறப் பொருளறிவார் கம்பரா. இரணிய. 32)

**அகப்பொருள் விளக்கம்**

காண்க: நம்பியகப் பொருள்: நாற்கவிராச நம்பி யியற்றிய அகப்பொருளிலக்கணம்

**அகம்**

1. உள்ளிடம்; அகம்புற நிறைந்த சோதியாய் (தாயு. சிவன் செ. 4)
2. மனம்; அகமலர்ந்தீவார் (பதினொரு திருவிடை. மும். 7)
3. காம வின்பம் (தொல். பொரு.1, உரை)
4. அகப் பொருள்

**அகமலர்ச்சியணி**

உல்லாசாலங்காரம் (அணியி. 69)

**அகலக்கவி**

வித்தாரகவி (இலக்.வி. 767, உரை) அகலக்கவி பாடு வோன் (வெண்பாப். செய். 5, உரை)

**அகலப்பா**

வித்தாரகவி; ஈங்க கலப்பாக்க ளிரண்டாகும் (வெண்பாப். செய். 5)

**அகலவுரை**

விரிவாக எழுதும் உரை (இறைய.141,, உரை)

**அகவல்**
1. எடுத்தலோசை (பிங்.)
2. அகவற்பாவுக்குரிய ஓசை (காரிகை. செய். 1)
3. ஆசிரியப்பா (தொல். பொ. 393)

**அகவல்சீர்**
அகவலுரிச்சீர்: நேர்நேர் (- -), நிரைநேர் (00-), நிரை நிரை (0000), நேர்நிரை (-00). (காரிகை. உறுப். 10)

**அகவல் விருத்தம்**
ஆசிரிய விருத்தம் (இலக். வி. 845)

**அகவலுரிச்சீர்**
இரண்டு அசைச்சீர்; ஆசிரியவுரிச்சீர். (நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை) (காரிகை. உறுப். 10)

**அகவலோசை**
ஆசிரியப்பாவிற்குரிய ஓசை (இலக். வி. 732, உரை)

**அகவற்சுரிதகம்**
அகவலாகிய சுரிதகம் (இலக். வி. 738, உரை)

**அகவற்பா**
ஆசிரியப்பா, நான்கு வகைப் பாக்களுள் ஒன்று

**அகவல் தாழிசை**
ஆசிரியத்தாழிசை ஆசிரியப்பாவினத்துள் ஒன்று. (இலக். வி. 735, உரை)

**அகவல்துறை**
ஆசிரியத்துறை (யாப். வி. 76)

**அகவற்றுள்ளல்**
வெண்டளையும் கலித்தளையும் கலந்து வரும் துள்ளலோசை (காரிகை. செய். 1, உரை)

**அகவற்றூங்கல்**
ஒன்றாத வஞ்சித்தளையான் வருந் தூங்கலோசை (காரிகை. செய். 1, உரை)

**அகவன் மகள்**
பாணமகள் (குறுந். 298)

**அகன்றிசைப்பு**
யாப்பு முறையினின்று அகன்று காட்டும் குற்றம் (யாப். வி. 95, பக். 403)

**அகனைந்திணை**
குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணை (தொல். பொ. 54)

**அகைப்பு வண்ணம்**
ஒருவழி நெடிலும் ஒருவழிக் குறிலும் பயின்று விட்டு விட்டுச் செல்லும் சந்தம் (தொல். பொ. 541)

**அங்கதச்செய்யுள்**
அங்கதப்பாட்டு, வசைக்கவி (கைக்கிளை பரிபாட்டங்கதச் செய்யுளொடு) (தொல். பொ. 430)

**அங்கதம்**
வசை (தொல். பொ. 436, உரை)

**அங்கமாலை**
பிரபந்தவகை (இலக். வி. 835), எழுப்பு மாலை (தேவா. 295. 7)

**அச்சோப் பருவம்**
தாய் குழந்தையை அணைக்க அழைக்கும் பருவம் (திவ். பெரியாழ். 1, 9, பதி.)

**அசதிக்கிளவி**
பரிகாசச் சொல். அசதிக்கிளவி நயவா மிழற்றி (பெருங். இலாவண. 17, 191)

**அசம்பவாலங்காரம்**
கூடாமையணி (அணியி. 30)

**அசை**
செய்யுளுறுப்பு வகை (நேரசை [-], நிரையசை [- -]).

**அசைச்சீர்**
ஓரசைச்சீர் (அசைச்சீர்க் குதாரண நாள் மலரே) (காரிகை. உறுப். 7)

**அசைச்சொல்**
சார்ந்து வரும் இடைச்சொல். யா, கா, பிற.

**அசைநிலை**
அசைச்சொல்

**அசைநிலை யளபெடை**
அசை கோடற் பொருட்டுக் கொண்ட அளபெடை (பி.வி. 5, உரை)

**அசையடி**
1. அம்போதரங்கம் (இலக். வி. 738)
2. அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா உறுப்பினுள் ஒன்று (இலக். வி. 738, உரை)
ஒத்தாழிசைக் கலிப்பா வகை (தொல். பொ. 463)

**அசையந்தாதி**
செய்யுளின் ஓரடியின் ஈற்றசை மற்றைய அடிக்கு முதலசை யாக வரும் தொடை (குன்றச் சாரற் குதித்தன கோண்மா மாவென, மதர்த்தன கொடிச்சி வான்கண்) (தொல். பொ. 411, உரை)

**அட்டகணம்**
நிலக்கணம், நீர்க்கணம், சந்திரகணம், இந்திரகணம் அல்லது இயமான கணம், சூரியகணம், தீக்கணம், வாயு கணம், ஆகாசகணம் என எண்வகையுடையனவும் நல்லவுந் தீயவுமாய் வருவனவுமாக நூன்முதற்சீர்கள்

**அட்டநாக பந்தம்**
சித்திரகவி வகை

**அட்டையாடல்**
உடல் துண்டிக்கப்பட்ட விடத்தும் அட்டைபோல வீரனுடல் வீரச்செயல் காட்டியாடுகை (தொல்.பொ. 71, உரை)

**அட்ட வெற்றி**
வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை என எண்வகைப் போர்கள் (யாழ். அக.)

**அடக்கியல்**
சுரிதம். காண்க : அடக்கியல் வாரம் (வீரசோ. யாப். 11, உரை) சுரிதகம் (தொல். பொ. 456)

**அடக்கியல் வாரம்**
சுரிதகம். (தொல். பொ. 456)

1. கலிப்பா வகையின் இறுதி உறுப்பு (காரிகை. செய். 12, உரை)
2. கூத்தில் சொல் நிகழும் வகையில் வரும் எட்டடிப் பாட்டு.

**அடங்கன் முறை**
தேவாரம்

**அடி**
சீர்களால் ஆகி, செய்யுட்கு உறுப்பாய் வருவது; குறளடி, சிந்தடி, அளவடி அல்லது நேரடி, நெடிலடி, கழிநெடிலடி. அடுத்துநடத்தலின் அடியே (இலக்.வி. 711)

**அடிமடக்கு**
பொருள் வேறுபட்டேனும் வேறுபடாமலேனும் செய்யுளின் அடி மீண்டு மீண்டு வருவதாகிய சொல்லணி வகை (பெருந்தொ. 1793)

**அடிமயக்கு**

பொருளில் திரிபின்றி அடிகளை முன் பின்னாக மாற்றும் படி அமைந்த பாடல் (00)

**அடிமறி**

அடிமறிமாற்று. அடிகளை எடுத்துப் பொருளுக்கு ஏற்ற படிக் கூட்டுவதும், எந்த அடியை எங்குக் கூட்டினும் பொருளும் ஓசையும் ஒப்ப வருவதுமாகிய பொருள்கோள் (நன். 419)

**அடிமறி மண்டிலம்**

அகவற்பா வகையுள் ஒன்று (காரிகை. செய். 8)

**அடிமறி மாற்று**

காண்க : அடிமறி

**அடிமுரண் தொடை**

செய்யுளின் முதலில் வரும் சொல்லாவது பொருளாவது அடுத்த அடியின் சொல்லோடும் பொருளோடும் மாறுபடத் தொடுப்பது (காரிகை. உறுப். 18, உரை)

**அடிமோனைத் தொடை**

செய்யுளில் அடிகள்தோறும் முதலில் மோனை எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (காரிகை. உறுப். 18, உரை)

**அடியந்தாதி**

ஒரு செய்யுளின் ஈற்றடி அடுத்த செய்யுளின் முதலடியாகத் தொடுக்கப்படுவது (யாப். வி. 52, பக். 186)

**அடியளபெடைத் தொடை**

செய்யுளின் அடிகள்தோறும் முதற்கண் அளபெடைவரத் தொடுப்பது (காரிகை. உறுப். 18, உரை)

**அடியா கெதுகை**

அடியெதுகைத் தொடை. செய்யுளின் அடிதோறும் முதற்கண் இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (காரிகை. உறுப். 18, உரை)

**அடியியைபுத் தொடை**

செய்யுளின் அடிதோறும் இறுதிச்சீர் ஒன்றிவரத் தொடுப் பது (காரிகை. உறுப். 18, உரை)

**அடியெதுகைத் தொடை**

செய்யுளின் அடிதோறும் முதற்கண் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (காரிகை. உறுப். 18, உரை)

**அடியெழுத்து**
பன்னீருயிரும் பதினெட்டு மெய்யுமாகிய முதலெழுத்து (பேரகத். 8, உரை)

**அடிவரவு**
பாட்டின் முதற்குறிப்பு

**அடிவரையறை**
பாட்டின் முதற்குறிப்பு வரிசை (மீனாட். சரித். 1, பக். 10)

**அடுக்கியல்**
அராகம். கலிப்பா வகைகளின் உறுப்புக்களில் ஒன்று (தொல். பொ. 464)

**அடுக்குத்தொடர்**
சொல்லைப் பிரித்தால் பொருள் தருவது அடுக்குத் தொடர். பல பல, பாம்பு பாம்பு (நன். 152, உரை)

**அடுத்துவரலுவமை**
உவமைக்கு உவமை

**அடை**
கலிப்பாவின் உறுப்பாகிய தனிச்சொல்

**அடைகொளி**
விசேடியம்

**அடைசொல்**
விகுதி (தக்கயாகப். 463)

**அடைநிலை**
கலிப்பாவின் உறுப்பாகிய தனிச்சொல் (தொல். பொ. 447)

**அடையடுத்த ஆகுபெயர்**
ஆகுபெயர் வகை (நன். 290, உரை)

**அணி**
அணியிலக்கணம், செய்யுளணி, ஓர் உவம உருபு (சீவக. 2562, உரை)

**அணியியல்**
1. அணியிலக்கணம்
2. ஓர் அலங்கார நூல்

**அணியெண்**
தண்டியலங்காரத்தில் அணியைச் சுட்டும் 35 என்னும் எண்

**அணைசொல்**
துணைச்சொல்

**அதிக்கண்டம்**
செய்யுட்சீர்

**அதிகார சூத்திரம்**
தான் ஒன்றனையும் விதிக்காது பல சூத்திரங்கட்கு முன் படிக்கப்பட்டு அவற்றுக்குப் பொருள் கொள்ளும்போது தானும் அவற்றுடன் சேர்ந்து பொருள் கொள்ளப்படும் சூத்திரம்

**அதிகாரப் புறனடை**
அதிகாரவிறுதியிற் கூறும் புறனடைச் சூத்திரம் (தொல். சொல். 45, சேனா. பக். 54)

**அதிகாரமுறை**
நூற்பிரிவின் முறை வைப்பு (தொல். பொ. 666)

**அதிகாலங்காரம்**
பெருமையணி (அணியி. 41)

**அதிசயவுவமை**
மிசையுவமை (வீரசோ. அலங். 14, உரை)

**அதிசயோக்தி**
உயர்வுநவிற்சியணி (அணியி. 13)

**அந்தரக்கொட்டு**
கூத்து வகை (சிலப். 3,147)

**அந்தரகணம்**
கருவிளங்காய், செய்யுட்கணம் (திவா.)

**அந்தாதி**
அந்தாதித் தொடை (காரிகை. உறுப்.17), ஒரு பிரபந்தம்
1. முதலும் முடிவும்
2. தலைமுதல் பாதம் வரையுள்ள உறுப்பு. உருக்கோதை மேனிக்கந்தாதியைத் தீட்டில் (குலோத். கோ. 131)

**அந்தாதி யுவமை**
அந்தத்துச் சொல்லையே மடக்கி ஆதியாகக் கொண்டு உவமைபெறக் கூறும் அணி. (மாறனலங். 101, உரை)

**அந்தாதித் தொடை**
அடிதோறும் இறுதிக்கணின்ற சீரும் அசையும் எழுத்தும் மற்றையடிக்கு ஆதியாகத் தொடுப்பது (இலக். வி. 725)

**அந்திய தீபம்**
கடைநிலை விளக்கு என்னும் அணி

**அபவாத சூத்திரம்**

ஒரு சூத்திரத்தால் விதிக்கப்பட்டதற்கு முற்றும் மாறுபாடாக விதிக்கும் வேறு சூத்திரம்

**அபாதானம்**

ஐந்தாம் வேற்றுமைப் பொருள் (தொல். சொல். குறிப்பு, பக். 115)

**அபூதவுவமை**

இல்பொருளுவமை (தண்டி. 30)

**அம்புலிப் பருவம்**

பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள் பத்துள் ஏழாம் பருவம்

**அம்போதரங்கம்**

1. அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா உறுப்பினுள் ஒன்று (இலக். வி. 738, உரை)
2. ஒத்தாழிசைக் கலிப்பா வகை (தொல். பொ. 463)

**அம்போதரங்க ஒத்தாழிசை**

அம்போதரங்கம்

**அம்போதரங்க வொருபோகு**

ஒத்தாழிசைக் கலிப்பா வகையுளொன்று. (பாப்பா. 105)

**அம்மனைப் பாட்டு**

அம்மானை யாட்டத்திற் பாடும் பாட்டு (தொல். பொ. 461, உரை)

**அம்மனை மடக்கு**

கலித்தாழிசையால் வினா விடையாக மகளிர் இருவர் இருபொருள்படக் கூறுவதாக இயற்றும் பாட்டு (மாறன. 267)

**அம்மானை**

1. ஒருவகைப் பாடல் (திருவாச. 8)
2. கலம்பக உறுப்பு (இலக். வி. 812)

**அம்மானைப் பருவம்**

பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவங்களுள் ஒன்று

**அம்மானை வரி**

மகளிர் அம்மானையாடும்போது பாடும் பாட்டு (சிலப். 28)

**அம்மை**

அழகு. நூல் வனப்புளொன்று (தொ. பொ. 547)
அமைதி. அம்மை யஞ்சொலார் (சீவக. 3131)

**அமுதவெழுத்து**
காவியத்தின் முதற்செய்யுள் முதன்மொழியிலும் தசாங்கத் தயலிலும் வருதற்குரிய சுபவெழுத்து (இலக். வி. 779, 781)

**அயன்மணமுரைத்தல்**
தலைவற்குத் தோழி படைத்து மொழிந்து பிறரும் மணம் வேண்டிக் காப்பணியக் கருதுவரென்று கூறும் அகத்துறை (களவியற். 113)

**அயிர்த்துரைத்தல்**
தலைமகளுடைய கண் சிவப்பு முதலியவற்றைத் தோழி கண்டு ஐயங்கொள்வதைக் கூறும் அகத்துறை (களவியற். 50)

**அர்த்தாந்திர நியாசம்**
வேற்றுப்பொருள் வைப்பணி (அணியி. 61)

**அர்த்தாலங்காரம்**
பொருளணி.

**அரசமுல்லை**
அரசன் தன்மை கூறும் புறத்துறை (பு.வெ. 8, 17)

**அரசர் பா**
காண்க : ஆசிரியப்பா. (இலக். வி. 873)

**அரச வாகை**
வேந்தனியல்பு கூறும் புறத்துறை (பு.வெ. 8, 3)

**அரசன் விருத்தம்**
பிரபந்தவகை (தொன். வி. 283, உரை)

**அரவுச் சக்கரம்**
சித்திரகவி வகை (யாப், வி. 497)

**அராகம்**
கலிப்பா வகைகளின் உறுப்புக்களுள் ஒன்று (தொல். பொ. 464)

**அரிமா நோக்கம்**
சூத்திர நிலையுள் ஒன்று

**அரியளாமெனல்**
தலைவியின் மனநிலையறிதல் அருமையெனத் தோழி தலைமகற்குக் கூறும் அகப்பொருட்டுறை (களவியற். 58)

**அருங்கலை விநோதன்**
நூலாராய்ச்சியே விளையாட்டாக உடையவன் (அருங் கலை வினோத னமரா பரணன் [நன். சிறப்புப்.])

**அருட்பா**
தெய்வானுக் கிரகத்தாற் பாடப்பட்ட செய்யுள்

**அருத்தாபத்தி**
ஓரளவை (குறள். 236, உரை)

**அரும்பதவுரை**
அரிய சொல்லுக்கு உரை

**அருளொடு நீங்கல்**
உலகின் துயரத்தைப் பார்த்துப் பற்று நீங்கும் புறத்துறை (பு. வெ. 8, 34)

**அல்பொருள்**
பாவம். அறனை நினைப்பானை யல்பொரு ளஞ்சும் (திரிகடு. 72) உபமானம் (அணியி. 3)

**அல்லகுறி**
தலைமகனாலன்றிப் பிறிதொன்றினால் நிகழுங்குறி (நம்பியகப். 159)

**அல்லகுறிப்படுதல்**
இரவுக் குறியிடத்துக் குறியல்லாத குறியிலே மயங்குதல் (தொல். பொ.134, உரை)

**அல்வழிப்புணர்ச்சி**
(நன். 151) வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத் தொகை, உம்மைத்தொகை, அன்மொழித் தொகை, எழுவாய்த்தொடர், விளித்தொடர், பெயரெச்சத்தொடர், வினையெச்சத்தொடர், தெரிநிலை வினைமுற்றுத் தொடர், குறிப்புவினை முற்றுத்தொடர், இடைச் சொற்றொடர், உரிச் சொற்றொடர், அடுக்குத் தொடர் (நன். 152, உரை)

**அலகிடுதல்**
செய்யுளசை கணக்கிடுதல் (இலக். வி. 752)

**அலகு**
இசையில் ஓர் அளவு

**அலங்கார பஞ்சகம்**
வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம், சந்த விருத்தம் ஆகிய இவ்வைந்தும் அந்தாதியாக வரப்பாடும் பிரபந்தம் (இலக். வி. 844)

**அலங்கிருக்கை வெண்பா**

மிறைக்கவி வகை (யாப்பு. வி. 510)

**அலர்க்குறி**

குறியிடை வந்த தலைவன் தலைவியைக் காணாத நிலையில், தான் வந்ததை அவளறிய விரும்பிப் பூவொன்றை அடையாளமாக வைத்துச் சென்றது குறிக்கும் அகத்துறை (தனிப்பா. 413, உரை)

**அலியெழுத்து**

1. ஆய்தம் (வெண்பாப். முதன்மொழி, 6, உரை)
2. மெய்யெழுத்து (பிங்.)

**அறுபொழுது**

நாட்குரிய மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு என்ற அறுவகைக் காலம்

**அவநுதி**

ஒன்றன் தன்மையை மறுத்து வேறொன்றன் தன்மையை ஏற்றிக் கூறும் அணி (தண்டி. 73)

**அவலச்சுவை**

சோகரசம் (சிலப். 3, 13, உரை)

**அவலம்**

1. துன்பம். செய்வினை முற்றாம லான்றோ ரவலம் படுதலு முண்டு (கலித். 19)
2. தரித்திரம். கெடுகநின் றவலம் (பெரும்பாண். 38)
3. அழுகை. அவலங்கொண் டழிவலோ (சிலப். 18, 41)
4. கவலை. நெஞ்சத் தவல மிலர் (குறள். 1072)
5. அவலச்சுவை (தொல். பொ. 251, உரை)

**அவாய் நிலை**

ஒரு பதம் தன்னொடு பொருந்திப் பொருள் முடிதற்குரிய மற்றொரு பதத்தை வேண்டி நிற்கும் நிலை (குறள். 15, உரை)

**அவிநயக்கூத்து**

பாடற் பொருளைக் கையாற் காட்டி ஆடும் கூத்து (சிலப் 3,12, உரை)

**அவையடக்கம்**

அவையோர்க்கு வழிபடு கிளவி கூறுகை (சிலப். 4, உரை)

**அவையல் கிளவி**

சபையில் உரைக்கத்தகாத சொல் (தொல். சொல். 442)

**அளபெடை**
உயிரளபெடை, ஒற்றளபெடை (நன். 61)

**அளபெடை வண்ணம்**
அளபெடை பயின்று வரும் சந்தம் (தொல். பொ. 531)

**அளவடி**
நாற்சீரடி (2) 10 முதல் 14 எழுத்துப்பெறும் நாற்சீரடி

**அளவடிச் சந்தம்**
நான்கு முதல் இருபத்தாறு எழுத்துவரை வந்து அளவொவ்வாத அடிகளுடைய செய்யுள் வகை (யாப். வி. 95, பக் 447)

**அளவடித் தாண்டகம்**
இருபத்துஎழு எழுத்து முதலாக வந்து அளவொவ்வாத அடிளுடைய செய்யுள்வகை. (யாப். வி. பக். 447)

**அளவியல்**
பாவின் அடிவரையறை (தொல். பொ. 313)

**அவியற் சந்தம்**
நான்கு முதல் இருபத்தாறு எழுத்து வரை அளவொத்து வரும் அடிகளுடைய செய்யுள்வகை (யாப். வி. 95, பக். 447)

**அளவியற் றாண்டகம்**
இருபத்தேழு எழுத்து முதலாக வரும் அளவொத்த அடிகளுடைய செய்யுள் வகை (யாப். வி. 95, பக். 447)

**அளவெண்**
நாற்சீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க உறுப்புவகை (காரிகை. செய். 10, உரை)

**அளவையாகுபெயர்**
எண்ணல் முதலிய அளவைப் பெயர் பொருளுக்கு ஆகி வருவது (நன். 290, உரை)

**அளைமறிபாப்பு**
பாட்டின் சுற்றினின்ற சொல் இடையிலும் முதலிலும் சென்று பொருள் கொள்ளப்படும் முறை (நன். 417)

**அறக்களவழி**
வேளாண் தொழிலைக் கூறும் புறத்துறை (மாறன. 120 உரை)

**அறத்தொடு நிற்றல்**
களவினைத் தமர்க்கு முறையே அறிவுறுத்துகை (தொல். பொ. 206)

**அறப்பாடல்**
கேடு விளைவிக்கும் சொற்பயிலும் பாட்டு

**அறம்**
1. மறப்புறம், தருமம் (பிங்.)
2. புண்ணியம். அறம்பாவ மென்னுமருங்கயிற்றாற் கட்டி (திருவாச. 1, 52)
3. தகுதியானது (இறை. 29, பக். 136)

**அறம்பாடுதல்**
தீச்சொற்பட்டுத் தீப்பயனுண்டாகப் பாடுதல்

**அறியா வினா**
தெரியாத தொன்றைத் தெரிதற்குக் கேட்கும் கேள்வி (நன். 385, உரை)

**அறி வினா**
அறிந்து கேட்கும் கேள்வி (நன். 385, உரை)

**அறுத்திசைப்பு**
வேற்றிசை கலந்து வரும் ஒருவகை யாப்பு வழு. (யாப். வி. 95, பக். 403)

**அறுமுறை வாழ்த்து**
முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை, முடியுடை வேந்தர், உலகு என்ற ஆறனையும் பற்றிக் கூறும் வாழ்த்து (தொல். பொ. 81, உரை)

**அன்புடைக்காமம்**
ஐந்திணை பற்றி நிகழும் காமம் (நம்பியகப். அகத். 4)

**அன்மொழித் தொகை**
அன்மொழித் தொகை (நன். 369) ஐந்தொகை மொழி மேற் பிறதொக்கு வருந்தொகை

**அன்வயம்**
1. அன்னுவயம் சம்பந்தம். இவையன்னுவய மின்றா யிருந்தும் (மணி. 27, 30)
2. கொண்டுகூட்டு (வேதா. சு. 8)

**அன்வயித்தல்**
1. செய்யுளிலும், உரைநடையிலும் ஒரு மொழியை மற்றொன்றோடு பொருட் பொருத்தமுறப் பொருத்துதல்
2. ஒரு பதம் மற்றொன்றுடன் இயைதல்
3. பின் தொடர்தல் (கம்ப. இரணிய. 136)

**அன்னியோன்ய யாலங்காரம்**
ஒன்றற்கொன்று உதவியணி (அணியி. 43)

**அன்னுலயம் பண்ணுதல்**
பொருத்தமுறப் பதில்களைக் கொண்டு கூட்டுதல்.

**அன்னுவயலங்காரம்**
இயைபின்மையணி (அணிச்.)

**அனுகுணாலங்காரம்**
தன்குணமிகையணி (அணியி. 78)

**அனுஞ்ஞாலங்காரம்**
வேண்டலணி (அணியி. 71)

**அனுப்பிராசம்**
வழியெதுகை மண்டலம் பண்டுண்ட திண்டுடர் வரகுணன் (இலக். வி. 748, உரை)

**அனுபந்தம்**
1. நூலின்பின் சேர்க்கப்படும் துணைக்குறிப்புக்கள்
2. உறவின் முறை

**அனுபல்லவி**
கீர்த்தனத்தில் இரண்டாம் உறுப்பு

**அனுமோனை**
இனவெழுத்தால் வரும் மோனைத் தொடை (தொல். பொ. 402, உரை)

**அனுவெழுத்து**
மோனையெழுத்து

## ஆ

**ஆக்கக்கிளவி**
ஆக்கம் உணர்த்தும் சொல் (தொல். சொல். 22)

**ஆக்கப்பெயர்**
அ) இடுகுறியாக்கம். ஆ) காரணவாக்கம் (நன். 275, உரை)

**ஆகாயச் சக்கரம்**
சித்திரகவி வகை

**ஆகாயச் சொல்**
இல்லாத னொருவனை முன்னிலைப்படுத்தித் தானே கூறும் பேச்சு (சிலப், 3, 13, உரை)

**ஆகுபெயர்**

ஒன்றன் பெயராயிருந்தும் அதனோடு தொடர்புடைய மற்றொன்றற்குத் தொன்றுதொட்டு ஆகி வரும் பெயர் (நன். 290)

**ஆகோள்**

போரில் பகைவர் பசுக்களைக் கவர்ந்து கொள்ளுகை (ஊர் கொலை யாகோள் [தொல். பொ. 58])

**ஆசிடு-தல்**

1. நேரிசை வெண்பா முதற்குறளின் இறுதிச் சீர்க்கும் தனிச்சொற்குமிடையே விட்டிசைப்பின் ஓரசை யேனும், ஈரசையேனும் சேர்த்தல் (காரிகை. செய். 3, உரை)
2. எதுகையில் ய, ர, ல, ழ என்ற நான்கிலொன்றை ஆசாக இடுதல். (இலக். வி. 748)

**ஆசிடையெதுகை**

காண்க : ஆசெதுகை. ய், ர், ல், ழ் என்ற மெய்யெழுத்துக் களுளொன்று அடியெதுகை யிடையே ஆசாக வருவது (காரிகை. ஒழிபி. 6, உரை)

**ஆசிமொழி**

வாழ்த்தணி (வீரசோ. அலங். 33, உரை)

**ஆசிடை நேரிசை வெண்பா**

ஆசிடை வெண்பா

**ஆசிடை வெண்பா**

முதற் குறளின் இறுதிச்சீர்க்கும் தனிச்சொற்கும் இடையில் கூட்டப்பட்டு அசையுடன் வரும் நேரிசை வெண்பா.

**ஆசிரியச் சீர்**

காண்க : அகவலுரிச்சீர், ஈரசைச்சீர். நேர்நேர் (- -) நிரைநேர் - நிரை நிரை -- நேர்நிரை - (காரிகை உறுப். 10)

**ஆசிரியச் சுரிதகம்**

அகவலாசிரியச் சுரிதகம் (இலக். வி. 738, உரை)

**ஆசிரியத் தளை**

மாமுன் நேரும் விளமுன் நிரையும் வரத் தொடுக்கும் செய்யுட்டளை (காரிகை. உறுப். 10, உரை)

**ஆசிரியச் சுரிதகம்**

அகவலாசிரியச் சுரிதகம் (இலக். வி. 738, உரை)

**ஆசிரியத்தளை**
மாமுன் நேரும் விள்முன் நிரையும் வரத் தொடுக்கும் செய்யுட்டளை (காரிகை. உறுப். 10, உரை)

**ஆசிரியத்தாழிசை**
ஆசிரியப்பாவினத்துள் ஒன்று (இலக். வி. 735, உரை)

**ஆசிரியத் துறை**
காண்க : அகவல்துறை (காரிகை. செய். 9, உரை)

**ஆசிரியப்பா**
நால்வகைப் பாவிலொன்று (தொல். பொ. 419)

**ஆசிரியம்**
காண்க : ஆசிரியப்பா (தொல். பொ. 419) நால்வகைப் பாவுள் ஒன்று (இலக். வி. 845)

**ஆசிரிய விருத்தம்**
காண்க : அகவல் விருத்தம் (காரிகை. செ. 9, உரை)

**ஆசிரியவுரிச்சீர்**
காண்க : அகவலுரிச்சீர் (இலக். வி. 716, உரை)

**ஆசு**
நேரிசை வெண்பாவின் முதற்குறளினிறுதிச் சீர்க்கும் தனிச் சொற்குமிடையிற் கூட்டப்படும் அசை (காரிகை செய். 3)

**ஆசுகவி**
1. கொடுத்த பொருளை அடுத்த பொழுதிற் பாடும் பாட்டு (வெண்பாப். செய். 2, உரை)
2. ஆசுகவி பாடும் புலவன் (வெண்பாப். செய். 2 உரை)

**ஆசெதுகை**
ய், ர், ல், ழ், என்ற மெய்யெழுத்துக்களுளொன்று அடியெதுகையிடையே ஆசாகி வருவது (காரிகை. ஒழிபி. 6, உரை)

**ஆஞ்சிக் காஞ்சி**
1. போர்க்களத்தில் இறந்த கணவனது வேல் வடுவைக் கண்டு மனைவி அஞ்சிய புறத்துறை (தொல். பொ. 79)
2. போர்க்களத் திறந்த கணவனுடன் தீயில் மூழ்கும் மனைவியின் பெருமை கூறும் புறத்துறை (புறப். வெ. 4. 22)

**ஆடு உ-முன்னிலை**
ஆண்பாலாரை முன்னிலைப்படுத்திக் கூறுகை

**ஆண்பாலெழுத்து**
அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து குற்றெழுத்துக்கள் (இலக். வி. 773, உரை)

**ஆண்பாற் பிள்ளைத்தமிழ்**
காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் ஆகிய பருவங்களைப் பற்றிப் பாடும் பிள்ளைத்தமிழ் (இலக். வி. 806)

**ஆண்மைப் பொதுப்பெயர்**
உயர்திணை ஆண்பாலையும் அஃறிணை ஆண்பாலையும் ஏற்கும் பொதுப்பெயர் (சாத்தன் இவன், சாத்தன் இவ் வெருது [நன். 284, உரை])

**ஆணெழுத்து**
உயிர் எழுத்து (பிங்.)

**ஆணொழி மிகுசொல்**
இருதிணையிலும் பெயர் அல்லது தொழிலினாற் பெண் பாலாகப் பால்பிரியுஞ் சொல் (தொல். சொல். 50, இளம்.)

**ஆதி மடக்கு**
அடியின் முதலில் சொல் மடக்கி வருவது

**ஆதோரண மஞ்சரி**
எதிர்த்த மதயானைகளை அழித்தும் அடக்கியும் பொருத வீரனது சிறப்பை வஞ்சிப் பாவாற்றொடுத்துப் பாடும் பிரபந்தம் (தொன். வி. 283, உரை)

**ஆய்தக் குறுக்கம்**
மாத்திரை குறுகிய ஆய்தம். சார்பெழுத்துக்கள் பத்துள் ஒன்று (நன். 97)

**ஆய்தப்புள்ளி**
ஆய்தவெழுத்து ஃ (நன். 90)

**ஆர்வமொழி**
உள்ளத்து நிகழும் அன்பை மிகுதியாக வெளிப்படுத்தும். ஓரலங்காரம் (தண்டி. 67)

**ஆரிடம்**
1. ஆவும் ஆனேறும் பரிசமாகப் பெற்றுக் கொண்டு கன்னியைத் தீமுன்னர்க் கொடுக்கும் மணம் (நம்பியகப் 117, உரை)

2. ஆனையும் ஆனேற்றையும் அவன் களித்து அவற்றிடையே வதுாவரரை நிறுவி நீர் பெய்து கொடுக்கும் மணம் (தொல். பொ. 92, உரை)
3. முனிவர் அருளிய நூல் (திவா.)

**ஆரியக்கூத்து**
கழைக்கூத்து ஆரியக்கூத் தா டி னா லும் காரியத்திற் கண ணாயிரு

**ஆவிருத்தியலங்காரம்**
பின்வருநிலையணி

**ஆற்றுப்படுத்தல்**
1. வழிச் செலுத்துதல். (விறலியை யாற்றுப் படுத்தன்று பு. வெ. 9, 31)
2. போக்குதல் (துணையணைப்பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்கு சிலப். 27: 209)

**ஆற்றுப்படை**
பரிசில் பெற்றானொருவன் அதுபெறக் கருதியவனை ஒரு தலைவனிடத்துச் செலுத்துவதாகப் பாடும் பிரபந்தம் (பன்னிருபா. 318, 319)

**ஆற்றொழுக்கு**
1. ஆற்றின் நீரோட்டம்
2. சூத்திரநிலை நான்கனுள் ஒன்று (நன். 19)

**ஆறலைத்தல்**
வழிபறித்தல் (வன்கண்ண ராட்டிவிட் டாறலைக்கு மத்தம் [ஐங். ஐம். 34])

**ஆனந்தப்பையுள்**
1. கணவனிறப்ப மனைவி மெலிந்து வருந்தும் புறத்துறை
2. பிரிந்த தலைவன் தலைவியாது துயர் மிகுதியைப் பாட்டுடைத் தலைவனது நாட்டுடனும் ஊருடனும் சார்த்திச் சொல்வதாகிய நூற்குற்றம் (யாப். வி. 95, பக். 523)

**ஆனந்தம்**
பாக்குற்றங்களுள் ஒருவகை. (இலக். வி. 887) எழுத்தானந்தம், சொல்லானந்தம், பொருளானந்தம், யாப்பானந்தம், தூக்கானந்தம், தொடையானந்தம்

2. பேரின்பம் (ஆனந்தமே யாறு வருளியும் (திருவாச 2,106)
3. சாக்காடு

**ஆனந்தரியம்**
இவை ஆராய்ந்தபின் இது கேட்கற்பாற்றென்னும் யாப்பு (நன். சிறப்பு. விருத்தம்)

**ஆனந்தவுவமை**
மிகவும் இழிந்த பொருளோடு ஒப்பிடுதலாகிய உவமைக் குற்றம் (புறநா. 60, உரை)

## இ

**இகழ்ச்சியணி**
ஒன்றன் குணங்குற்றங்களால் மற்றொன்றுக்கு அவை உண்டாகாதிருப்பதைக் கூறும் அலங்காரம் (அணியி. 70)

**இகழாவிகழ்ச்சி**
புகல்வது போலப் பழித்துக் கூறும் அணி

**இங்கித கவி**
1. இனிமைதருங் கவி பாடுவோன்
2. பாட்டுடைத்தலைவன் கருத்தை விளக்கும் பாடல்

**இசை**
காண்க : சீர் (யாப். வி. 22)

**இசைத் தமிழ்**
இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் ஆகிய முத்தமிழுள் ஒன்று

**இசை நிறை**
செய்யுளில் இசை நிறைத்தற்கு வரும் சொல் (நன். 395)

**இசைப்பா/இசையளவு பா**
இசையளவு பா; இசையோடு சேர்ந்த பாக்களிலொரு வகை (சிலப். 6 35, உரை)

**இசைப்பாட்டு**
சாகித்தியம் (சிலப். பதி. 60, உரை)

**இசையளவு பா**
இசையோடு சேர்ந்த பாக்களில் ஒருவகை (சிலப். 6, 35)

**இசையானந்தம்**
அவலமுற்று இறந்தோர்க்குரிய இசைகள் தலைவன் பாட்டிற்கு இசையாகி வரப் புணர்க்கும் நூற்குற்றம் (யாப். வி, பக். 524)

**இசையெச்சம்**
வாக்கியத்திற் சொற்கள் எஞ்சிய பொருளுணர்த்தி வருவது (தொல். சொல். 440, சேனா.)

**இட்டுப்பிரிதல்**
அணிமையில் தலைவன் பிரிதல் (கலித் 121, உரை)

**இட்டுப் பிரிவு**
சமீபமான இடத்தில் தலைவன் பிரியும் பிரிவு (தொல். பொ. 111)

**இடக்கர்**
சொல்லத்தகாத சொல்

**இடக்கரடக்கல்**
தகுதி வழக்குள் ஒன்று (நன். 267)

**இடத்துய்த்தகறல்**
தலைமகளை இடத்துய்த்த தோழி தலைமகன் எதிர்ப்படுவனென்று கருதித் தானீங்குதலைக் கூறும் அகத்துறை (களவியற். 73)

**இடத்துய்த்தல்**
தோழி தலைமகற்கு இடங்காட்டி மீண்டுத் தலைமகளுழைச் சென்று அவளைத் தலைமகன் நின்றவிடத்துச் செலவிடுக்கும் அகத்துறை (களவியற். 72)

**இடமயக்கம்**
1. ஒன்றற்குரிய உரிப்பொருளைப் பிறிதோரிடத்திற் குரியதாகக் கூறும் இடமலைவு
2. ஓரிடத்திற்குரியதை மற்றோரிடத்தாகக் கூறும் இலக்கண வழு நன். (374, மயிலை)

**இடந்தலைப்பாடு**
இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த இடத்தில் இரண்டாம் முறை தலைவனும் தலைவியும் கூடுகை (தொல். பொ. 498, உரை)

**இடம்**
1. மூவகையிடம் : தன்மை, முன்னிலை, படர்க்கை (நன். 259)
2. ஏழனுருபு (நன். 302)

**இடமலைவமைதி**
இடமலைவாகிய வழுவை அமைத்துக் கொள்ளுகை (தண்டி. 122, உரை)

**இடமலைவு**
ஓரிடத்துப் பொருளை மற்றோரிடத்துள்ளதாகச் சொல்லும் வழு (தண்டி. 116)

**இடவழு**
தன்மை முதலிய மூவகையிடங்களைப் பிறழக் கூறுகை (நன். 375)

**இடவாகுபெயர்**
ஓர் இடத்தின் பெயர் அவ்விடத்திலுள்ள பொருளுக்கு ஆகி வருவது (நன். 290, உரை)

**இடுகுறிப்பெயர்**
காரணம் பற்றாது வழங்கி வரும் பெயர் (நன். 62)

**இடுகுறி மரபு**
இடுகுறியாகத் தொன்றுதொட்டு வரும் பெயர் (நன். 275, உரை)

**இடுகுறியாக்கம்**
இடுகுறியாக ஒருவன் கொடுத்த அல்லது ஆக்கிக் கொண்ட பெயர் (நன். 275, உரை)

**இடுபெயர்**
இடுகுறிப் பெயர் (தொல். சொல். 174, சேனா.)

**இடைக்கிடப்பு**
இடைப்பிறவரல் (சீவக. 2697, உரை)

**இடைக்குறை**
செய்யுள் விகாரத்தொன்று (நன். 186, உரை)

**இடைச்செருகல்**
ஒருவர் செய்யுளில் பிறர் வாக்கைக் கலக்கை

**இடைச்சொல்**
பெயர் வினைகளோடு சார்ந்து வழங்குஞ் சொல்

**இடைநிலை[1]**
1. மத்தியத்தில் நிற்கை; இடைநிலைத் தீவகம்.
2. பெயர் வினைகளின் பகுதி விகுதிகளுக்கு இடையில் நிற்கும் ஓர் உறுப்பு (நன். 141)

**இடைநிலை[2]**
எச்ச முதலியன கொண்டு முடியும் சொற்களினிடையில் ஏற்ற பிறச்சொல் வருகை-'எச்சொல் லாயினு மிடைநிலை வரையார்' (தொல். சொல். 237)

**இடைநிலைத் தீவகம்**
தீபக அணிவகை (தண்டி. 38)

**இடைநிலைப் பாட்டு**
கலிப்பாவின் ஓர் உறுப்பு (தொல். பொ. 444)

**இடைநிலை மெய்ம்மயக்கு**
சொல்லினிடையில் மெய்யெழுத்துக்கள் ஒன்றோடொன்று கூடும்நிலை. அவை உடனிலை மெய்ம்மயக்கு, வேற்றுநிலை மெய்ம்மயக்கு என இருவகைப்படும்

**இடைநிலை விளக்கு**
காண்க : இடைநிலைத் தீவகம் (சிலப். 1, 22, உரை)

**இடைப்பிறவரல்**
எழுவாய் முதலியன கொண்டு முடியுஞ் சொற்களிடையில் ஏற்ற பிறசொல் வருகை (நன். 356)

**இடைமடக்கு**
மடக்கணி வகை (தண்டி. 91)

**இடையாகெதுகை**
அடிதோறும் இரண்டாமெழுத்து ஒன்றே யொன்றி வரத் தொடுப்பது (காரிகை, ஒழிபி, 6, உரை)

**இடையினம்**
இடையெழுத்து (நன். 70)

**இடையின மோனை**
இடையினத்துள் யகர வகரங்கள் ஒன்றற்கொன்று மோனையாக வருவது (காரிகை, ஒழிபி. 6, உரை)

**இடையின வெதுகை**
இடையினத்துள் வந்த வெழுத்தன்றி அவ்வினத்து வேறெழுத்து இரண்டாம் எழுத்தாய் நிற்க வரும் எதுகை (காரிகை. ஒழிபி. 6, உரை)

**இடையிட்டெதுகை**
ஒவ்வோடு இடையிட்டு வரும் எதுகை (காரிகை. ஒழிபி. 6, உரை)

**இடையெண்**
மூச்சீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை (காரிகை. செய். 10, உரை)

**இடையெழுத்து**
மெய்யெழுத்துக்கள் பதினெட்டுள் ய், ர், ல், வ், ழ், ள் ஆகிய ஆறு எழுத்துக்கள்

**இணைக்குறளாசிரியப்பா**
ஈற்றடியும் முதலடியும் அளவடியாக இடையடிகள் பல குறளடியானும் சிந்தடியானும் வரும் அகவல் (காரிகை, செய். 8, உரை)

**இணைத்தொடை**
அளவடியுள் முதலிருசீர்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக். வி. 723, உரை)

**இணைமணிமாலை**
பிரபந்த வகை (இலக். வி. 818)

**இணைமுரண்**
ஓரடியின் முதலிருசீரும் முரண்பட இணைந்து வருந் தொடை (காரிகை. உறுப். 16, உரை)

**இணைமோனை**
ஓரடியின் முதலிரு சீரினும் மோனை இயைந்து வரும் தொடை (காரிகை. உறுப். 16, உரை)

**இணையளபெடை**
முதலிரு சீரினும் அளபெடை வருந்தொடை (காரிகை உறுப். 16, உரை)

**இணையியைபு**
ஓரடியின் ஈற்றுச் சீரிரண்டும் இணைந்து வரும் தொடை (காரிகை. உறுப். 16, உரை)

**இணையெதுகை**
ஓரடியின் முதலிருசீரினும் எதுகை இயைந்து வரும் தொடை (காரிகை. உறுப். 16, உரை)

**இதர விதரம்**
உவமைகளுள்ள இரண்டு வாக்கியங்களுள், முதலாவதன் உபமேய் உபமானங்கள் முறையே இரண்டாவதன் உபமான உபமேயங்களாகத் தொடர்ந்து வருமாறு இரண்டு வாக்கியமாகச் சொல்லப்படும் ஒருவகை உவமையணி (தண்டி. 30)

**இதழகலந்தாதி**
நிரோட்டகவந்தாதி

**இந்திரகணம்**
செய்யுளின் தொடக்கத்தில் மூன்று நேரசைச் சீர்கள் வரத் தொடுக்கும் (இலக். வி. 800, உரை)

**இயங்குதிணை**
சரப்பொருள் (நன். 299, விருத்.)

**இயங்கு படையரவம்**
பகையரணை முற்றுதற்கெழுந்த படையின் செல்வால் உண்டாம் ஆராவாரத்தைக் கூறும் புறத்துறை (தொல், பொ. 63)

**இயமான கணம்**
தேமாங்காய் என்னும் செய்யுட்கணம். காண்க : இந்திர கணம் செய்யுட்கணத்தொன்று (இலக். வி. 800, உரை)

**இயல்**
நூலின்பகுதி (அரசியல் [குறள்.])

**இயல்பு கணம்**
உயிர்க்கணம், மென்கணம், இடைக்கணங்கள் (தக்கயாகப். 602)

**இயல்புப் புணர்ச்சி**
விகாரமின்றிச் சொற்கள் புணர்வது (நன். 153, உரை)

**இயல்பு வழக்கு**
எப்பொருளுக்கு எப்பெயர் இயல்பில் அமைந்ததோ அப் பெயராலேயே அப்பொருளைக் கூறுகை (நன். 267)

**இயல்புவிளி**
ஈறு திரியாது நிற்கும் விளி வேற்றுமை (கலித். 80, உரை)

**இயலசை**
நேரசை நிரையசைகள்; இயலசை முதலிரண்டு (தொல். பொ. 318)

**இயலிசையந்தாதி**
பொருளாலன்றி ஓசையால் வரும் அந்தாதி தொடை (ஈடு, 1,6,2, ஜீ)

**இயற்குணப் பெயர்**
தொழிலையன்றிப் பண்பே குறிக்கும் பெயர் (நன். 269, மயிலை.)

**இயற்கைப்புணர்ச்சி**
தலைவனும் தலைவியும் தெய்வத்தாற்கூடும் முதற்கூட்டம் (இறை. 2, பக். 33)

**இயற்கையளபெடை**
இசை, விளி, பண்டமாற்று முதலிய இடங்களில் நிகழும் அளபெடை (பி. வி. 5, உரை)

**இயற்சீர்**
காண்க : அகவலுரிச்சீர் (தொல். பொ. 325)

**இயற்சீர் வெண்டளை**
மாமுன் நிரையும் விளமுன் நேரும் வரும் தளை (இலக். வி. 718, உரை)

**இயற் சொல்**
எல்லர்க்கும் பொருள் விளங்கும் சொல் (நன். 271)

**இயற்படமொழிதல்**

தலைவன் குணங்களைத் தலைவி புகழ்ந்து கூறும் அகத் துறை (திருக்கோ. 378)

**இயற் பழித்தல்**

தலைவன் குணங்களைத் தோழி இகழ்ந்து கூறும் அகத் துறை (திருக்கோ. 376)

**இயற்பா**

திவ்வியப்பிரபந்தத்துள் ஒரு பகுதி

**இயற்பெயர்**

விரவுப்பெயர் (தொல். சொல். 174, சேனா)

**இயற்றளை**

காண்க : இயற்சீர் வெண்டளை

**இயற்றுதற் கருத்தா**

பயனிலைச் செயலை நேரே செய்யும் வினைமுதல் (நன். 297, உரை)

**இயன்மொழி வாழ்த்து**

1. தலைவன் குலத்தோர் செய்திகளை அவன் மேலேற்றி வாழ்த்தும் புறத்துறை (தொல். பொ. 90)
2. 'இன்னார் இன்னது கொடுத்தார் அவர் போல நீயும் கொடுப்பாயாக' என யாவரும் அறியக்கூறும் புறத் துறை (பு. வெ. 9, 6)
3. அரசன் தன்மையினைப் புகழ்ந்து சொல்லும் புறத் துறை (பு. வெ. 9, 7)

**இயைபின்மையணி**

பொருள் தனக்குத் தானே யுவமை என்று உரைக்கும் அணி (அணியி. 2)

**இயைபு**

1. புணர்ச்சி (தொல். சொல். 308)
2. இது கேட்டபின் இது கேட்கத்தக்கது என்னும் யாப்பு (நன். சிறப்புப். விருத்.)
3. ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் ஆகிய மெய் யெழுத்துக்களில் முடியும் செய்யுள் அடிவகை; நால் வனப்புளொன்று (தொல். பொ. 552)

**இயைபுத்தொடை**

ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (இலக். வி. 723)

**இயைபுருவகம்**

உருவக அணியுளொன்று (தண்டி. 35, உரை)

**இயைபு வண்ணம்**
இடையெழுத்துக்கள் மிகுந்து வரும் சந்தம் (தொல். பொ. 530)

**இர்**
1. முன்னிலைப் பன்மை விகுதி: வந்தனிர்
2. படர்க்கைப் பன்மை விகுதி: கேளிர், பெண்டிர்

**இரங்கல்**
1. நெய்தல் உரிப்பொருள் (தொல். பொ. 14)
2. அழுகை (திவா.)

**இரங்கற்பா**
சரமகவி

**இரட்டுறமொழிதல்**
முப்பத்திரண்டு வகையான உத்திகளில் ஒன்று (நன். 14)

**இரட்டுறல்**
சிலேடை (மாறன. 299, உரை)

**இரட்டைக்கிளவி**
இரட்டையாக நின்றே பொருளுணர்த்தும் சொல் (தொல். சொல். 48)

**இரட்டைத்தொடை**
ஓரடி முழுதும் ஒரு சொல்லேவரத் தொடுப்பது (காரிகை, உறுப். 17, உரை)

**இரட்டை நாகபந்தம்**
சித்திரகவி வகை (தண்டி. 95, உரை)

**இரட்டைமணிமாலை**
பிரபந்த வகை (இலக்.வி. 819)

**இரட்டை யாப்பு**
தொடைவகை

**இரட்டை விருத்தம்**
பதினொரு சீர்க்கு மேற்பட்ட சீரான் வரும் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் (வீரசோ. யாப். 3, உரை)

**இரணடைத்தொடை**
காண்க: முரண்தொடை (காரிகை. ஒழிபி. 5)

**இரவுக்குறி**
இரவிலே தலைவனும் தலைவியும் சேரும்படிக் குறிக்கப் பட்ட இடம் (தொல். பொ. 131)

**இருக்குக்குறள்**
சிறிய பாவகை

**இருகுறணேரிசை வெண்பா**
நேரிசை வெண்பா, இடையில் தனிச்சொல் பெற்ற இரு குறளாக அமைதல் (காரிகை. செய். 3)

**இருதிணை**
1. உயர்திணை, அஃறிணை (தொல். சொல். 1)
2. இயங்குதிணை, நிலைத்திணை

**இருபாவிருபஃது**
பிரபந்தவகை (பன்னிருபா. 337)
2. மெய்கண்ட சாத்திரத்தொன்று

**இருபெயரொட்டு**
ஆகிய என்னும் பண்புரு தொக்கு நிற்கப் பெயர்கள் இணைந்து வருவது (நன். 365, உரை)

**இருமடியாகுபெயர்**
ஆகுபெயர் வகை (நன் 290, உரை)

**இருமுற்றிரட்டை**
ஒரு செய்யுளில் ஓரடி முற்றெதுகையாய் மற்றையடி மற்றொரு முற்றெதுகையாய் வருவது (யாப். வி. பக். 182)

**இருவருந்தபுநிலை**
எயிலின் அகத்தும் புறத்தும் நின்ற வேந்தரிவரும் பொருது வீழ்ந்தமை கூறும் புறத்துறை (தொல். பொ. 68)

**இல்பொருளுவமை**
அபூதவுவமை (குறள். 273, உரை)

**இல்லாண்முல்லை**
1. பாசறைத் தலைவனை இல்லாள் நினையும் புறத்துறை (திவா.)
2. தலைவி கணவனை வாழ்த்தி விருந்தோம்பும் இல்லின் மிகுதியைப் புகழும் புறத்துறை (பு. வெ. 10; முல்லை, 5)

**இலக்கணப்போலி**
இலக்கணம் உடையது போல் தொன்றுதொட்டு வழங்கும் சொல் (நன். 267)

**இலக்கணை**
ஒரு பொருளைக் காட்டற்கு உரிய சொல்லை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது; விட்ட விலக்கணை, விடாத விலக்கணை, விட்டும் விடாத விலக்கணை (நன். 269, விருத்.)

**இலக்கியம்**

1. இலக்கண மமைந்தது
2. உதாரணம் ஏற்றப் படாதன வின்னிசைச் சிந்திற் கிலக்கியமே (காரிகை. செய். 5, உரை)
3. ஆன்றோர் நூல்

**இலம்பகம்**

1. நூலின் உட்பிரிவு (நாமகளிலம்பகம் [சீவக.])
2. தலைக்கோலமென்னும் அணி - 'மகளி ராய் நுதல்... இலம்பகத் தோற்ற மொத்ததே'-சீவக. 1442
3. மாலை (திவா.)

**இலேசவணி**

1. குறிப்பை வெளிப்படுத்தும் மெய்ப்பாடு வேறொன் றால் நிகழ்ந்ததாக மறைத்துச் சொல்லும் அணி (தண்டி. 64, உரை)
2. குணத்தைக் குற்றமாகவும் குற்றத்தைக் குணமாகவும் சொல்லும் அணி (அணியி. 72)

**இலைமறைகாய்**

மறைபொருள்

**இழைபு**

நூல் வனப்புளொன்று (தொல். பொ. 554)

**இற்செறித்தல்**

தலைவனைச் சந்தித்தற்கிடமின்றிப் பெற்றோர் தலைவியை அவள் வயது முதிர்ச்சி நோக்கி வீட்டினுள் இருத்துதல் (திருகோ. 134)

**இற்செறிவு**

தலைவனைச் சந்தித்தற்கிடமின்றிப் பெற்றோர் தலைவியை அவள் வயது முதிர்ச்சி கருதி வீட்டினுள் இருத்துகை (திருக்கோ. 133, கொளு.)

**இற்பரத்தை**

காமக்கிழத்தியாகக் கொண்ட பரத்தை (பரிபா. 6, உரை)

**இறுதிநிலை**

1. இறுதியில் நிற்பது (கலித். 124, உரை, பக். 778)
2. விகுதி (நன். 134, சங்கர.)

**இறந்தது விலக்கல்**

ஓர் உத்தி (நன். 14)

**இறைச்சி**

காண்க: இறைச்சிப் பொருள்; கருப்பொருளினுள்ளே கொள்ளும் பொருள் (தொல். பொ. 229)

**இறைச்சிப் பொருள்**
கருப்பொருளினுள்ளே கொள்ளும் பொருள் (தொல். பொ. 229)

**இன்னாவிசை**
செய்யுட் குற்றம் இருபத்தேழனுளொன்று (யாப். வி. 525)

**இன்னிசை வெண்பா**
நான்கடியாய்த் தனிச்சீரின்றி வரும் வெண்பா (காரிகை. செய். 4, உரை)

**இன்னிசை வெள்ளை**
காண்க : இன்னிசை வெண்பா. நான்கடியாய்த் தனிச் சீரின்றி வரும் வெண்பா (காரிகை. செய். 4, உரை)

**இனமொழி**
எண்வகை விடைகளுள் ஒன்று (நன். 386)

**இனமோனை**
இனவெழுத்தால் வரும் மோனை. அவை, வல்லின மோனை, மெல்லின மோனை, இடையின மோனை (காரிகை. ஒழிபி. 6)

**இனவெதுகை**
இனவெழுத்தால் வரும் எதுகை. அவை : வல்லின வெதுகை, மெல்லின வெதுகை, இடையின வெதுகை (காரிகை. ஒழிபி. 6)

**இனவெழுத்து**
ஒரு சாதி எழுத்துக்கள் (நன். 71, உரை)

**இனவெழுத்துப் பாட்டு**
வல்லின முதலிய மூவினங்களுள் ஓரினத்தெழுத்துக்களே பாடுஞ் சித்திரகவி வகை (யாப். வி. 503)

## ஈ

**ஈரடி வருக்கம்**
செய்யுள் வகை

**ஈரடி வெண்பா**
காண்க : குறள் வெண்பா (காரிகை. செய். 8)

**ஈரொற்று வாரம்**
இரண்டு மாத்திரை பெற்று வரும் செய்யுள் (சிலப். 3, 136, உரை)

## உ

**உக்குறள்**
குற்றியலுகரம்; உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும (நன். 164)

**உட்டொடர்**
பெருந்தொடர் மொழியின் பாகமான சிறு தொடர் (தொல். சொல். 42, சேனா.)

**உடம்படுமெய்**
நிலைமொழி யீற்றிலும் வருமொழி முதலிலும் உள்ள இரண்டு உயிர்களைச் சேர்க்கும் மெய்யெழுத்து (நன்.162)

**உடம்பொடு புணர்தல்**
கூறும் இலக்கியத்திலேயே சொல்லவேண்டிய தொன்றை உயர்த்துணர வைக்கை (குறள். 17, உரை)

**உடன்போக்கு**
பெற்றோரறியாமல் தலைவி தலைவனுடன் செல்கை (நம்பியகப். 181)

**உடனிகழ்ச்சியணி**
புணர்நிலையணி (அணியி. 21)

**உடனிலை**
1. கூடிநிற்கை
2. உடனிருந்த இருவரைப் பாடும் ஒரு புறத்துறை (புறநா. 59)

**உடனிலைச் சிலேடை**
ஒரு பாட்டு நேரே வரும் பொருளையன்றி வேறுமொரு பொருள் கொண்டு நிற்கும் அணி (திருக்கோ. 1, உரை)

**உடனிலை மெய்ம்மயக்கம்**
'ர்', 'ழ்' என்னும் இரண்டு மொழிந்த 16 மெய்களுள் ஒவ்வொன்றும் தன்னுடன் தான் நின்று மயங்குகை (நன்.110, உரை)

**உடனுறை**
ஒரு நிலத்தில் உடனுறைகின்ற கருப்பொருளாற் பிறிதொரு பொருள் பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சி (தொல். பொ. 242)

**உண்டாட்டு**
1. கள்ளுண்டு மகிழ்தலைத் தெரிவிக்கும் புறத்துறை (தொல். பொ. 58)
2. கள்ளுண்டு மகிழ்கை (பிரமோத். 22, 13)

**உண்டிப் பொருத்தம்**
செய்யுண் முதன் மொழிப் பொருத்தவகை (பிங்.)

**உணாப்பொருத்தம்**
செய்யுண் முதன் மொழிப் பொருத்தவகை (வெண்பாப். முதன். 7) காணக : உண்டிப்பொருத்தம்

**உத்தி**
1. சேர்க்கை (கந்தவுத்தியினால் [மணி. 28, 15])
2. யுக்தி
3. நுதலிப்புகுதல் முதலிய 32 உத்திகள் (நன். 14)

**உத்தி மறுதலை**
செய்யுட் குற்றங்களு ளொன்று (யாப். வி. 525)

**உதாத்தம்**
1. செல்வத்தின் உயர்ச்சியையேனும் மனத்தின் பெருமையையேனும் மேம்படுத்துக் கூறுவதாகிய ஓர் அலங்காரம் (தண்டி. 72)
2. வேதஸ்வரம் நான்கனுள் ஒன்றாகிய எடுத்தலோசை (திருவிளை. தடாதகை. 8)

**உதாரணம்**
1. சான்று : அசைச்சீர்க் குதாரண நாண்மலரே (காரிகை. உறுப். 7)
2. கண்டதொரு பொருளைச் சொல்லி அதுபோல் என்று எடுத்துக்காட்டிக் காணாததை உறுதிப்படுத்துவதாகிய அனுமானம்

**உதாரம்**
1. குறிப்பினால் ஒரு பொருள் சிறப்புப்பிடத் தோன்றுவதாகிய குணம் (தண்டி. 20)
2. கொடை; உதார சீலனுய ரங்கர் கோன் (பாரத கிருட். 134)
3. மேம்பாடு; கனமிலாத முதாரமதா மென்னினும் (ரானலா. வைரண். 64)

**உபசார வழக்கு**
ஒன்றன் தன்மையை மற்றொன்றன் மேலேற்றிக் கூறுவது (குறள். 73, உரை)

**உபமேயம்**
உவமிக்கப்படு பொருள்

**உம்மைத்தொகை**
உம் என்பது தொக்கத் தொகை. இராப்பகல் (நன். 368, உரை)

**உய்த்தலில் பொருண்மை**
கருதிய பொருள் தெளிவாகப் புலப்படுமாறு எளிய சொல்லுடைமையாகிய குணம் (தண்டி. 21)

**உய்த்துணர்மொழி**
செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**உய்த்துணர வைப்பு**
ஓர் உத்தி (நன். 14)

**உயர்திணை**
1. மேற்குலம் (உயர்திணை யூமன்போல [குறுந். 224])
2. மக்கள் தேவர் நரகர் என்னும் முத்திறத்தாரைக் குறிக்கும் சொல் (நன். 261)

**உயர்வுச் சிறப்பும்மை**
உயர்வு மிகுதியைக் காட்டும் உம் மென்னுஞ் சொல். குறவரு மருளுங் குன்றம்

**உயர்வு நவிற்சியணி**
அதிசயோக்தி அலங்காரம் (அணியி. 13)

**உயர்வுவமை**
காண்க : இயைபின்மையணி (வீரசோ. அலங். 14)

**உயிர்மெய்**
ஒற்று முன்னும் உயிர் பின்னுமாயிணைந்து ஒலிக்கு மெழுத்து (ஒற்று முன்னாய் வரு முயிர்மெய் [நன். 89])

**உயிரளபெடை**
தனக்குரிய மாத்திரையின் மிக்கொலிக்கும் உயிரெழுத்து (நன். 91, உரை)

**உயிரெழுத்து**
உயிர் போல் தனித்தியங்கக்கூடிய எழுத்து

**உரிச்சீர்**
மூவசைச்சீர் (யாப். 12)

**உரிச்சொல்**
நாலவகைச் சொற்களுள் ஒன்று (நன். 442) காண்க : திரிசொல்

**உரிப்பொருட்டலைவன்**
களவித்தலைவன். (உரிப்பொருட்டலைவன் ஒருவனே யானவாறும்) (தொல். பொ. 55, உரை)

**உரிப்பொருள்**
ஐந்திணைகட்கு உரியனவான புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல்களும் அவற்றின் நிமித்தங் களும் (நம்பியகப். 25)

**உரியசை**
நேர்பு நிரைபசைகள்

**உருட்டு வண்ணம்**
அராகந் தொடுத்து வருஞ் சந்தம் (உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும் [தொல். பொ. 544])

**உருபு மயக்கம்**
1. ஒரு வேற்றுமையுருபு பிறிதொரு வேற்றுமையது உருபின் பொருள் கொண்டு நிற்கை (சிலையினாற்கு, உருபு மயக்கம், சீவக. 1889, உரை)
2. ஒரு வேற்றுமைக்குள் ஓருருபு வேறொரு உருபோடு மயங்குகை

**உருவகப்படுத்துதல்**
உவமேயத்தை உவமானத்தோடு அபேதமாகக் கூறுதல்

**உருவகம்**
உவமேயத்தை உவமானத்துடன் அபேதமாகக் கூறும், அணி (தண்டி. 34)

**உருவுவமம்**
வண்ணம் பற்றி வரும் ஒப்புமை (தொல். பொ. 276 உரை)

**உருவெழுத்து**
வரிவடிவுள்ள எழுத்து (யாப். வி. 535)

**உரைச்செய்யுள்**
கட்டுரை. வார்த்திகப் பொழிப்பென்பது உரைச்செய்யு ளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படும் (சி. போ. பா.)

**உரைப்பாட்டு**
கட்டுரைநடை (சிலப்பதி. 61, உரை)

**உரைபெறு கட்டுரை**
காவியங்களில் உரைநடையில் அமைந்த தொடர் (சிலப்.)

**உரையசை**
தன்னாற்றலைப் பெரும்பான்மையிழந்து சிறிது பொரு ளுணர்த்தி வரும் இடைச்சொல் (தொல். சொல். 279, உரை)

**உரையசைக் கிளவி**
ஒருவனை எதிர்முகமாக்குஞ் சொல் (தொல். எழுத். 34)

**உரையனுமாணம்**
நூலிற் சொல்லியது கொண்டு சொல்லாததையும் ஒப்புமை பற்றி யறியும் உய்த்துணர்வு. (சி.சி. அளவை, 12. சிவஞா.)

**உல்லேகம்**
1. பலபடப்புனைவணி (மாறனல. 126)
2. புனைந்துரை

**உலக்கைப் பாட்டு**
வள்ளைப் பாட்டு (திவா.)

**உலக வழக்கு**
உலகாசாரம்; உலக வழக்குச் சொல் (நன். 267, விருத்.)

**உலக விருத்தம்**
உலக வழக்கோடு மாறுபடும் உரை (மணி. 29, 162)

**உலா**
ஒரு பிரபந்தம்; கலிவெண்பா வுலாவாம் (வெண்பாப். செய். 27)
2. பவனி. போந்தானுலா (சங்கர. உலா)

**உலா மடல்**
காண்க : உலா. ஒரு பிரபந்தம் (இலக். வி. 857)

**உவகைக் கலுழ்ச்சி**
வாட்டின் மிகுந்த கணவனைக் கண்டு மனைவி மகிழ்ந்து கண்ணீர் வீழ்க்கும் புறத்துறை (பு.வெ. 7, 25)

**உவமச்சொல்**
காண்க : உவமவுருபு (சீவக. 2490, உரை)

**உவமப்போலி**
காண்க : உள்ளுறையுவமம் (தொல். பொ. 299)

**உவமேயம்**
காண்க : உபமேயம், உவமிக்கப்பட்ட பொருள் (அணியி. 1)

**உவமை**
1. ஒப்பு (திவா.)
2. உவமையணி (தண்டி. 29)
3. ஒட்டணியாகக் கூறப்படும் நீதிகள்

**உவமைத்தொகை**
உவமையுருபு தொக்க தொகை (நன். 366) மதிமுகம்

**உவமையாகு பெயர்**
உவமையான பொருளின் பெயர் உவமேயத்திற்கு ஆகி வருவது (நன். 290, உரை)

**உழபுலவஞ்சி**
பகைவர் நாட்டைச் சுட்டெரித்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 14)

**உழிஞை**
பகையரண் வளைப்போர் சூடும் மாலை. உழிஞை முடி புனைந்து (பு. வெ. 6,1)

**உழிஞைத்திணை**
1. பகையரண் வளைத்தலை யுணர்த்தும் திணை (தொல். பொ. 65)
2. பகையரணை வளைக்கையில் அதனைக் காத்தலை யுணர்த்துந் திணை

**உழிஞை மாலை**
ஒரு பிரபந்தம் (தொண். 283, உரை)

**உள்ளப்புணர்ச்சி**
தலைவனும் தலைவியும் உள்ளத்தாற்கூடும் கூட்டம் (முன்ன ருள்ளப் புணர்ச்சி யுரியதாகும்) (இலக். வி. 404)

**உள்ளுறை**
1. மறைபொருள். இப்பாட்டிற்கு உள்ளுறை யாது?
2. உட்கருத்து. உன் உள்ளுறை எது?

**உள்ளுறையுவமம்**
வெளிபபடையானன்றிக் குறிப்பாற் பொருள் புலப்படுத்தும் உவமம்; உள்ளிறுத்திறு வதையுள்ளுறை யுவமம் (தொல் பொ. 48)

**உளப்பாட்டுத்தன்மை**
முன்னிலைப் படர்க்கையிடத்தாரைத் தனித்தனியேனும் சேர்த்தேனும் உடன்கூட்டுத் தன்மையிடம் (நன். 332, விருத்.)

**உளப்பாட்டு-முன்னிலை**
படர்க்கையிடத்தாரை உடன்கூட்டும் முன்னிலை (நன். 334, விருத்.)

**உற்பவமாலை**
திருமால் பிறப்புப் பத்தினையும் ஆசிரிய விருத்தத்தாற் கூறும பிரபந்தம் (தொன். 283, உரை)

**உறழ்கலி**
கலிப்பாவகை; கூற்று மாற்றமு மிடையிடை மிடைந்தும் போக்கின் றாக லுறழ்கலிக் கியல்பே (தொல். பொ. 468)

**உறழ்ச்சி**
1. மாறுபாடு; சுண்ண வுறழ்ச்சியும் வெல்வது (சீவக. 879)
2. திரிசை; உறழ்ச்சி வாழ்த்து (தொல். எழுத். 102)
3. விகற்பம் (நன். 123, மயிலை)

**உறழ்பொரு**
உவமையினும் பொருளை மிகுத்துக் கூறும் ஒப்பு (தொல். சொல். 78, உரை)

**உறழ் பொருள்**
ஒப்பு மாறுபடக் கூறுவது (தொல். சொல். 16, சேனா.)

**உன்னநிலை**
போர்க்கு முன் உன்னமரத்தால் நிமித்த மறியும் புறத்துறை (தொல். பொ. 60, உரை) (உன்னநிலையே யுணருங் காலை) (சிலப். 3, 18, உரை

## ஊ

**ஊசல்**
கலம்பக வுறுப்புக்களுளொன்று (இலக். வி. 812)

**ஊசல்வரி**
ஊஞ்சற்பாட்டு (சிலப். 29)

**ஊசற் சீர்**
காண்க : ஊசல்வரி. ஊஞ்சற் பாட்டு (சிலப். 29)

**ஊசற் பருவம்**
பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவங்களுள் ஒன்று

**ஊடல்**
மருதத்திணை உரிப்பொருளுள் ஒன்றாகிய புலவி [நம்பி யகப். 25)

**ஊர்நேரிசை**
தலைவனது ஊரை நேரிசை வெண்பாவாற் சிறப்பிக்கும் பிரபந்தவகை (இலக். வி. 830, உரை)

**ஊர் விருத்தம்**
தலைவனூரை நேரிசை வெண்பாவால் சிறப்பிக்கும் பிரபந்தவகை (இலக். வி. 853)

**ஊரி வெண்பா**

தலைவனூரை வெண்பாப் பத்தினாற் சிறப்பிக்கும் பிரபந்தவகை (வெண்பாப். செய். 22)

**ஊரின்னிசை**

தலைவனூரை இன்னிசை வெண்பாக்களாற் சிறப்பிக்கும் பிரபந்தம் (இலக். வி. 825)

## எ

**எச்சம்**

1. தொக்கு நிற்பது. பெயர்...குறிப்புத் தத்தமெச்சங் கொள்ளும் (நன். 360)
2. உருபுகளும் முற்றுகளும். பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டுமுடியும் பெயரும் வினையும் (எச்சப் பெயர்வினை பெய்து மீற்றினும் [நன். 357])
3. பெயரெச்ச வினையெச்சங்கள் (ஈரெச்சம். நன். 356)
4. பிறப்பிலே வரும் குறைகளான சிதடு, உறுப்பில் பிண்டம், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் முதலியன
5. எஞ்சியது
6. சந்ததி (குறள். 112)

**எட்டாரச் சக்கரம்**

எட்டு ஆரமுள்ள சக்கரத்துள்ளே எழுத்தெல்லாம் அமையப் பாடும் மிறைக்கவி (மாறன. 282, உரை)

**எட்டுத்தொகை**

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு. சங்க காலத்துத் தொகுக்கப்பட்ட எட்டு நூல்கள். இத்திறத்த வெட்டுத்தொகை (தனிப்பா.)

**எடுத்தலளவையாகுபெயர்**

அளவையாகு பெயர் வகை (நன். 290, உரை)

**எடுத்தலோசை**

உயர்த்திக் கூறும் ஓசை; முற்படக் கிளந்தவென எடுத்தலோசையாற் கூறவே. (தொல். பொ. 1, உரை)

**எடுத்துக்காட்டுவமை**

உவமானம் உவமேயம் என்னும் இரண்டும் தனித்தனி ஒவ்வொரு வாக்கியமாய் உவமவுருபின்றி வரும் அலங்காரம் (குறள். 1, உரை)

**எண்**

காண்க : 98 அம்போதரங்கம் (தொல். பொ. 452, உரை)

1. அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா வுறுப்பினு ளொன்று (இலக். வி. 738, உரை)
2. ஒத்தாழிசைக் கலிப்பா வகை (தொல். பொ. 463)

**எண்ணலங்காரம்**

எண்கள் முறையே வரும் ஓர் அணி (சி.சி. விநாயக. காப்பு, சிவஞா.)

**எண்ணியற்பெயர்**

எண்ணாகிய இயல்பு பற்றி வரும் உயர்திணைப் பெயர் (தொல். சொல். 165)

**எண்ணுவண்ணம்**

எண்ணிடைச் சொல் பயின்று வரும் சந்தம் (எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும் [தொல். பொ. 540])

**எண்வகையெச்சம்**

காண்க : எச்சம் 1-8. சிதடு, உறுப்பில் பிண்டம், கூன், குறள், ஊமை, செவிடு, மா, மருள் முதலான பிறப்புக் குறைபாடுகள்

**எதிர் நிரனிறை**

முறைமாறிவரும் நிரனிறை (நன். 414. உரை)

**எதிர் நிலையணி**

உவமான உவமேயங்களை மாற்றிச் சொல்லும் அணி (அணியி. 4)

**எதிர்மறையிடைநிலை**

எதிர்மறைப் பொருளைக் காட்டும் அல், ஆ, இல்

**எதிர்மறையிலக்கணை**

எதிர்மறைப் பொருளைக் குறிப்பால் உணர்த்துவது

**எதிர்மறையும்மை**

காண்க : 429 உம் : ஓர் இடைச்சொல்; எண்ணும்மை. சேரனும் பாண்டியனும்

2. எதிர்மறையும்மை : மறப்பினு மோத்துக் கொள்ள லாகும்
3. சிறப்பும்மை : குறவரு மருளுங் குன்றம் அல்லது புலையனும் விருப்பா யாக்கை
4. ஐயவும்மை : வெல்லினும் வெல்லான்
5. எச்சவும்மை : சாத்தனும் வந்தான்,

6. முற்றும்மை : தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்
7. தெரிநிலையும்மை : ஆணுமன்று பெண்ணுமன்று
8. ஆக்கவும்மை: பாலுமாயிற்று (நன். 425)

விரைவுப் பொருளைக் காட்டும் வினையெச்ச விகுதி நடக்கலுமாங்கே (கலித். 39, 34); ஓர் அசைநிலை; காமக் கடன் மன்னு முண்டே (குறள். 1164)

**எதிரது போற்றல்**
முன்னில்லாதனவாயினும் தற்கால வழக்காயின் அவற்றைக் கொள்ளும் ஓர் உத்தி (நன். 14)

**எதுகை**
(இரண்டாம்...எழுத்தொன்றி னெதுகை-காரிகை. உறுப். 16) காண்க: எதுகைத்தொடை. இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பது (இலக். வி. 723)

**எதுகைத் தொடை**
இரண்டாமெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (இலக். வி. 723)

**எயில் காத்தல்**
அகத்தோன் உள்ளிருந்து கோட்டையைக் காத்து நிற்றலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 67, உரை)

**எருத்தடி**
ஈற்றயலடி, குட்டமெருத்தடி யுடைத்து மாகும் (தொல். பொ. 428)

**எருத்தம்**
காண்க : தரவு (வீர. சோ. யாப். 11, உரை) ஈற்றயல் (காரிகை. செய். 10, உரை)

**எருத்து**
தரவு (தொல். பொ. 444, உரை) ஈற்றயல்

**எருமை மறம்**
வீரனொருவன் தன் சேனை முதுகிடவும் பகைவர் சேனையைத் தான் அஞ்சாது எதிர்த்து நிற்கும் புறத்துறை (பு.வெ. 7, 13)

**எழுகூற்றிருக்கை**
ஒன்று முதல் ஏழு வரையும் எண்கள் முறையே ஒவ்வொன்றாக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் மிறைக்கவி வகை (மாறன. 297-299)

**எழுத்தந்தாதி**
ஒரு செய்யுளில் ஓரடியி னீற்றெழுத்து அடுத்த அடியின் முதல் எழுத்தாகவரத் தொடுப்பது (யாப். வி. 52, பக். 184)

**எழுத்தல்லிசை**
எழுத்தோசை யாகாத முற்கு, ஈளை முதலியவை. எழுத்த லிசையினை (இலக். வி. 755)

**எழுத்தானந்தம்**
பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்தளபெழுப் பாடுவதாகிய செய்யுட்குற்றம் (யாப். வி. 96, பக். 518)

**எழுத்து**
1. அட்சரம்
2. கையெழுத்து; சுந்தர மாறனென்றே மருவிய வெழுத்து மிட்டான் (திருவாலவா. 4, 27)

**எழுத்துக் குற்றம்**
நச்செழுத்து வரப் பாடும் குற்றம் (யாழ். அக.)
2. எழுத்திலக்கணவழு

**எழுத்துச் சுதகம்**
அக்கரச்சுதகம்

**எழுத்துச் சாரியை**
எழுத்துக்களைச் சொல்லுகையில் சேர்க்கப் படுகின்ற காம், காரம், கான் என்கின்ற சாரியைச் சொற்கள் (நன். 126, உரை:)
2. ஓரெழுத்தாயுள்ள சாரியை (நன். 252, மயிலை.)

**எழுத்து மடக்கு**
செய்யுளில் எழுத்து மடங்கிவரும் சொல்லணி வகை

**எழுத்துப் பொருத்தம்**
ஒரு காப்பியத்தின் தொடக்கச் செய்யுளின் முதன்மொழி ஒற்றெழுத்துட்பட மூன்றைத் தேழொன்ப தென்னும் எழுத்துக்களுள் ஏதேனும் ஒன்றைப் பெற்று வருவதாகிய செய்யுள் முதன் மொழிப் பொருத்தம் (வெண்பாப். முதன். 4, தலைப்பு)

**எழுமதம்**
நூலாசிரியருக்குரிய எழுவகைக் கொள்கை (நன். 11)
எழுவகை மதமே யுடன்படன் மறுத்தல்
பிறர்தம் மதமேற்கொண்டு களைவே

தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்ட லேனைப்
பிறிதொரு படாஅன் தன்மதங் கொளலே
(நன்.11)

## ஏ

**ஏகதேச வுருவகம்**
ஒரு பொருளின் ஏகதேசத்தை உருவகப்படுத்தும் உருவக அணி (குறள். 24, உரை)

**ஏகபாதம்**
நான்கடியும் ஒரே யெழுத்துத் தொடரால் அமைந்துவரும் மிறைக்கவி (திவா.)

**ஏகாங்க ரூபகம்**
உருவக வகை (மாறனலங். பக். 181)

**ஏணி மயக்கம்**
கோட்டைக்கு உள்ளும் புறமுமுள்ளோர் ஏணிமிசை நின்று போர் செய்தலைக் கூறும் புறத்துறை. (தொல். பொ. 68, உரை)

**ஏதீடு**
தோழி அறத்தோடு நிற்கையில், தலைவி தலைவனை மணத்தற்கு அவன் செய்த உதவிகளைக் காரணமாக இட்டுரைக்கை (ஏதீடுதலைப்பாடு [தொல். பொ. 207])

**ஏது**
1. காரணம்; ஏதுவி னுணர்த்தலும் (தொல். பொ. 168)
2. காரண காரியங்களை ஒருசேரக்கூறும் ஓர் அலங்காரம் (தண்டி. 57)

**ஏதுவின் முடித்தல்**
முன் காரணம் விளங்கப் பெறாத தொன்றைப் பின் காரணத்தால் முடிவு செய்வதாகிய உத்தி (நன். 14)

**ஏந்தல்**
காண்க : ஏந்திசை. செய்யுள் ஓசை வகை

**ஏந்தல் வண்ணம்**
விளக்கத்தின் பொருட்டும் வற்புறுத்துதற் பொருட்டும் ஒரு சொல்லே மிக்கு வருஞ்சந்தம் (தொல். பொ. 543)

**ஏந்திசை**
செய்யுளோசை வகை

**ஏந்திசைச் செப்பல்**
வெண்சீர் வெண்டளையாற் பிறக்கும் ஓசை (காரிகை, செய். 1, உரை)

**ஏந்திசைத் துள்ளல்**
கலித்தளையாற் பிறக்கும் ஒன்று (காரிகை, செய். 1, உரை)

**ஏந்திசைத் தூங்கல்**
ஒன்றிய வஞ்சித்தளையாற் பிறக்கும் ஓசை (காரிகை. செய். 1, உரை)

**ஏந்திசை யகவல்**
நேரொன் றாசிரியத் தளையாற் பிறக்கும் ஓசை (காரிகை. செய். 1, உரை)

**ஏமாவெருமை**
காண்க : எருமை மறம் (மாறன. 79, 71, உரை)

**ஏர்க்களவுருவகம்**
போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகப்படுத்தும் புறத் துறை (புறநா. 369)

**ஏர்மங்கலம்**
பொன்னேர் பூட்டிப் பாடும் மங்கலப் பாட்டு. ஏரோடு நின்றோ ரோர்மங்கலமும் (சிலப். 10, 135)

**ஏறாண்முல்லை**
ஆண்மை மிகுந்த வீரக்குடியின் ஒழுக்கத்தைப் புகழும் புறத்துறை (பு. வெ. 8, 22)

**ஏறு கோள்**
ஏறுகோட்பறை; ஆயர்குல வழக்கின்படி ஒரு பெண்ணை வரைந்து கொள்வதற்காக ஏறு தழுவுகை (திருக்கோ. 136, உரை) காண்க : ஏறுகோட்பறை; ஏறு தழுவுதற்குரிய முல்லை நிலப்பறை (இறை. 1, உரை, பக். 18)

**ஏறு தழுவுதல்**
ஆயர்குலக் காளையர் மணமுடிக்கும் பொருட்டு இடபத்தைத் தழுவிப் பிடித்தல்

**ஏனையுவமம்**
வெளிபபடையுவமம் (தொல். பொ. 49)

## ஐ

**ஐந்திணை**
1. அன்புடைக்காமம் (நம்பியகப். 4, உரை)
2. ஐவகை நிலங்கள் (திவா.) குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்

**ஐந்திணைச் செய்யுள்**
உரிப்பொருள் தோன்ற ஐந்திணையையும் கூறும் பிரபந்தம் (இலக். வி. 849)

**ஐந்து பா**
வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா என்ற ஐவகை யான பா (பாரத. பாயி. 15)

**ஐம்பெருங்காப்பியம்**
காண்க : பஞ்ச காவியம் (நன். 387, மயிலை.)

**ஐம்மொழி**
செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**ஐயவணி**
உவமான உவமேயங்களின் ஒப்புமையினால் ஐயுறுவது போற் பேசும் அணி (அணியி. 10)

**ஐயவுவமை**
அணிவகை

## ஒ

**ஒட்டணி**
உவமையால் உவமேயத்தைப் பெற வைக்கும் அணி (தண்டி. 51)

**ஒத்தாழிசை**
கலிப்பாவின் வகை (தொல். பொ. 442)

**ஒப்பில் போலி**
ஒப்புமைப் பொருளைக் காட்டாத போல் என்னும் இடைச் சொல் (தொல். சொல். 280)

**ஒப்புமைக் கூட்டம்**
புகழ்தலினும் இகழ்தலினும் ஒன்றை அதனினும் மிக்க வேறொன்றோடு உவமிக்கும் ஓரலங்காரம் (தண்டி. 78)

**ஒருங்கியலணி**
காண்க : புணரியலணி

**ஒரு சொல் பல பொருள்**
ஒரு சொல்லுக்குரிய பல பொருள்கள் (பிங்.)

**ஒருதலைக்காமம்**
ஒருபக்கமான காதல் (கைக்கிளை யுடைய தொருதலைக் காமம்) (நம்பியகப். 3)

**ஒருதலையுள்ளுதல்**
அவத்தை பத்தனுள் ஒன்றாகிய இடைவிடா நினைவு (நம்பியகப் 36. உரை)

**ஒருபா வொருபஃது**
வெண்பா, கலித்துறை என்பவற்றுள் ஏதேனும் ஒரு பாவிற் பத்துப் பாடல்களால் அமைக்கப்பட்ட பிரபந்தம் (இலக். வி. 823)

**ஒருபுடையுவமை**
முழுவதும் ஒப்பாகாமல் சில தன்மையில் மாத்திரம் ஒத்திருக்கும் உவமை. ஒருபுடையுவமை யாதலன்றி முற்றுவமை யாதல் செல்லாமையானும் (சி. போ. சிற். 1, 2, 3)

**ஒருபுடையொப்புமை**
முழுவதும் ஒப்பாகாமல் சில தன்மையால் மாத்திரம் ஒத்திருக்கும் உவமை (ஒருபுடையுவமை யாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமையானும்) (சி. போ. சிற் 1, 2, 3)

**ஒருபொருட் பன்மொழி**
1. ஒரு பொருளைத் தரும் பல சொற்கள்
2. மீமிசைச் சொல் (நன். 398)

**ஒரு பொருண்மொழி**
செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**ஒரு முற்றிரட்டை**
ஓரடி முற்றெதுகையாய் வருவது (யாப். வி. 51)

**ஒருவழித்தணத்தல்**
அலரடங்குதற் பொருட்டுத் தலைமகன் சில நாள் வேற்றிடத்துச் சென்று உறையும் அகத்துறை (திருக்கோ. 181, அல.)

**ஒரூஉ**
காண்க : ஒரூஉத்தொடை. அளவடியுள் நடுவிரு சீர்களொழிய முதற்சீர்க் கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக். வி. 723)

**ஒரூஉத்தொடை**
அளவடியுள் நடுவிரு சீர்களொழிய முதற்சீர்ச் கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக். வி. 723)

**ஒருஉ வண்ணம்**
ஆற்றொழுக்காகப் பொருள் கொண்டு செல்லுஞ் சந்தம் (தொல். பொ. 539)

**ஒலியந்தாதி**
ஒலியந்தாதி. ஓரடிக்கு 16 அல்லது 8 கலைகள் தொடுத்த பல்சந்த வகுப்புக்கள் அந்தாதியாக 30 கூடியதொரு பிரபந்தம். (வெண்பாப். செய். 13)

**ஒலியெழுத்து**
ஒலி வடிவான எழுத்து (நன். 256, மயிலை.)

**ஒழித்துக் காட்டணி**
ஒரு பொருளை ஓரிடத்தில்லையென மறுத்து மற்றோரிடத்துண்டென்று நியமித்துக் காட்டும் அணி (அணியி. 53)

**ஒழிப்பணி**
காண்க : அவநுதி

**ஒழிபியல்**
நூலின்கண் முன்னியல்களிற் சொல்லா தொழிந்தவற்றைக் கூறுமியல் (நம்பியகப்.)

**ஒழியிசை**
ஒழிந்த பொருள் தருஞ் சொற்களைத் தருவது (நன். 423)

**ஒழுகிசை**
வெறுத்திசையில்லாமல் செவிக்கினிய மெல்லிசையுடைமையாகிய குணம் (தண்டி. 19)

**ஒழுகிசைச் செப்பல்**
இயற்சீர் வெண்டளை வெண்சீர் வெண்டளையிரண்டும் விரவி வந்த வெண்பாவினோசை (காரிகை. செய்.1, உரை)

**ஒழுகிசையகவல்**
நேரொன்றிய ஆசிரியத்தளையும் நிரையொன்றிய ஆசிரியத்தளையும் விரவி வந்த அகவலோசை (காரிகை, செய். 1, உரை)

**ஒழுகு வண்ணம்**
ஒழுகிய லோசையாற் செல்லுஞ் சந்தம் (தொல். பொ. 538)

**ஒற்றளபெடை**
குறித்த மெல்லின இடையின மெய்யெழுத்துக்கள் தமக்குரிய மாத்திரையின் மிக்கொலிக்கை (நன். 92)

**ஒற்றொழி பாட்டு**
மெய்யெழுத்தில்லாப் பாட்டு (சூடா.)

**ஒன்றாத வஞ்சித்தளை**
நிரையீற்றுரிச்சீரின் முன் நேரசை வருந்தளை (இலக். வி. 718, உரை)

**ஒன்றிய வஞ்சித்தளை**
நிரையீற்று உரிச்சீரின் முன் நிரையசை வருந்தளை (இலக். வி. 718, உரை)

**ஒன்றொழி பொதுச்சொல்**
இருதிணையாண் பெணுள் ஒன்றனை யொழிக்கும் பொதுச் சொல் (நன். 269)

## ஓ

**ஓசை**
செய்யுளோசை

**ஓசையுடைமை**
இன்னோசையுடைமையாகிய ஒரு நூலழகு (நன். 13)

**ஓதற் பிரிவு**
தலைவன் கல்வி கற்றற்குத் தலைவியைப் பிரியும் பிரிவு (தொல். பொ. 25)

**ஓம்படைக்கிளவி**
1. தலைவியைப் பாதுகாத்துக்கொள்ளெனத் தலைவற்குத் தோழி கூறுங் கூற்று (தொல். பொ. 114)
2. பெரியோர் பாதுகாவலாகச் சொல்லுஞ் சொல்

**ஓரசைச்சீர்**
காண்க: அசைச்சீர்

**ஓரெழுத்தினம்**
ஒருமிறைக்கவி

**ஓரெழுத்து மடக்கு**
வந்த எழுத்தே மடக்கி வரும் சொல்லணி (தண்டி. 94)

**ஓரொற்று வாரம்**
ஒரு மாத்திரை பெற்று வரும் செய்யுள் (சிலப். 3, 136, உரை)

**ஓலைத்தூக்கு**
சீட்டுக்கவி. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும் (நன். 53)

## ஔ

**ஔகாரக் குறுக்கம்**
தன் மாத்திரையிற் குறுகிய ஔகாரம் (நன். 95)

## க

**கட்காஞ்சி**
அரசன் வீரர்க்கு உண்ண மதுவளிக்கும் புறத்துறை (பு.வெ. 4, 21)

**கட்டளை**
அளவு (பிங்.)

**கட்டளைக்கலி**
எல்லாவடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்து வரும் கலிப்பா (யாப். வி. 95, 470)

**கட்டளைக் கலித்துறை**
பாவின வகை

**கட்டளைக் கலிப்பா**
கலிப்பா இனத்தொன்று (தொ. வி. 236)

**கட்டளையடி**
எழுத்துக் கணக்கில் அமைந்த செய்யுளடி (தொல். பொ. 337, உரை)

**கட்டளையாசிரியம்**
எல்லாவடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்து வரும் அகவல் (யாப். வி. 95, 470)

**கட்டளை வஞ்சி**
எல்லாவடிகளும் ஒற்று நீங்க எழுத்தொத்து வரும் வஞ்சிப்பா (யாப். வி. 95, 470)

**கடவுள் வாழ்த்து**
1. கடவுள் வணக்கம்; நூற் பகுதியின் முதலில் கூறும் நூல் அல்லது தெய்வ வாழ்த்து
2. மும்மூர்த்திகளுள் ஒருவரை உயர்த்திச் செல்லுந் துறை (பு.வெ. 9, 3)

**கடிகை வெண்பா**
அரசர், கடவுளர் முதலியோரது அருமைச் செயல்கள் ஒரு கடிகைப் பொழுதில் நடந்தனவாகக் கூறும் ஒரு பிரபந்தம் (தொ. பொ. 283, உரை)

**கடுங்கவி**
ஆசுகவி வல்லான் (யாப். வி. 96, 513)

**கடைக்காப்பு**
பதிகத்தின் இறுதி முத்திரைப் பாட்டு. திருப்பதிக நிறை வித்துத் திருக்கடைக்காப்புச் சாத்தி (பெரியபு. திருஞான. 80)

**கடைக்குறை**
சொல்லினிறுதி குறைந்து வருஞ் செய்யுள் விகாரம் (நன். 156, உரை)

**கடைக்கூழை**
1. அளவடியுள் முதற் சீரொழிந்த மூன்று சீர்க்கண்ணும் வருந் தொடை வகை (காரிகை, ஒழிபி. 5)

**கடை திறப்பு**
1. கதவு திறக்கை
2. பரணிப் பிரபந்தத்தின் உறுப்புக்களுள் ஒன்று (இலக். வி. 839)

**கடைத்துடிப்பு**
செய்யுளினீற்றடி சிறந்து நிற்கை. சீர் தளை விகற்பம் பொருந்தி நன்னீதியாய்க் கடைத்துடிப்பாய் (திருவேங். சத. 56)

**கடைதலைப்பூட்டு**
பூட்டுவிற் பொருள்கோள்

**கடைநிலை**
ஒரு பிரபந்தம் (தொல். பொ. 90)

**கடைநிலை**
1. புறவாயில்
2. முடிவு. விழாவின் கடைநிலை சாற்றி (சிலம். 5, 144)
3. விகுதி
4. சான்றோர் தம் வரவினைத் தலைவற்குணர்த்து மாறு வாயினிவிருந்து கடைக் காவலர்க்குக் கூறுகை யாகிய புறத்துறை (தொல். பொ. 90)
5. ஒரு பிரபந்தம்

**கடைநிலைத் தீவகம்**
தீவகவணி வகை (தண்டி. 38, உரை)

**கடைநிலையெழுத்து**
சொல்லின் ஈற்றெழுத்து

**கடை மடக்கு**
சொல்லணி வகை (தண்டி. 92, உரை)

**கடை முரண்**
அடிதோறும் இறுதிச் சீர்க்கண் சொல்லினும் பொருளினும் மறுதலைப்படத் தொடுக்கும் தொடை (யாப். வி. 39)

**கடைமோனை**
அடிதோறும் கடைச்சீரின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுக்கும் மோனைத் தொடை (யாப். வி. 39)

**கடையாகெதுகை**
இனவெழுத்து எதுகையாக வருந்தொடை (காரிகை. ஒழிபி. 6, உரை)

**கடையிணைத் தொடை**
மோனை முதலியவை அடிகளின் ஈற்றிரண்டு சீர்களில் வரத்தொடுக்குந் தொடை (காரிகை. 5, உரை)

**கண்ணி**
கலிவெண்பா முதலியவற்றில் இவ்விரண்டாய் வரும் உறுப்பு. மூதுலாக் கண்ணிதோறும் (சங்கர உலா)
2. ஒருவகை இசைப்பாட்டு

**கண்படைநிலை**
1. அவையில் இரவில் நெடுநோய் தங்குகையால் அரசனை நோக்கி மருத்துவர் முதலியோர் அவன் துயில் கோடலைக் கருதிக் கூறும் புறத்துறை (தொல். பொ. 90)
2. ஒரு பிரபந்தம் (தொன். 283, உரை)

**கண்டகட்டு**
பாவகை

**கணப் பொருத்தம்**
செய்யுளின் முதன்மொழிப் பொருத்தவகை (வெண்பாப். முதன். 20)

**கணிவன் முல்லை**
சோதிட நூல் வல்லவனது கீர்த்தியைச் சொல்லும் புறத்துறை (பு. வெ. 8, 20)

**கதலிபாகம்**
செய்யுளமைதிகளுள் ஒன்று

**கதிபொருத்தம்**
செய்யுண் முதன்மொழிப் பொருத்தங்களுள் ஒன்று (வெண்பாப். முதன். 18)

**கதுவாய்**

மேற்கதுவாய், கீழ்க்கதுவாய் எனும் தொடை விகற்பம் (இலக். வி. 723)

**கந்தழி**

1. பரம்பொருள். கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற... ...மூன்றும் (தொல். பொ. 88)
2. கண்ணன் வாணனது சோ நகரத்தை அழித்ததைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 40)

**கரந்துவரலெழினி**

நாடகத் திரைச்சீலை. ஒருமுக எழினியும் பொருமுக எழினியும் கரந்து வர லெழினியும் (சிலப். 3, 109, 110)

**கரந்துறை கிளவி**

உள்ளக் குறிப்பை மறைத்துச் செல்லும் மொழி (திருக்கோ. 50, கொளு)

**கரந்துறை செய்யுள்**

கரந்துறைப்பாட்டு. ஒவ்வோரெழுத்து இடைவிட்டுப் படிக்கும்போது வேறுமொரு கவி தோன்றும்படி எழுத்துக்கள் அமைத்துப் பாடப்படும் ஒரு மிறைக்கவி (தண்டி. 95, உரை)

**கரந்தைத் திணை**

பகைவர் கவர்ந்த நிரையை மீட்டலைக் கூறும் புறத்திணை (பு. வெ. 2, 1, உரை)

**கரிப்புறத்திணை**

சான்றோர் கூற்றைச் சாட்சியாகக் காட்டுகை (தொன். வி. 161)

**கருத்தாவாகுபெயர்**

கருத்தாவின் பெயரைக் காரியத்திற்கு வழங்கும் ஆகுபெயர் (நன். 290, விருத்.)

**கருத்துடையடை**

அபிப்பிராயத்தோடு கூடிய விசேடணத்தை உடையதாகிய அலங்காரம் (அணியி. 24)

**கருத்துடையடைகொளி**

அபிப்பிராயத்தோடு கூடிய விசேடியத்தை உடையதாகிய அலங்காரம் (அணியி. 25)

**கருப்பொருள்**

1. காரணப் பொருள். அந்தக் காணலைக் கடந்த கருப் பொருளே (பதினொ. திருக்கழுமல மும்மணிக். 3)

2. ஐந்திணைகளுள் ஒவ்வொன்றுக்குமுரிய தெய்வ முதலிய பொருள்கள் (நம்பியகப். 19, உரை) அவை : தெய்வம், தலைவர், மாக்கள், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணா, பறை, யாழ், பண், தொழில்

**கருமச்சார்பு**

இரண்டன் உருபேயேற்ற செயப்படுபொருளைக் கருத்தோ மெய்யுருஞ் சார்பு (தொல். சொல். 84, சேனா.)

**கருமமல்லாச் சார்பு**

செயப்படுபொருளையேனும் ஆதாரத்தையேனும் கருத்தா மெய்யுறுதலின்றி வரும் சார்பு (தொல். சொல். 84)

**கருவியாகு பெயர்**

கருவி காரியத்துக்கு ஆகிவரும் பெயர். திருவாசகம் படித் தான் (நன். விருத். 290)

**கருவிளங்கனி**

மூன்று நிரையசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 7, உரை)

**கருவிளங்காய்**

நிரைநிரைநேர் கொண்ட மூவசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 7, உரை)

**கருவிளந் தண்ணிழல்**

நிரைநிரை நேர்நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப் 5, உரை)

**கருவிளந் தண்பூ**

நிரைநிரை நேர்நேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப், 5, உரை)

**கருவிள நறுநிழல்**

நிரைநிரைநிரைநிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 5, உரை)

**கருவிள நறும்பூ**

நிரைநிரைநிரைநேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 5, உரை)

**கருவிளம்**

இரண்டு நிரையசைச் சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப், 7)

**கலப்புறுமொழி**

இருதிணையிலும் வரும் சொல் (பேரகத். 139)

**கலப்பகக் கலி**

அடிகள் எழுத்தொவ்வாது வருங்கவி (யாப். வி. 95, 470)

**கலம்பகம்**

பலவகைச் செய்யுள்களாலாகிய பிரபந்தவகை (இலக். வி. 812)

**கலம்பக மாலை**

கலம்பகத்தின் சில உறுப்புக்கள் குறைந்து வரும் பிரபந்தம்.

2. பவழம் கலந்த மாலை. கலம்பக மாலையைப் பணியாக (ஈடு—அவ)

**கலவையணி**

நீரும் பாலும் போலப் பிரிக்க முடியாத பல அலங்காரம் விரவி வருவது (அணியி. பக். 43)

**கலி**

காண்க : கலிப்பா (தொல். பொ. 53) இடைச்சங்க காலத்து இயற்றப்பட்ட ஒரு நூல் (இறை, 1, உரை)

**கலித்தளை**

நேரீற்று உரிச்சீர் முன்னர் நிரை வருவது (யாப். 22)

**கலித்தாழிசை**

ஒத்துள்ள சிலவடிகளையேனும் பலவடிகளையேனும் பெற்று ஈற்றடி மிக்கு வருவதாகிய கலிப்பாவின் இனம் (யாப். 87)

**கலித்துறை**

நெடிலடி நான்கு கொண்டு வருவதாகிய கலிப்பாவின் இனம் (காரிகை, செய். 13) காண்க : கட்டளைக் கலித்துறை. கலித்துறைதானானூ நகப்பொருண்மேல் வாய்ந்தநற் கோவையாம் (வெண்பாப். செய். 15)

**கலிப்பா**

நான்கு பாக்களுள் ஒன்று (திவா.)

**கலியெழுத்து**

சங்கேத வெழுத்து வகை (யாப். 536)

**கலிவிருத்தம்**

அளவடிகள் நான்காலாகிய கலிப்பாவின் இனம் (யாப். வி. செய். 89, 333)

**கலிவெண்பா**

கலியோசை தழுவி ஈற்றடி வெண்பாப்போல முச்சீரடியான் வருவதான கலிப்பாவின் இனம் (யாப். 85)

**கலிவெண்பாட்டு**

காண்க : கலிவெண்பா. கலியோசை தழுவி ஈற்றடி வெண்பாப்போல முச்சீரடியான் வருவதான கலிப்பாவின் இனம் (யாப். 85)

**கலை**

ஒரு தாளப்பிரமாணம்

2. வண்ணப்பாட்டின் ஒரு பாகம்

**கலையொடு மலைவு**

செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**கவி**

பாவலன் (திவா.)

2. ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரமென்னும் பாட்டு (பிங்.)

**கவி கூற்று**

நூலுள் தன் கருத்தாகக் கவி கூறும் வார்த்தை. கவிக் கூற்றாகிய அதிகாரத்து (குறள்) அதி. 127

**கவிதை**

பாடல். பாருடன் றொண்டர் தம்மைக் கவிதை பனுவல் கொண்டு (திவ். பெரியதி. 7, 2, 2)

**கழங்குப் பருவம்**

பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்களுள் கழற்சிக்காய் கொண்டு ஆடுவதை வருணித்துக்கூறும் பருவம்.

**கழற்றெதிர் மறு-த்தல்**

பாங்கனுடைய உறுதிமொழியைத் தலைவன் கேளாது மறுத்தல் (திருக்கோ. 23, தலைப்பு)

**கழற்றெதிர்மறை**

தலைவன் பாங்கனுடைய உறுதிமொழியைக் கேளாது மறுத்துச் சொல்லும் சொல் (இறை. 3, 47)

**கழறியுரைத்தல்**

1. பாங்கன் தலைவனுக்கு இடித்துரைத்து உறுதி மொழி மறுத்தல் (திருக்கோ. 22, தலைப்பு)
2. இடித்துரைத்தல். அமைச்சன் அரசனுக்குக் கழறியுரைத்தான்

**கழனிலை**

இளைஞனொருவன் போரிற் புறங்கொடாமை கண்டு வியந்த வீரர் அவனுக்கு வீரக்கழலணிவித்துப் புகழ்ந்தாடும் புறத்துறை (தொல். பொ. 60)

**கழாற்றாக்கு**
ஆறு சீரளவுள்ள தாளவுறுப்பு (சிலப். 3, 16, உரை)

**கழிக்கரைப் புலம்பல்**
1. பிரிந்த தலைவனை நினைந்து தலைவி கடற்கரையி விருந்து கொண்டு தனியே இரங்குகை
2. சமுத்திர விலாசம் என்னும் பிரபந்தம்

**கழிநெடில்**
கழிநெடிலடி. ஐந்தின் மிக்க சீரால் வரும் அடி (காரிகை. உறுப். 12)

**கள்ளக்கவி**
1. பிறனொருவன் பாட்டைத் தனதென்று காட்டுபவன்
2. ஒருவனுக்காகப் பாடிய பாட்டை மற்றொருவனுக்குக் கொடுப்போன் (வெண்பாப். செய். 48, உரை)

**களவழி வாழ்த்து**
அரசன் போர்க்களத்துப் பெற்ற செல்வத்தைப் பாணர் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு.வெ. 9, 19)

**களவியல்**
1. அகப்பொருளுறுப்புக்களுள் ஒன்று (தொல்.)
2. இறையனாரகப்பொருள். சிறப்பினாற் பெயர்பெற்றது களவியல் என்பது (இறை. 1, உரை)

**களவுப் புணர்ச்சி**
தலைவனும் தலைவியும் பிறரறியாது தனியிடத்தில் எதிர்ப்பட்டுக் கூடுகை

**களவேள்வி**
பேய்கள் வயிறார உண்ணும்படி வீரன் போர் புரிந்து பகையழித்ததைக் கூறும் புறத்துறை (பு. வெ. 8, 6)

**களவொழுக்கம்**
காண்க : களவுப்புணர்ச்சி

**களியர் வண்ணம்**
குடியர் உண்டு குடித்து மகிழ்வதைச் சிறப்பித்துப்பாடும் வண்ணப்பாட்டு

**களிற்றியானை நிரை**
அகநானூற்றின் முதற்பகுதி

**களிற்றுடனிலை**
வீரனொருவன் யானையை வேலால் எறிந்து அதன்கீழ் இறந்துபட்டதைக் குறிக்கும் புறத்துறை (பு.வெ. 7, 20)

**களிறுதரு புணர்ச்சி**
தலைவன், தலைவியை யானையினின்று காத்தமை பற்றி அவ்விருவருக்கும் உண்டான கூட்டம் (இறை. 14, உரை, 95)

**கற்காண்டல்**
போரிற்பட்ட வீரனது உருவம் வகுப்பதற்கேற்ற சிலையைத் தெரிந்து கொள்வதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, பொதுவியற். 8)

**கற்கோணிலை**
போரிற்பட்ட வீரனது உருவம் வகுப்பதற்குத் தேர்ந்து கொண்ட கல்லைக் கைக்கொள்ளுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 10, பொதுவியற். 9)

**கற்பனை**
இல்லாததைக் கூட்டிச் சொல்லுகை. வருணனை

**கற்பியல்**
கற்பென்னும் கைகோளைப் பற்றிக் கூறும் அகப் பொருட் பகுதி

**கற்பு**
1. இல்லறப்பெண் தன் கணவனையன்றிப் பிறரை அக ஒழுக்கத்தில் நினையாமை. வான்றரு கற்பின் (மணி. 22, 53)
2. களவுக் கூட்டத்துக்குப் பின் தலைவன் தலைவியை விதிப்படி மணந்து இல்லறம் புரியும் ஒழுக்கம் (நம்பி. 26)
3. முல்லை (திவா.)
4. கல்வி. உலகந்தாங்கிய மேம்படு கற்பின் (பதிற்றுப். 59, 8)
5. தியானம். பலபுவனது நின்பாற் கற்பு வைத்துய்ய (திருவிளை. மாயப். 29)

**கற்பு முல்லை**
1. தலைவி தன் கொழுநன் நலத்தைப் பெருகச்சொல்லும் புறத்துறை (பு. வெ. 10, முல்லைப். 8)
2. கணவனைப் பிரிந்த தலைவி தனியிருந்து தன் நிறை காத்தலின் சிறப்பைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, முல்லைப். 9)
3. கணவனருளைத் தலைவி விருந்தோம்புஞ் செல்வத்தை வாழ்த்தும் புறத்துறை (பு. வெ. 10, முல்லைப். 10)

**கற்றோர் நவிற்சியணி**

குண மிகுதிக்குக் காரணமாகாததைக் காரணமாக்கிச் சொல்லும் அலங்காரம் (அணியி. 63)

**கன்னாடுதல்**

போரில் இறந்த வீரனது உரு வகுத்துப் பெயர் பொறித்த நடுகல்லினை நாட்டுதல் கூறும் புறத்துறை (பு.வெ. 10, பொதுவியற். 12)

**கன்னீர்ப்படுத்தல்**

1. போரிலிறந்த வீரனது நடுகல்லை நீராட்டும் புறத்துறை (பு. வெ. 10, பொதுவியற். 10)
2. போர் செய்து இறந்த வீரரது வீரச்செயலை வரைந்த கற்களைப் போர்க்களத்திலே மறவர் நிரைத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, பொதுவியற். 10)

**கனி**

மூவசைச் சீரில் இறுதியிலுள்ள நிரையசை. அந்தங் கனியா...வகுத்த வஞ்சிக்குரிச்சீர் (காரிகை. உறுப். 7)

**கனிச்சீர்**

கனி என்ற வாய்பாடு கொண்ட அசையை இறுதியிலுடைய வஞ்சியுரிச்சீர் (யாப். வி. 12)

## கா

**காஞ்சி**

1. வேற்று மன்னன் வந்துவிட அரசன் காஞ்சி மலர் சூடித் தன் காவலிடத்தைக் காக்கும் புறத்துறை (பு. வெ. 4, 17)
2. நிலையாமை. காஞ்சி சான்ற செரு (பதிற்றுப். 84,19)

**காஞ்சித்திணை**

1. வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமைகளைச் சாற்றும் புறத்திணை (தொல். பொ. 78)
2. வீரன் காஞ்சி மலர் மாலை யணிந்து பகைவர் முன் எதிரூன்றி நிற்றலைக் குறிக்கும் புறத்திணை. வட்கா ரெதிரூன்றல் காஞ்சி (பிங்.)

**காஞ்சி மாலை**

காஞ்சி மாலை சூடிப் பகைவரைத் தடுத்தற்கு எதிரூன்றி நிற்றலைக் கூறும் பிரபந்தம் (தொன். வி. 283, உரை)

**காஞ்சியெதிர்வு**

எதிரூன்றுஞ் சேனையை மேலிடாது தடுக்கும் வீரனுடைய திறமையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 4, 2)

**காட்சி**

1. தலைவன் தலைவியை முதன்முதற் காணுதலைக் கூறும் ஒரு கைக்கிளை (பு.வெ. 11, ஆண்பால்)
2. வீரர் வீரபத்தினியர்க்கு ஏற்றாடுகல்லை ஆராய்ந்து காணும் புறத்துறை (தொல். பொ. 60, சிலப். 25, அரும்.)
3. நடுகல்லை வீரர் தரிசித்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60, உரை)

**காட்சியணி**

காண்க : நிதரிசனம் (அணியி. 19)

**காடு வாழ்த்து**

எல்லோரும் இறந்து போகவும் தான் இறப்பின்றி நிலை பெற்ற புறங்காட்டை வாழ்த்தி உலக வியல்பை விளக்கும் ஒரு புறத்துறை (தொல். பொ. 79)

**காண்டம்**

நூலுட் பெரும்பிரிவு (பிங்.)

**காண்டிகை**

சூத்திரப்பொருளைச் சுருங்க விளக்கும் உரைவகை. சூத்திரம் புரைதப வுடன்படக் காண்டிகை புணர்ப்பினும் (தொல். பொ. 654)

**காதல்**

பிரபந்த விசேடம். கூளப்பநாயக்கன் காதல்

2. அன்பு. காதல் வேண்டி யெற்றுறந்து போதல் செல்லா வுயிர் (அகநா. 55)
3. பக்தி. காதலா னெஞ்சமன்பு கலந்திலேன் (திவ். திருமாலை. 26)
4. வேட்கை. காதலாற் காமபூமிக் கதிரொளியவரு மொத்தார் (சீவக. 189)
5. ஆவல்
6. மகன். இராவணன் காதல் (கம்பரா. பிரமா. 164)

**காதற்பரத்தை**

சேரிப் பரத்தையின் மகளாய்த் தலைவனது காதற்குரிமை பூண்டு அவனையே சார்ந்திருப்பவள் (ஐங்குறு. 90, உரை)

**காதற்பாங்கன்**
தலைவனுக்கு உற்ற நண்பன். மன்னவன்றனக்கு...காதற் பாங்கனாதலின் (மணி. 28, 125)

**காதற்றோழி**
தலைவியின் அன்புக்குரிய தோழி (திருக்கோ. 50. அவ.)

**காதைக்கரப்பு**
ஒரு செய்யுளை முடிய எழுதி அதன் ஈற்று மொழியுள் முதலெழுத்தைத் தொடங்கி ஓரோர் எழுத்து இடையிட்டுப் படிக்கப் பிறிதொரு செய்யுள் வரப் பாடும் மிறைக்கவி (இலக். வி. 690, உரை)

**காந்தம்**
உலக நடையைக் கடவாது பொதுவாக யாவரும் மகிழும்படிப் புகழ்வதாகிய செய்யுட்குணம் (தண்டி. 227)

**காந்தருவம்**
1. காதலர் தம்முள் மனமொத்துக் கூடும் கூட்டம் (தொல். பொ. 92, உரை)
2. இசைப்பாட்டு (சூடா.)

**காந்தருவப் புணர்ச்சி**
காண்க: காந்தருவம். காதலர் தம்முள் மனமொத்துக் கூடும் கூட்டம் (தொல். பொ. 92, உரை)

**காந்தன்**
1. கார்த்திகைப்பூ (காந்தன் மலராக்கால் [நாலடி. 283])
2. காந்தன் மலரணிந்து வேலன் வெறியாடுவதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60)
3. முருகக் கடவுளுக்குரிய காந்தனைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 9)
4. சவுக்காரம்

**காப்பியக் கலித்துறை**
நெடிலடி நான்காய் வருங் கலித்துறை (வீரசோ. யாப் 18. உரை)

**காப்பியம்**
அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகை உறுதிப் பொருள்களையும் கூறுவதாய்க் கதைபற்றி வரும் தொடர்நிலைச் செய்யுள் (காப்பியக் கவிகள் [சீவக. 1585])

**காப்புப் பருவம்**
இருபாற் பிள்ளைத்தமிழ் கூறும் பத்துப் பருவங்களுள் முதற் பருவம் (இலக். வி. 808, உரை)

**காப்புமாலை**
தெய்வங் காப்பதாக 3,5 அல்லது 7 கவிகளால் பாடப்படும் ஒரு பிரபந்தம் (இலக். வி. 832)

**காமக்கூட்டம்**
தலைவனும் தலைவியும் தம்முள் அன்பொத்துக் கூடும் கூட்டம். காமக்கூட்டம் காணுங்காலை (தொல். பொ. 92)

**காமத்துப்பால்**
காமத்தைப்பற்றிக் கூறும் பகுதி

**காமப்புணர்ச்சி**
இயற்கைப் புணர்ச்சி (தொல். பொ. 498)

**காமவின்னிசை**
செந்துறைப் பாட்டின் வகை (யாப். வி. 538)

**காய்ச்சீர்**
நேரீற்று மூவசைச்சீர் (யாப். வி. 1)

**காயத்திரி**
வடமொழிச் செய்யுள் வகை: 24 அசையால் ஆவது
2. நான்கு அடிகளுக்குமாக 24 உயிர் உள்ள சந்தம்

**கார்முல்லை**
பிரிந்த தலைவன் வருமுன் அவன் வருதற்குரிய கார்ப் பருவத்தின் குறியாக மேகம் முன் வந்ததைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, முல்லைப். 2)

**காரகக்கருவி**
தொழிலை இயற்றுவிக்குங் கருவி (தொல். சொல். 74, உரை)

**காரகம்**
வேற்றுமை யுருபேற்ற பெயர் வினை கொண்டு முடியும் நிலை (பி.வி. 8)

**காரகவேது**
தொழில் நிகழ்ச்சிக்குக் கருவியாயுள்ள ஏது? (தண்டி. 58, தலைப்பு)

**காரணக்குறி**
காரணப்பெயர். மழைக்க ணென்பது காரணக்குறியென வகுத்தாள் (கம்பரா. காட்சி. 6)

**காரணக்குறி மரபு**
காரணம்பற்றித் தொன்றுதொட்டு வழங்கும் பெயர்ச்சொல் (நன். 275)

**காரணக்குறியாக்கம்**
காரணம் பற்றிப் படைத்துக் கொள்ளும் பெயர்ச்சொல் (நன். 275, விருத்.)

**காரணச் சிறப்புப் பெயர்**
காரணத்தால் ஓரினத்தில் ஒன்றற்குச் சிறப்பாக வரும் பெயர்ச்சொல் (நன். 62, உரை)

**காரணப் பெயர்**
ஒரு காரணம்பற்றி வழங்கும் பெயர் (நன். 62, உரை)

**காரணப் பொதுப்பெயர்**
பல பொருட்குப் பொதுவாக வரும் காரணப் பெயர்ச்சொல் (நன். 62, உரை)

**காரணமறிநிலை**
அணி வகை (யாழ். அக.)

**காரணமாலை**
பின் பின்னாக வருவனவற்றிற்கு முன் முன்னாக வருவனவற்றைக் காரணங்களாகவேனும் காரியங்களாகவேனும் சொல்லும் அணி (அணியி. 46)

**காரணவாகு பெயர்**
திருவாசகம் என்றாற்போலக் காரணம் காரியத்திற்கு ஆகிவரும் பெயர்ச்சொல் (நன். 290, உரை)

**காரணவாராய்ச்சி**
காரணம் குறைவின்றியிருந்தும் காரியம் பிறவாமையைச் சொல்லும் அணி (அணியி. 35)

**காரணவிடுகுறி**
முக்கணன என்றாற்போல, சொல்லின் காரணங் கருதிய வழிப் பலர்க்குஞ் சொல்லினும், இடுகுறிபோல ஒரு பொருட்கே செலலும் பெயர்ச்சொல் (நன். 62, உரை)

**காரணவிலக்கணி**
காரணத்தைக் காரியமாகக் கூறும் அணி

**காரியகால லக்ஷ்ம்**
ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்றியைந்து தன் பொருளைப் பயப்பிக்கு முறை (தொல். சூத்திரவிருத்தி. பக். 17)

**காரியவாகுபெயர்**

காரியம் காரியத்திற்கு ஆகும் பெயர்ச்சொல். இந்நூல் அலங்காரம் (நன். 290, உரை)

**காரியவிலக்கு**

விலக்கணிவகை (யாழ். அக.)

**கால்**

1. ஒருவினையெச்ச விகுதி. பழவினை வந்தடைந்தக்கால் (நாலடி. 123)
2. ஏழனுருபுளொன்று (நன். 302)
3. ஓர் உபசர்க்கம். நூல் கால்யாத்த (பி. வி. 45)

**கால்கோள்**

1. தொடக்கம். கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி (சிலப். 5, 144)
2. போரில் இறந்த வீரனுருவைக் கல்லில் வகுக்கத் தொடங்குதலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60)

**காலப்பெயர்**

1. காலத்தைக் குறிக்கும் பெயர்ச்சொல் (நன். 290)
2. காலத்தின் அடியாக வந்த பெயர் (நன். 132, உரை)

**கால மயக்கம்**

காலவழுவமைதி (புறநா. 138, உரை)

**கால மயக்கு**

காண்க : கால மயக்கம். பிரிந்த தலைவன் வருதற்குரிய கார் காலம் இஃதன்றெனத் தலைவிக்குத் தோழி காலத்தை மயக்கிக் கூறும் அகத்துறை (திவ். இயற். திருவிருத். 7, பெரியவாச்.)

**காலமலைவு**

ஒரு காலத்துக்குரியதை மற்றொரு காலத்துக்குரியதாகக் கூறும் வழு (தண்டி. 117, உரை)

**காலவழு**

ஒரு காலச் சொல் தன்னொடு இயையாக் காலமொடு புணருங்குற்றம் (தொல். சொல். 11, சேனா.)

**காலவழுவமைதி**

கால வழுவை இலக்கணமுடையதாக அமைப்பது (நன். 383)

**காலவாகுப்பெயர்**
ஒரு காலத்தின் பெயர் அக்காலத்தோடு தொடர்புடைய பொருளுக்கு ஆகிவருவது (நன். 390)

**காலவிடைநிலை**
காலத்தைக் காட்டும் இடைநிலை

**காவற்பிரிவு**
தலைவன் நாடு காவற்பொருட்டுத் தலைவியைப் பிரியும் பிரிவு (திருக்கோ. 312, தலைப்பு)

**காவன்முல்லை**
அரசனாட்சியைச் சிறப்பிக்கும் புறத்துறை (பு.வெ. 8, 24)

**காவியம்**
1. பழையதோர் கதை பற்றி தொடர்நிலைச் செய்யுள் (திவா.)
2. கலம்பகம் பரணி முதலிய சிறு காப்பியம் (தண்டி.)

**காவிய குணம்**
செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி என்னும் பத்துச் செய்யுட் குணம் (தண்டி. 13)

**கானகக் கூத்து**
கூத்துவகை. கானகக் கூத்தும் கழைக் கூத்தும் ஆடுபவராகச் சாதி வரையறையிலராதலின் (தொல். பொ. 91, உரை)

**கானல்வரி**
கழிக்கரைப் பாடல் (சிலப். 6, 35, உரை)

## கி

**கிணைநிலை**
கிணைமகன் மருதநிலத்து வேளாளனைக் கிணை கொட்டிப் புகழும் புறத்துறை (பு.வெ. 8, 32)

**கிழமை**
1. ஒன்றற்கும் மற்றொன்றற்குமுள்ள தொடர்பைத் தெரிவிப்பதாகும் ஆறாம் வேற்றுமைப் பொருள். (நன். 300)
2. உரிமை. உணர்ச்சிதா னட்பாங் கிழமை தரும் (குறள். 785)
3. உறவு. இவருக்கும் அவருக்கும் என்ன கிழமை
4. சினேகம். எமர்நும் ரெழுவர்காறு நின்றது கிழமை (சீவக. 5441) வாரநாள் (திவா.)

**கிள்ளைவிடு தூது**

தலைவி தன் காதலுக்குரிய தலைவனிடத்துக் கிளியைத் தூது விடுதலைக் கூறும் பிரபந்தம்

**கிளவி**

மொழி (கிளவியாக்கம் [தொல். 1]), பேச்சு (அந்தீங்கிளவி [ஐங்குறு. 490]), பாஷை பதினென்கிளவி (கல்லா. 38, 3), அகப்பொருட்டுறை. களவிற்குரிய கிளவித் தொகை (நம்பியகப். 123)

**கிளவிக் கொத்து**

கோவைப் பிரபந்தத்தின் பலதுறை கொண்ட அதிகாரம். இவ்விருபத்தைந்தும் இந்நூற்குக் கிளவிக் கொத்து எனப் படும் அதிகாரங்களாம் (திருக்கோ. உரை, அவ.)

**கிளவிக்கோவை**

அகப்பொருட் கோவை. கிளவிக்கோவையின் எடுத்துக் கோடற்கண் காட்சி முதலாயின சொல்லுதல் வனப் புடைமையின் (திருக்கோ. 4, உரை)

**கிளவித் தலைவன்**

அகப்பொருட்டலைவன் (கலித். 68, உரை)

**கிளவியாக்கம்**

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் வழுவற மொழிகளை ஆக்குதற்குரிய விதிகளைக்கூறும் முதற்பகுதி

**கிளைப் பெயர்**

சுற்றத்தை உணர்த்தும் பெயர்

## கீ

**கீதம்**

இசைப்பாட்டு. மங்கைய ரமுதகீதம் (கம்பரா. கார்முக.40), 2. இசை. கீதமினிய குயிலே (திருவாசக. 18, 1)

**கீர்த்தனம்**

காண்க : கீர்த்தனை. ஓர் இசைப்பாட்டு. புகழ்ச்சி

**கீழ்க்கணக்கு**

அடிநிமிர் வில்லாச் செய்யுள் பலவற்றால் அறம், பொருள், இன்பங்களைப் பற்றிக் கூறும் நூல்வகை (பன்னிருபா. 346)

**கீழ்க்கதுவாய்**

காண்க : கீழ்க்கதுவாய்த்தொடை (இலக். வி. 722)

**கீழ்க்கதுவாய்த் தொடை**

அளவடியுள் ஈற்றயற் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக். வி. 723)

## கு

**குடக்கூத்து**

தனது பேரனாகிய அநிருத்தனை வாணன் சிறைப்படுத்த அவனது நகரவீதியிற் சென்று கண்ணன் குடமெடுத்தாடிய கூத்து (சிலப். 6, 55 உரை)

**குடிநிலை**

வீரக்குடியின் பழமையையும் அஞ்சாமையையுங் கூறும் புறத்துறை (பு. வெ. 2,14)

**குடைச்செலவு**

எதிர்த்து வந்த பகையைத் தடுத்துக் காக்கச் செல்லும்முன் தன் கொற்றக் குடையை நல்வேளையிற் புறவீடு விடும் காஞ்சித்திணைத்துறை (பு.வெ. 4,8)

**குடைநாட்கோள்**

பகையரணைக் கொள்ள நினைந்து மேற்சென்ற வேந்தன் தன் குடையை நல்வேளையிற் புறவீடு விடும் உழிஞைத் துறை (பு.வெ. 6, 2)

**குடைநிலை**

பகைமேற் செல்லும் அரசன் தன் குடையை நல்வேளையிற் புறவீடு வரும் வஞ்சித்திணைத்துறை (பு.வெ. 3,3)

**குடைமங்கலம்**

நான்கு திக்கும் கீர்த்தி மிக வீற்றிருந்த அரசனது குடையைப் புகழ்ந்து கூறும் பாடாண்துறை (பு.வெ.9,34)

**குடை முல்லை**

போரில் வெற்றி கொண்ட அரசனது குடையைப் புகழ்ந்து கூறும் வாகைத்துறை (பு.வெ. 8, 28)

**குணசந்தி**

அ, ஆ முன் இ, ஈ வந்தால் அவ்விரண்டும் கெட ஏகாரமும், உ, ஊ வந்தால் அவ்வாறே ஆகாரமுந் தோன்றி வடமொழிச் சந்தி (நன். 239, உரை)

**குணத்தொகை**

பண்புத்தொகை (நன். 365)

**குணப்பண்பு**

தன்மை குறிக்கும் பண்புச்சொல் (சீவக. 11, உரை)

**குணப்பெயர்**

1. பண்பு குறிக்கும் பெயர்ச்சொல் (நன். 132) கருமை, அழகு
2. பண்பின் அடியாகப் பிறந்த பெயர்ச்சொல்: கரியன், அழகன்
3. சிறப்பியல்பு பற்றி மக்கட்குப் புலவரால் கொடுக்கப் பட்டு வழங்கும் பெயர் (பன்னிருபா. 147)

**குணவாகுப்பெயர்**

பண்புப் பெயர் பண்பிக்கு ஆகி வருவது. நீலஞ் சூடினான்

**குணவேற்றுமை**

ஆறாம் வேற்றுமை (தொல். எழுத். 216, உரை)

**குணிப்பெயர்**

பண்பியைக் காட்டும் பெயர்ச்சொல்: கரியன்

**குதிரை மறம்**

போர்க் குதிரையின் திறப்பாட்டைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 7)

**கும்மி**

கும்மிப் பாட்டு

2. மகளிர் கைகொட்டிப் பாடியாடும் விளையாட்டு

**குரவை**

முல்லை அல்லது குறிஞ்சி நில மகளிர் தம்முட் கைக்கோத் தாடும் கூத்துவகை-ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை (சிலப்.)

**குழமகன்**

மாதர்கள் குழமகனைப் புகழும் ஒரு பிரபந்தம் (தொன். 283)

**குழூஉக்குறி**

சிற்சில கூட்டத்தார்க்குள் வழங்கும் சங்கேத மொழி (நன். 267)

**குழூஉப்பெயர்**

கூட்டம் பற்றி வரும் பெயர்ச்சொல்: சாதி குழூஉப்பெயர் (நன். 211)

**குளகம்**[1]

பல பாட்டுக்கள் ஒரு வினை கொள்ளும் அமைதி (தண்டி. 3)

**குளகம்**[2]
குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள் (பிங்.)

**குளபாகம்**
இலளிதமான செய்யுள் நடை.

**குற்றிசை**
1. குறுகிய சந்தம்
2. தலைவன் மனைவியைப் புறக்கணித்து அறநெறி பிறந்தொழுகுவதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 12, இருபாற். 17)

**குற்றியலிகரம்**
சார்பெழுத்துள் ஒன்று; அரை மாத்திரையாகக் குறுகிய இகரம் : கேண்மியா, நாகியாது (தொல். எழுத். 2)

**குற்றியலுகரம்**
சார்பெழுத்துள் ஒன்றாய்ப் பெரும்பாலும் மொழிகளின் ஈற்றில் அரை மாத்திரையாய்க் குறுகி வரும் உகரம் (தொல். எழுத். 2)

**குற்றுயிர்**
குறையுயிர். காண்க: குற்றெழுத்து. ஒரு மாத்திரையுள்ள உயிரெழுத்து: குற்றுயிரளபி னீரும் (நன். 108); (தொல். எழுத். 3)

**குற்றுழிஞை**
பகைவரது கோட்டை மதிலின் மேல் வீரனொருவன் தனியனாகவே நின்று தன் வீரப்பெருமையைக் காட்டுவது கூறும் புறத்துறை (பு.வெ. 6, 13)

**குற்றெழுத்து**
ஒரு மாத்திரையுள்ள உயிரெழுத்து (தொ. எழுத். 3)

**குற்றொற்று**
குற்றெழுத்தின் பின்வரும் மெய்யெழுத்து

**குறட்டாழிசை**
நாற்சீரின் மிக்க சீர்களால் வரும் அடியிரண்டாய் ஈற்றடி குறைந்து வருவனவும், வேற்றுத்தளை தட்டுக் குறள் வெண்பாவிற் சிதைந்து வருவனவுமாகிய பாவினம் (காரிகை. செய். 9, உரை)

**குறட்பா**
காண்க : குறள் வெண்பா : முதலடி நாற்சீரும் இரண்டாமடி முச்சீருமாகி வரும் ஈரடி வெண்பா (இலக். வி. 730, உரை)

**குறத்திப் பாட்டு**

தலைவிக்கு, அவளது காதல் முதலியவற்றைப் பற்றிக் குறத்தி குறி சொல்வதைக் கூறும் ஒரு பிரபந்தம் (தொன். வி. 283)

**குறம்**

குறவர் கூற்றாக வரும் கலம்பக உறுப்புள் ஒன்று: தவங்குற மறம் பாண் (இலக். வி. 812)

2. குறத்தி சொல்லுங்குறி. காண்க : குறத்திப் பாட்டு

**குறள்**

குறளடி : இரு சீரான் வரும் அடி (இலக். வி. 719)

2. குறள் வெண்பா : முதலடி நாற்சீரும் இரண்டாமடி முச்சீருமாகி வரும் ஈரடி வெண்பா (இலக். வி. 730, உரை)

**குறள் வெண்பா**

முதலடி நாற்சீரும் இரண்டாமடி முச்சீருமாகி வரும் ஈரடி வெண்பா (இலக். வி. 730, உரை)

**குறளடி**

இருசீரான் வரும் அடி (இலக். வி. 719)

**குறவஞ்சி**

காணக : குறத்திப் பாட்டு

**குறளடி வஞ்சிப்பா**

குறளடியால் மூன்று முதற் பலவடி கொண்டு, தனிச் சொல்லுஞ் சுரிதகமும் பெற்றுவரும் வஞ்சிப்பா (காரிகை. செய். 24)

**குறிச்சூத்திரம்**

ஒரு நூலிற் பயின்று வரும் குறியீடுகளைத் தெரிவிக்கின்ற சூத்திரம் (நன். 20)

**குறிஞ்சி**

1. ஐவகை நிலத்துள் ஒன்றாகிய மலையும் மலை சார்ந்த நிலமும் : குறிஞ்சி யெல்லையி னீங்கி (சீவக. 1563)
2. புணர்தலாகிய உரிப்பொருள் : குறிஞ்சி சான்ற... மலை (மதுரைக். 300)

**குறிஞ்சிப் பண்**

நால்வகைப் பெரும் பண்களுள் ஒன்று (பிங்.)

**குறிப்பிடைச் சொல்**

ஆங்கிலத்தில் ஒரு பொருளைச் சுட்டிக் காட்டவுதவும் உரிச்சொல்வகை

**குறிநிலையணி**

புகழ் பொருளையுணர்த்தும் சொற்களால் குறித்தறிதற்குத் தகுதியாகிய பிறிதொரு பொருளையும் சொல்லும் அணி (அணியி. 73)

**குறிப்பு**

வெளிப்படையாகவின்றிப் பொருளுணர்த்துஞ் சொல் : இன்ன பிறவுங் குறிப்பின் றருமொழி (நன். 269)

**குறிப்புச் சொல்**

சொல்லுவோன் குறிப்பினால் நேர்பொருளன்றி வேறு பொருளை உணர்த்துஞ் சொல் (குறள். 711, உரை)

**குறிப்பெச்சம்**

கூறிய சொற்களைக் கொண்டு அவற்றின் கருத்தாகக் கொள்ளும் பொருள் (குறள். 411, உரை)

**குறிப்புப் பெயரெச்சம்**

செயலையுங் காலத்தையும் வெளிப்படையாகக் காட்டாத பெயரெச்சம்

**குறிப்புப் பொருள்**

குறிப்பாலுணரப்படும் பொருள் (நன். 259, விருத்.)

**குறிப்பு முற்று**

காண்க : குறிப்பு வினைமுற்று (நன். 351), காண்க : குறிப்பு வினை. பொருட் பெயர் இடப்பெயர் முதலியவற்றின் அடியாகப் பிறந்து செயலையும் காலத்தையும் வெளிப்படையாகக் காட்டாமல் வினைத்தன்மையைக் கொண்டுள்ள சொல் (நன். 321, உரை)

**குறிப்பு மொழி**

குறிப்புச் சொல். சொல்லுவோன் குறிப்பினால் நேர் பொருளன்றி வேறுபொருளை உணர்த்துஞ் சொல் : எழுத்தொடுஞ் சொல்லொடும் புணராதாகிப் பொருட் புறந்ததுவே குறிப்பு மொழியென்ப (தொ. பொ. 491)

**குறிப்புருவகம்**

குறிப்பினாற் பெறப்படும் உருவகவணி (குறள். 1030, உரை)

**குறிப்புவமை**

குறிப்பாலுணரப்படும் உவமையணி (தொல். பொ. 278, உரை)

**குறிப்புவினை**

பொருட்பெயர் இடபெயர் முதலியவற்றின் அடியாகப் பிறந்து செயலையும் காலத்தையும் வெளிப்படையாகக்

காட்டாமல் வினைத்தன்மையைக் கொண்டுள்ள சொல் (நன். 321, உரை)

**குறிப்பு வினைமுற்று**
காண்க : குறிப்பு வினை (நன். 323, உரை)

**குறிப்பு வினையாலணையும் பெயர்**
முன்பு குறிப்பு வினையாய்ப் பின்பு பொருள்களைக் குறித்தற்கு வரும் பெயர் (நன். 321, விருத்.)

**குறிப்பு வினையெச்சம்**
தொழில் காலங்களைக் குறிப்பாகக் காட்டும் வினையெச்சம் (நன். 342, உரை)

**குறியிடம்**
தலைவனும் தலைவியும் கூடுதற்குக் குறித்த இடம்.

**குறியிடையீடு**
தலைவனுந் தலைவியுங் குறித்தவிடத்துக் கூடாதவாறு நேரும் இடையூறு (நம்பியகப். 155)

**குறில்**
1. குற்றெழுத்து (நன். 64)
2. குறுமை : குறினெடி வளவுசான்ற கூளியும் (கந்தபு. விண்குடி. 44)

**குறுக்கல்**
1. நெடிலைக் குறிலாக்குஞ் செய்யுள் விகாரம் (நன். 155)
2. குறைக்கை

**குறுங்கலி**
1. தன் மனைவியை விரும்பாது விகற்பித்த ஒருவனுடைய காதல் கெடும்படிச் சொல்லும் புறத்துறை (பு. வெ. 12, இருபாற்பெ. 18)
2. பாலையாழ்த் திறத்தொன்று (திவா.)

**குறுஞ்சீர் வண்ணம்**
குற்றெழுத்துப் பயின்று வரும் சந்தம் (தொல். பொ. 533)

**குறுநிலை வழக்கு**
குழூஉக்குறி வழக்கு (நேமி. சொல். 10, உரை)

**குறுவஞ்சி**
படையெடுத்து வந்த பெருவேந்தனுக்குச் சிறு வேந்தன் பணிந்து திறை கொடுத்துத் தன் குடிகளைப் புரக்கும் புறத்துறை (பு. வெ. 3, 17)

**குன்றக்கூறல்**

பத்து வகை நூற்குற்றங்களுள் கூறவேண்டியதைக் குறைவுப்படக் கூறுதலாகிய குற்றம் (தொல். பொ. 664)

## கூ

**கூட்டம்**

1. கூடுகை
2. திரள் (திவா.)
3. சபை (பிங்.)
4. இனத்தார்
5. நட்பினர்
6. வகை
7. மெய்யுறுபுணர்ச்சி : எவ்வனையார் கூட்டம் புணராமல் (பு. வெ. 11, ஆண்பாற். 8)

**கூட்டவணி**

ஒரு காலத்திலுண்டாகும் பல தொழில்களின் கூட்டத்தைக் கூறுவதாகவேனும் தனித்தனியே தொழிலை விளைத்தற்குரிய பல காரணங்கள் ஒன்று கூடியதால் ஒரு தொழில் பிறப்பதாகக் கூறுவதாகவேனும் வரும் ஓரலங்காரம் (அணியி. 55)

**கூடாமையணி**

அசம்பவாலங்காரம் (அணியி. 36)

**கூடாவுவமை**

மருட்கையுவமை (தண்டி. 33)

**கூடைப்பாடல்**

சொற்செறிவும் இசைச் செறிவும் உடைய பாடல் (சிலப். 3, 67 உரை)

**கூத்தராற்றுப்படை**

பரிசில் பெற விழைந்த கூத்தனைப் பரிசில் பெற்றவன் ஒரு தலைவனிடம் ஆற்றுப்படுத்தும் புறத்துறை (பு. வெ. 9, 29)

**கூவிளங்கனி**

நேர்நிரைநிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 7, உரை)

**கூவிளங்காய்**
நேர்நிரைநேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப். 7, உரை)

**கூவிளந்தண்ணிழல்**
நேர்நிரைநேர்நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 8, உரை)

**கூவிளந்தண்பூ**
நேர்நிரைநேர்நேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 8, உரை)

**கூவிளநறுநிழல்**
நேர்நிரைநிரைநிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 8, உரை)

**கூவிளநறும்பூ**
நேர்நிரைநிரைநேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 8, உரை)

**கூவிளம்**
நேர்நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 7, உரை)

**கூழை**
காண்க: கூழைத்தொடை. அளவடியுள் இறுதிச் சீர்க் கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக். வி. 723, உரை)

**கூழைத் தொடை**
அளவடியுள் இறுதிச் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக். வி. 723, உரை)

**கூறியது கூறல்**
முன் மொழிந்ததனையே பயனின்றிப் பின்னும் மொழிவ தாகிய குற்றம்: கூறியது கூறல் மாறுகொளக் கூறல் (தொல். பொ. 664)

**கூன்**
செய்யுளில் அளவுக்கு மேல் வரும் அசையும் சீரும்: சீர் கூனாத நேரடிக் குரித்தே (தொல். பொ. 361)

## கே

**கேசாதிபாதம்**
கலிவெண்பாவால் ஒருவரை முடி முதல் அடிவரை வருணிக்கும் பிரபந்தம் (இலக். வி. 871)

**கேட்போர்**

1. இன்னார் கூற இன்னார் அதனைக் கேட்டாரென்னும் அகப்பாட்டுறுப்பு (இறை. 56, உரை)
2. அவைக்களத்துத் தலைமை வகித்து அரங்கேறும் நூலைக் கேட்டவர்: யார் கேட்டாரெனின்......... உருத்திர சருமன் என்பது (இறை. 1,4)
3. நூல் கேட்டற்கு அதிகாரிகளான மாணாக்கர் (நன். 47)

## கை

**கைக்கிளை**

1. ஒருதலைக்காமம்: கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் (தொல். பொ. 1)
2. ஐந்து விருத்தச் செய்யுளில் ஒருதலைக்காமத்தைப் பற்றிக் கூறும் பிரபந்தம் (இலக். வி. 827)

**கைக்கிளைத் திணை**

கைக்கிளை பற்றிக் கூறும் திணை (தொல். பொ. 1, உரை)

**கைக்கிளை மருட்பா**

கைக்கிளைப் பொருண்மை கூறும் மருட்பா

**கைகோள்**

தலைவன் தலைவியரின் களவு கற்பொழுக்கங்கள் (தொல். பொ. 498, உரை)

**கையறு கிளவி**

தாய் துஞ்சாமை, நாய் துஞ்சாமை முதலாய காப்பு மிகுதி சொல்லி வரவு விலக்குதலைக் கூறும் அகத்துறை (களவியற். 99)

**கையறுநிலை**

1. தலைவனேனும் தலைவியேனும் இறந்தமைக்கு அவர் ஆயத்தார் முதலானோர் செயலற்று மிக வருந்தியமை கூறும் புறத்துறை: கழிந்தோர்—தௌத் தழி படருறீஇ, ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும் (தொல். பொ. 79)
2. செய்கழன் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர், கையற வுரைத்துக் கை சோர்ந்தன்று (புற. வெ. 14)
3. கையறுநிலையைப் பற்றிய பிரபந்தம்

# கொ

**கொச்சகக் கலிப்பா**
தரவு, தரவிணை, சிஃறாழிசை, பஃறாழிசை, மயங்கிசை என்னும் ஐம்பிரிவுடைய கலிப்பாவகை (யாப். வி. 81)

**கொச்சகம்**
காண்க: 1. கொச்சகக் கலிப்பா (காரிகை.செய். 12)
2. ஆடையுள் ஒருவழிக் கொய்தடுக்கிக் கட்டுவது (தொல். பொ. 433, உரை)
3. அம்போதரங்க வுறுப்புக்களுள் ஒன்று (தொல். பொ. 464)
4. பரிபாடலுறுப்புக்களுள் ஒன்று (தொல். பொ. 433)

**கொடி நிலை**
1. திரிமூர்த்திகளின் கொடிகளுள் ஒன்றனோடு அரசன் கொடியை உவமித்துப் புகழும் புறத்துறை (பு.வெ. 9, 39)
2. கீழ்த்திசையில் நிலையாக உதிக்கும் சூரியன் : கொடி நிலை கந்தழி வள்ளி (தொ. பொ. 88)

**கொடை**
1. தியாகம் : இல்லான் கொடையே கொடைப்பயன் (நாலடி. 65)
2. கைக்கொண்ட நிரையை இரவலர்க்கு வரையாது கொடுக்கும் புறத்துறை : உண்டாட்டுக் கொடையென (தொல். பொ. 58)

**கொடை மடம்**
வரைவின்றிக் கொடுக்கை. கொடைமடம் படுத லல்லது (புறநா. 142, 5)

**கொடை வஞ்சி**
போரில் வென்று கொண்ட பொருளைப் பாடிய பாணர்க்கு அரசன் பரிசாக அளிப்பதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 3, 16)

**கொடை வீரம்**
தியாகத்தில் காட்டும் வீரம் : கொடை வீரமோ...சென்னி பண்பு (பெருந்தொ. 743)

**கொண்டுகூட்டு**
எண்வகைப் பொருள்கோளுள் செய்யுளின் அடிகள் பல வற்றிலும் உள்ள சொற்களைப் பொருளுக்கு ஏற்ற

விடத்தில் எடுத்துக் கூட்டிப் பொருள் கொள்ளுமுறை : கொப்புடை மொழிகளை ஏற்புழியிசைப்பது கொண்டு கூட்டே (நன். 418)

**கொண்டுகூற்று**

அயலார் நேரிற் சொல்வதாகக் கூறும் மொழி : கொண்டு கூற்றாகக் கூறப்படுவனவும் (தொல். பொ. 115, உரை)

**கொண்டுதலைக்கழிதல்**

தலைவியைத் தலைவன் உடன்கொண்டு போதலைக் கூறுந்துறை (தொல். பொ. பக். 64)

**கொண்டுநிலை**

குரவைக் கூத்தில் தலைவனது வரைவு வேண்டிப் பாடும் பாட்டு : என்றியாங் கொண்டுநிலைபாடி யாடுங் குரவையை (சிலப். 24, இறுதிப்பாட்டுமடை)

**கொண்டுநிலைக்கூற்று**

இறந்து படாமல் தன் மகனைத் தாங்கிக் கூறுந் தோழியின் சொல். இதனைக் கொண்டுநிலைக்கூற்றென்று சொல்வது (இறை. 9, உரை)

**கொற்ற வஞ்சி**

பகைவரை வாளோச்சி அழித்த அரசனது புகழைப் பெருகவுரைக்கும் புறத்துறை (பு. வெ. 3, 7)

**கொற்ற வள்ளை**

1. பகைவர் தேசம் கெடுவதற்கு வருந்துவ்தைக் கூறுமுகத் தான் அரசன் கீர்த்தியைச் சொல்லும் புறத்துறை (பு. வெ. 3, 8)
2. பகைவர் நாடழிகை (திவா.)
3. தோற்ற வேந்தன் கொடுக்குந் திறை (தொல், பொ. 63, உரை)

**கொற்றவுழிஞை**

பகைவர் பதியைக் கைக்கொள்ளுதற் பொருட்டு அரசன் படையெடுத்துச் செல்லுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 5)

**கொற்றவை நிலை**

துர்க்கைக்குப் பலியிட்டுப் பரவும் புறத்துறை (தொ. பொ. 59)

## கோ

**கோமூத்திரிகை**

ஒரு செய்யுளின் முன்னிரண்டடி மேல் வரியாகவும் பின்னிரண்டடி கீழ்வரியாகவும் எழுதி அவ்விரண்டுவரியின் எழுத்துக்களையும் கோமூத்திர ரேகைபோல் மாறிமாறிப் படிக்க அச்செய்யுளாகும்படி அமைத்துப் பாடும் சித்திர வகை (தண்டி. 95)

**கோயிற்றூக்கு**

தாளவகை (சிலப். 14, 150 உரை)

**கோவை**

1. கோக்கை : கோவையார் வடக் கொழுங்கவரு (கம்பரா. வரைக். 1)
2. வரிசை
3. அகப்பொருட் கோவை : நற்றமிழ்க் கோவை யுரை செய்த (பிரமோத். கடவுள்)

**கோவைக் கலித்துறை**

காண்க : கட்டளைக் கலித்துறை (வீரசோ. யாப். 18, உரை)

**கோவைத்துறை**

கோவை நூலில் அமைந்த அகப்பொருட்டுறை

**கோழிவென்றி**

சேவலின் போர் வெற்றியைக் கூறும் புறத்துறை (பு. வெ. 12, வென்றிப். 6)

## ச

**சக்கரச் சக்கரம்**

சித்திரகவி வகை

**சக்கரபந்தம்**

வண்டிச் சக்கரம் போன்ற சித்திரத்திலே அமையுமாறு பாடும் மிறைக்கவி (மாறனலங். 281)

**சங்கத்தமிழ்**

1. சங்க காலத்து வழங்கிய உயர்ந்த தமிழ் : சங்கத்தமிழ் மாலை முப்பதும் (திவ். திருப்பா. 30)
2. சங்க காலத்துத் தமிழ் நூல் : சங்கத் தமிழ் மூன்றுந்தா (நல்வழி, கடவுள் வாழ்.)

**சங்கப் பலகை**

தகுதியுள்ள புலவர்க்கு மட்டும் இடங்கொடுக்கக் கூடிய தாய்ச் சிவபிரானாற் சங்கத்தார்க்கு அருளப்பெற்ற ஒரு தெய்வப்பலகை: சங்கப் பலகையாங் தொட்டியிலேற்றி (சீகாளத்தி. பு. பாயி. 15)

**சங்கப் புலவர்**

முதற் காலத்தே மதுரையிலிருந்த தமிழ்ச் சங்கப் புலவர்கள்

**சங்கம்**

1. கூட்டம்: சங்கமாகி வெங்கிணை வீக்கமொரு (பெருங். மகத. 17, 38)
2. சபை: புலம்புரிச் சங்கம் பொருளோடு முழங்க (மணி. 7, 114)
3. பாண்டியர் ஆதரவு பெற்று விளங்கிய தலைச் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்ற முச்சங்கங்கள்: எம்மைப் பவம்தீர்ப்பவர் சங்கமிருந்தது (பெரியபு. முத்திநா. 7)

**சங்கீரணம்**

கலவையணி. கலப்பு

**சதகம்**

நூறு பாடல்கள் உள்ள பிரபந்தவகை (இலக். வி. 847)

**சதுரங்க பந்தம்**

சதுரங்கக் கட்டத்தில் எழுத்துக்கள் முறைப்படி அடையப் பாடப்பெறும் மிறைக்கவி வகை (மாறனலங் 299, உரை)

**சந்தக்கவி**

காண்க: சந்தப் பாட்டு. நான்கெழுத்து முதல் இருபத்தாறெழுத்து வரையுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை (திவா.); காண்க: சந்தவிருத்தம். சந்தக்குழிப்பின்படி அமைந்த செய்யுள்.

**சந்தக்குழிப்பு**

சந்தச் செய்யுளின் ஓசை வாய்பாடு

**சந்தசு**

யாப்பு

2. வேதாங்கங்களுள் ஒன்றான யாப்பிலக்கணங் கூறும் நூல்: சந்தக முதலிய ஆறங்கங்களும் (வேதா. சூ. 6, உரை)

**சந்தத் தாண்டகம்**
சந்த வடியும் தாண்டக வடியும் விரவி ஓசை கொண்டு வரும் செய்யுள் (யாப். வி. 94, பக். 455)

**சந்தப்பா**
காண்க : சந்தப்பாட்டு. நான்கெழுத்து முதல் இருபத்தாறெழுத்து வரையுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை (திவா.)

**சந்தப் பாட்டு**
நான்கெழுத்து முதல் இருபத்தாறெழுத்து வரையுள்ள அடிகள் நான்கு கொண்ட பாவகை. காண்க : சந்த விருத்தம்.

**சந்தயம்**
1. சந்தேகம்: சந்தயந் தீரீர் (மாறனலங். 303)
2: ஐயவணி (மாறனலங். 136)

**சந்தம்**
1. செய்யுளின் வண்ணம்
2. வேதத்தில் வரும் யாப்பிலக்கணத்தைக் கூறும் வேதாங்க நூல்: கற்பங்கை சந்தங்கால் (மணி. 27. 100)

**சந்தவடி**
நான்கு முதல் இருபத்தாறு வரையும் உள்ள எழுத்துக்களால் இயன்ற விருத்தத்தின் அடி (யாப்.வி. 95, பக். 455)

**சந்தவிருத்தம்**
சந்தக் குழிப்பின்படி அமைந்த செய்யுள்

**சந்தி**
1. எழுத்துப் புணர்ச்சி
2. கூடுகை
3. நட்பாக்குகை
4. வரிக்கூத்து வகை (சிலப். 3, 13, உரை)

காண்க: நாடகசந்தி. முகம், பிந்திமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்று ஐவகைப்பட்ட நாடகக் கதைப் பொருத்து (சிலப். 3, 13, உரை)

**சந்தியக்கரம்**
இரண்டு உயிரெழுத்துக்கள் கூடி அமைவனாகிய ஏ, ஐ, ஓ, ஔ என்னும் எழுத்துக்கள் (பி.வி. 5, உரை)

**சந்தியிசை**

செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**சந்திரகணம்**

நூலின் முதற் செய்யுளின் முதலில் அமையும்படிப் புளி மாங்காய் என்னும் வாய்பாடுபற்றி வரும் நற்கணச் சீர்வகை (பிங்.)

**சந்தேகாலங்காரம்**

காண்க : ஐயவணி

**சப்பாணி**

கைகொட்டுகை (செங்கீரைதால் சப்பாணி [இலக். வி. 806])

**சப்பாணிப் பருவம்**

பிள்ளைத்தமிழில் பிரபந்தத்திற்கு உரிமை பூண்ட குழந்தையைக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டும் பருவம்

**சமசந்தத் தாண்டகம்**

சந்த வடியும் தாண்டகவடியும் ஒத்து வரும் பாவினம் (யாப். வி. 94, பக். 456)

**சமநிலை[1]**

1. நடுவுநிலைமை
2. வன்மை மென்மை இடைமை இம்மூன்றுஞ் சமமாகக் கலந்துவரத் தொடுக்கும் செய்யுட்குணம் (தண்டி. 17)
3. நிறையொத்த நிலை

**சமநிலை[2]**

சாந்தம் என்னும் சுவை : மற்றிவ் வெட்ட னோடுஞ் சமநிலைகூட்டி (தொல். பொ. 251, உரை)

**சமநிலை மருட்பா**

வெண்பாவடியும் ஆசிரியப்பாவடியும் ஒத்துவரும் மருட்பா வகை (இலக். வி. 749, உரை)

**சமநிலை வஞ்சி**

இரு சீரடியால் வரும் வஞ்சிப் பாட்டு (தொல். பொ. 354, உரை)

**சமநிலை வெண்பா**

காண்க : சவலை வெண்பா. தனிச்சொலின்றி இரண்டு குறள் வெண்பாக்களை இணைத்துச் செய்யும் வெண்பா (மாறனலங். 198, உரை)

**சமபாத விருத்தம்**

இசைப்பாவகை (சிலப். 6, 35, உரை)

**சமம்**

ஒத்த அடிகளுள்ள விருத்தம் (வீரசோ. யா. 33, உரை)

**சமாகிதம்**

ஒருவன் முயலும் தொழிலின் பயன் அத்தொழிலால் நிறைவுறாது வேறொரு தொழிலால் நிறைவுறுவதாக கூறும் அணி (தண்டி. 71)

**சமாசோக்தி**

காண்க : 1. ஒட்டணி (தண்டி. 51, உரை)

2. அடைமொழி ஒப்புமையாற்றல்களால் அல் பொருட் செய்தி தோன்றப் புகழ் பொருட் செய்தியைச் சொல்லும் அணி (அணியி. 23)

**சமாதி**

ஒன்றன் விலையை ஒப்புடைப் பொருள்மேல் ஏற்றிச் சொல்லுகையாகிய செய்யுட்கணம் (தண்டி. 24)

**சமானாதிகரண சம்பந்தம்**

ஒரே வாக்கியத்தில ஒரு பொருளையே பற்றி வரும் பல சொற்களுக்குள்ள சம்பந்தம் (வேதா. சூ. 117)

**சமானார்த்த பதம்**

ஒரு பொருட் பன்மொழி (பி.வி. 18)

**சமுத்திரவிலாசம்**

தன்னைப் பிரிந்திருக்கும் தலைவனைக் குறித்துத் தலைவி கடற்கரையிலிருந்து புலம்புவதாகப் பாடும் பிரபந்தவகை

**சமுற்கம்**

இரண்டு அல்லது பல அடிகள் சொல்லளவில் ஒத்தும் பொருளளவில் வேறுபட்டும் வரும் இறைக்கவி

**சரமகவி**

இறந்தவர் மீது இரங்கிப் பாடும் கவி. இரங்கற்பா

**சலாபச் சக்கரம்**

சித்திரகவி வகை

**சவலை**

1. மின்னல்
2. அடியளவு குறைந்தும் மிக்கும் வரும் பாட்டு
3. இசைப்பா வகையுள் ஒன்று (சிலப். 6, 35, உரை)

**சவலை வெண்பா**

காண்க : சமநிலை வெண்பா

**சனிபுருடச் சக்கரம்**
சித்திரகவி வகை

## சா

**சாக்கைக்கூத்து**
அரசரது கருமத்தலைவர் சாக்கையன் ஆடுங் கூத்து

**சாத்துக்கவி**
சிறப்புப் பாயிரக் கவி

**சாத்துவதி**
அறம் பொருளாகவும் தெய்வமானிடர் தலைவராகவும் வரும் நாடகவிருத்தி : "அவன் சாத்துவதி...பாரதியென வினவ" (சிலப். 3 : 13 உரை)

**சாதகம்**
கலியுகம், சகாப்தம், வருஷம், மாதம், தேதிகள் அடங்கிய தலைவன் சாதகத்தைக் கூறும் பிரபந்தம் (பன்னிருபா. 172)

**சாதுரியவணி**
அணிவகை

**சாயல்வரி**
வரிப்பாட்டுவகை (சிலப். 7, 43, உரை)

**சார்த்துகவி**
ஒருவன் கவியிசையில் வேறொரு செய்யுட் புணர்ப்போன் (வெண்பாப். செய். 48, உரை)

**சார்த்துவகை**
தலைமை வகையானன்றி உவமையாகிய சார்பு வகையாற் கூறும் முறை. அகத்திணைக்கண் சார்த்து வகையான் வந்தன வன்றித் தலைமை வகையாக வந்தில என்பது (தொல். பொ. 54, உரை)

**சார்த்துவரி**
பாட்டுடைத் தலைவன் பதியொடும் பேரோடும் சார்த்திப் பாடும் வரிப்பாட்டு வகை (சிலப். 7,7, அரும்.)

**சார்புநூல்**
நூல்வகை மூன்றனுள் முதனூல், வழி நூல்களோடு பொருண்முடிபு ஒருபுடையொத்து ஒழிந்தன ஒவ்வாமை யுடைய புடைநூல் (நன். 8, உரை)

**சார்பெழுத்து**

தொல்காப்பியர் கொள்கைப்படி மூன்றும், நன்னூலார் கொள்கைப்படிப் பத்துமான குற்றியலுகரம் முதலிய சார்பில் தோன்றும் எழுத்து (நன். 60)

**சாரியை**

சார்ந்துவரும் இடைச்சொல் (தொல். எழுத். 18)

**சால்பு முல்லை**

சான்றோருடைய அமைதியைக் கூறும் புறத்துறை (புறப். வெ. 8, 31)

**சாவெழுத்து**

காண்க: நச்செழுத்து. பிரபந்தத்தின் முதற்சொல் மங்கல மொழி யல்லாதவிடத்து ஆதிமொழிக்கண் வருதற்கு ஆகாதனவென்று விலக்கப்படும் ய் ர் ல் ள்; யா, ரா, லா' ளா, யோ, ரோ, லோ, ளோ; ஃ, மகரக்குறுக்கம், அளபெடை ஆகிய எழுத்துக்கள் (இலக். வி. 780)

**சாழல்**

1. மகளிர் விளையாட்டு வகை (மற்று மங்கையர் சாழலாம் விளையாடலாக [திருவாத. 4. புத்தரை.86])
2. முன்னிரண்டடிகள் வினாவும் பின்னிரண்டடிகள் விடையுமாகவும் அவ்விடையிறுதியில் 'சாழலோ, என்ற சொல்லுடையதாகவும் வரும் பாடல்களை யுடைய பிரபந்தம் (திவ்வி. பெரியதி. 11, 5)
3. வரிக்கூத்து வகை (சிலப். 3,13, உரை)
4. கரடி (அக.நி.)

**சாற்றுப்பாட்டு**

திவ்வியப் பிரபந்தம் ஓதி முடிக்கும்போது சிறப்புத் தோன்ற அனுசந்திக்கும் அதன் இறுதிப் பாசுரங்கள்

## சி

**சிங்காரம்**

1. நவரசத்துள் ஒன்றாகிய இன்பச்சுவை (சூடா.)
2. சித்திரகவி பாடுவோன் (சங். அக.)

**சித்திரவண்ணம்**

நெடிலும் குறிலும் ஒப்ப விரவிய சந்தம் (தொல். பொ. 534)

**சித்து**

இரசவாதிகள் தம் திறமையைத் தலைவனுக்கு எடுத்துக் கூறுவதாக ஒரு பொருள் தோன்றுமாறு அமைக்கப்படும் கலம்பகத்தின் உறுப்பு (பன்னிருபா. 211)

**சிந்து**

1. சிந்தடி: மூச்சீரடி (தொ. பொ. 349)
2. இசைப்பாவகை
3. பண்

**சிந்தியல் வெண்பா**

மூன்றடியாலமைந்த வெண்பாவகை (காரிகை. செய். 5, உரை)

**சிருங்காரநிலை**

இறந்துபட்ட வீரனது மார்பை அவன் மனைவி போர்க்களத்துத் தழுவுதலைக் கூறும் புறத்துறை (புறப். வெ. 7, 24)

**சிலேடை**

1. செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என்ற இரு பிரிவுடையதாய், ஒரு வடிவாக நின்ற சொற்றொடர் பல பொருளுடையதாக வரும் அணி (தண்டி. 75)
2. இனிய சொற்றொடர்: அயன் சிருஷ்டி சிலேடையா யுகைக் குரைத்தேன் (ஞானவா. தாசூர. 53)

**சிற்றிசை**

வெண்டுறைச் செந்துறையுளொரு வகை (யா. பி. 538)

**சிற்றிசைச் சிற்றிசை**

வெண்டுறைச் செந்துறையு ளொருவகை (யாப். வி. 538)

**சிற்றில் சிதைத்தல்**

சிறுமிய ரிழைத்த மணல் வீட்டைக் குலைத்தாடும் ஆண் மகன் விளையாட்டு (இலக். வி. 806, உரை)

**சிற்றிற்பருவம்**

சிறுமியர் இழைத்த மணற் சிற்றிலைத் தலைவன் சிதைக்கும் பருவத்தைப் புனைந்து கூறும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி

**சிற்றெண்**

1. கீழெண்

2. இருசீர் ஓரடியாய் வரும் அம்போதரங்க வகை (காரிகை செய். 10, உரை)
3. பரிபாடல் உறுப்புக்களுள் ஒன்று (பரிபா. 1, 60)

**சிற்றெல்லை**
அவ்வச் செய்யுட்குரிய அடிகளின் சிறுமை வரையறை

**சிறப்பணி**
1. சாதி, குணம், கிரியை என்பவற்றால் ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூறும் அணி
2. ஒப்புமையாற் பொதுமையுற்றிருந்த இரண்டு பொருள்களுக்கு ஒரு காரணத்தால் வேறுபாடு தோன்றுவதைக் கூறும் அணி (அணியி. 82)

**சிறப்பியற்பெயர்**
சாதியினுள்ளோர் சிறப்பினால் தமக்குத் தாமே வழங்கும் பெயர் (பன்னிருபா. 151)

**சிறப்புடைக்கிளவி**
உபசார வார்த்தை : சிறப்புடைக் கிளவி செவ்விதிற் பயிற்றி (பெருங். உஞ்சைக். 34, 44)

**சிறப்புப் பாயிரம்**
ஆக்கியோன் , பெயர், வழி, எல்லை, நூற் பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன், காலம், களம், காரணம் என்ற 11 செய்திகளைப் பற்றிக் கூறுவதாய் ஒரு நூலுக்குச் சிறப்பாக அமைக்கப்பட்ட முன்னுரை (தொல். பாயி. உரை)

**சிறப்புமொழி**
காண்க : சிறப்பணி

**சிறப்பு ழகரம்**
தமிழுக்குச் சிறப்பாயுள்ள ழகரம்

**சிறுகாப்பியம்**
பெருங்காப்பியத்திற்குள்ள உறுப்புகளிற் சில குறைந்து நடைபெறும் நூல்வகை

**சிறுசோறடுதல்**
பெண்பாற் பிள்ளைத்தமிழில் வரும் பத்துப் பருவங்களுள் தலைவி மணற்சோறு சமைக்கும் பருவத்தை புனைந்து கூறும் பகுதி (பிங்.)

**சிறுதேர்ப் பருவம்**
தலைவன் சிறிய தேரைச் செலுத்தும் பருவத்தைச் சிறப்பிக்கும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி

**சிறுதேவபாணி**
இசைப்பாவகை (சிலப். 6, 35, உரை)

**சிறுபறைப்பருவம்**
தலைவன் சிறுபறை வைத்துக்கொண்டு அடித்து விளையாடும் பருவத்தைச் சிறப்பிக்கும் ஆண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பகுதி

**சிறுபொழுது**
மாலை, இடையாமம், விடியல், காலை, நண்பகல், எற்பாடு (தொல். பொ. 6, உரை) என ஆறு வகையாகவும் மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் (நம்பியகப் : 12) என ஐவகையாகவும் கூறப்படும் நாட்பிரிவு

**சிறைப்புறம்**
தோழி தலைவியர்க்குள் நிகழும் செய்திகளைத் தலைவன் மறைந்தறிதற்கு அனுகூலமாய்க் காவல் மனைப் புறமாயுள்ள இடம் (தொல். பொ. 114, உரை)

**சின்னப்பூ**
100, 90, 70, 50, 30 நேரிசை வெண்பாக்களால் அரசனது தசாங்கத்தைப் புகழும் பிரபந்தம் (இலக். வி. 846)

**சின்னம்**
காண்க : சின்னப்பூ
2. தனிச்சொல்
3. எண்

**சினைப்பெயர்**
1. உறுப்பைக் குறிக்கும் பெயர்
2. உறுப்பு அடியாகப் பிறந்த பெயர் (நன். 281)

**சினையாகுபெயர்**
சினைப்பெயர் அதன் முதலுக்கு ஆகும் பெயர் (நன். 290, உரை)

**சினைவினை**
உறுப்புணர்த்தும் பெயரின் தொழிலைக் காட்டும் வினைச்சொல் (புறநா. 9, உரை)

## சீ

**சீர்**
செய்யுளின் ஓர் உறுப்பு (தொல். பொ. 313)

**சீர் மடக்கு**
செய்யுளுள் சீர் இடை மடக்கி வருகை

**சீரந்தாதி**

பாட்டில் ஓரடியின் இறுதிச்சீர் அடுத்த அடியின் முதற் சீரோடு தொடுத்து வருவது (தொல். பொ. 411, உரை)

### சு

**சுட்டணி**

நிதரிசனம் (வீரசோ. அலங். 12)

1. ஒரு பொருளின் செயல் முதலியன மற்றோர் பொருளுக்கு நன்மையோ தீமையோ புலப்பட நிகழ்வ தாகக் கூறும் அணிவகை (தண்டி. 83)
2. உதாரணம்

**சுட்டுப் பெயர்**

1. சுட்டெழுத்தை முன் பெற்ற பெயர் : சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார் (தொல். சொல். 38)
2. சுட்டு மாத்திரையாய் நிற்கும் பெயர் : கூற்றம் நமன் என்பன சுட்டுப் பெயர் (சீவக. 1487, உரை)

**சுட்டெழுத்து**

சுட்டி உணர்த்தும் அ, இ, உ என்ற எழுத்துக்கள் : சுட்டெழுத்தினை முதலாகவுடைய வகரவீற்றுப் பெயர் மூன்றும் (தொல். எழுத். 378, உரை)

**சுடர்விளக்கு**

சுடர்நிலை. காண்க : தீபகம். முதனிலைத் தீபகம் இடைநிலைத் தீபகம், கடை நிலைத் தீபகம் என மூவகைப்பட்டு, ஒரு சொல் ஓரிடத்தினின்று பலவிடத்துஞ் சென்று பொருள் விளக்கும் அணி (தண்டி. 38)

**சுண்ணம்**

1. ஈரடியெண் சீரைப் பொருள்முறையின்றித் துணித்துச் செய்யுளியற்றும் முறை (தொல். சொல். 406)
2. சொல்வகை நான்கனுள் நான்கடியான் வரும் இசைப் பாட்டு (சிலப். 3, 12, பக். 88)

**சுண்ணமொழி மாற்று**

சுண்ணமாக அமைந்த செய்யுளை ஏற்றபடி மொழிமாற்றிப் பொருள் கொள்ளுகை (நன். 412, மயிலை)

**சுப்பு**

வேற்றுமையுருபு : வேற்றுமையுருபுகளைச் சுப்பெனவும் (தொல். விருத். பக். 55)

**சுப்புத்தாது**

பெயரடியாகப் பிறந்த வினை (பி.வி. 35, உரை)

**சுரத்துய்த்தல்**

வீரர் தாம் கவர்ந்த ஆனிரையை அரிய வழியில் நோவு படாதபடி நடத்திக்கொண்டு செல்லுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ, 1. 11)

**சுரம்போக்கு**

தலைவனுடன் தலைவி பாலைவழியிற் செல்லும் உடன் போக்குத்துறை : தோயமு நாடுமில்லாச் சுரம் போக்குத் துணிவித்தவே (திருக்கோ. 207)

**சுராட்டு**

நான்கு அடியுள்ள செய்யுளில் இரண்டெழுத்து ஓரடியுள் மிக்குச் சீரொத்து வருவது (யாப்.வி. 95, பக். 482)

**சுரிதகம்**

1. கலிப்பா வகையின் இறுதியுறுப்பு (காரிகை. செய். 12, உரை)
2. கூத்தில் சொல் நிகழும் வகையில் வரும் எட்டடிப் பாட்டு (சிலப். 3, 13, உரை)

**சுலோகம்**

1. வடமொழிச் செய்யுள் : சுலோக மொருநியுத மாரய (சைவச. பொது. 3)
2. பழமொழி
3. சொன்மாலை (பிங்.)
4. புகழ் (யாழ். அக.)

**சுவர்க்கணம்**

காண்க : இந்திரகணம் (இலக்.வி. 800, உரை)

**சுவையணி**

உண்ணிகழுந்தன்மை வெளிப்பட்டு விளங்க எண்வகை மெய்ப்பாட்டினாலும் நடக்கும் அலங்காரம் (தண்டி. 68)

**சுழிகுளம்**

எவ்வெட்டெழுத்துக் கொண்ட நான்கடியாய், மேனின்று கீழிழிந்தும், கீழ் நின்று மேலேறியும் புறஞ்சென்று உண்முடியப் பாடும் மிறைக்கவி (தண்டி. 95)

## சூ

**சூக்குமாலங்காரம்**

காண்க : நுட்பம் : ஒரு கருத்தைக் குறிப்பினாலுணர்த்தும் அணி (தண்டி. 62)

**சூத்திரநிலை**

ஆற்றொழுக்கு, அரிமாநோக்கு, தவளைப் பாய்த்து, பருந்தின் வீழ்வு என நால்வகைப் பட்டதாய்ச் சூத்திரங்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்து நிற்கும் நிலை (நன். 19)

**சூத்திரப்பா**

இலக்கணம் முதலியவற்றை அமைத்தற்குரிய நூற் பாவகை

**சூத்திரம்**

1. சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளும் செறிந்து விளங்க அமைத்து முடிக்கப்படும் யாப்பு (தொல்.பொ. 481)
2. சூத்திரவடிவில் இயற்றிய நூல் (வேதாந்த சூத்திரம்)
3. பெயர்ச் சூத்திரம், விதிச் சூத்திரம், விலக்கியற் சூத்திரம், நியமச் சூத்திரம், அதிகாரச்சூத்திரம், ஞாபகசூத்திரம் என ஆறுவகைப்படும் சூத்திரங்கள் (யாப். வி. பாயி. பக். 11)

**சூத்திர யாப்பு**

காண்க : சூத்திரப்பா

**சூதுவென்றி**

சூதாட்டத்தில் நேர்ந்த வெற்றியைக் கூறும் புறத்துறை (பு.வெ. 12, 16)

**சூரியகணம்**

நூலின் முதற் செய்யுளின் முதலில் அமைதல் கூடாதென்று நீக்கப்பட்ட கூவிளங்காய் என்னும் வாய்ப்பாடு பற்றிவரும் தீக்கணச் சீர்வகை (இலக். வி. 800, உரை)

## செ

**செங்கீரைப் பருவம்**

பிள்ளைத்தமிழ்ப் பருவம் பத்தனுள், குழந்தை பிறந்த ஐந்தாமாதத்தில் தன் தலையை நிமிர்த்து இங்குமங்கும் அசைந்தாடுவதைச் சிறப்பித்துக் கூறும் இரண்டாம் பருவம்.

**செஞ்சொன்மாலை**

புகழ்மாலை : செஞ்சொன் மாலை சூடினான் (சீவக. 691)

**செந்துறை**

பாடற்கேற்ற பா (யாப். வி. 537)

**செந்துறை வெண்பா**

காண்க : செந்துறை வெள்ளை. குறள் வெண்பாவின் இனத்துள் ஒன்றாகி, ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் பெற்று, இரண்டடியாய்த் தம்முள் அளவொத்து வருவது (காரிகை. செய். 6)

**செந்துறை வெள்ளை**

குறள் வெண்பாவின் இனத்துள் ஒன்றாகி, ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் பெற்று, இரண்டடியாய்த் தம்முள் அளவொத்து வருவது (காரிகை. செய். 6)

**செந்தூக்கு**

தாளவகை (சிலப் 14, 150, உரை)

**செந்தொடை**

1. மோனை முதலிய அமையாது வேறுபடத் தொடுக்குந் தொடை (காரிகை. உறுப். 17)
2. சிவப்பு மாலை
3. அம்பு முதலியவற்றை எய்யுங்குறி : செந்தொடை பிழையா வன்க ணாடவர் (புறநா. 3, 20)

**செந்நடையந்தாதி**

செய்யுளின் இறுதியடியின் இறுதிச் சீரும் முதலடியின் முதற்சீரும் ஒன்றாகாமல் அடிதோறும் எழுத்து, அசை, சீர் முதலியன அந்தாதியாக வருந் தொடை (யாப். வி. 52, 184)

**செப்பல்**

காண்க : செப்பலோசை: வெண்பாவுக்குரிய ஓசை (தொல். பொ. 379, உரை)

**செப்பு**

1. சொல் : ஏதுபோ லிருந்த தைய னிசைந்த செப்பென் றார் (திருவிளை. வளையல். 9)
2. விடை: செப்பும் வினாவும் வழாஅ லோம்பல் (தொல். சொல். 13)

**செம்பொருள் அங்கதம்**

வாய்கரவாது சொலலிய வசைப் பாட்டு (தொல். பொ. 437, உரை)

**செம்மொழி**

தொகை மொழி யல்லாத ஒரு மொழி: தாமரை யென்பது செம்மொழியும் பிரிமொழியுமானாற் போலவும் (பி.வி. 5, உரை)

2. நல்வார்த்தை: செம்மொழி மாதவர் (சிலப். 30, 32)

**செம்மொழிச் சிலேடை**
பிரிக்கப்படுதலின்றியே பல பொருள் பயக்குஞ் சொற்களாகிய தொடர் (தண்டி. 75, உரை)

**செய்னகச் சூத்திரம்**
புணர்ச்சி விதி, முடிபுவிதி முதலியவற்றை முடித்துக் காட்டும் விதிச்சூத்திரம் (நன். 20, உரை)

**செய்யுட்கணம்**
பிரபந்தத்தை இயற்றத் தொடங்கும்போது செய்யுண் முதற்கண் வருதற்குரிய நிலக்கணம், நீர்க்கணம், மதிக்கணம் அல்லது சந்திரகணம், இயமான கணம் அல்லது இந்திர கணம் என்ற நற்கணம், நான்கும்; சூரியகணம், தீக்கணம், வாயுகணம், அல்லது மாருதகணம், அந்தரகணம் அல்லது ஆகாயகணம் என்ற தீக்கணம் நான்குமாகிய எண் கணங்கள் (திவா.) (பிங்.)

**செய்யுட் கலம்பகம்**
பலவகைப் பாடற்றிரட்டு

**செய்யுட் கிழமை**
ஆறாம் வேற்றுமைப் பொருள்களுள் இன்னாரது பாட்டு என ஆக்கியோனுக்கும் அவன் பாட்டுக்கும் உள்ள உரிமையாகிய பொருள் (குறள். 6, உரை)

**செய்யுட் கோவை**
பலவகைப் பாடல் திரட்டு

**செய்யுட் சொல்**
செய்யுளில் மட்டும் வரும் சொல்: இது செய்யுட் சொல்லாதலால் வந்தது (திருக்கோ. 1, உரை)

**செய்யுட் பொருத்தம்**
காண்க: செய்யுண் முதன்மொழிப் பொருத்தம்: மங்கலப் பொருத்தம், எழுத்துப் பொருத்தம், தானப் பொருத்தம், பாற் பொருத்தம், உண்டிப் பொருத்தம், வருணப் பொருத்தம், நாட் பொருத்தம், கதிப் பொருத்தம், கணப் பொருத்தம் என்ற பத்து வகையாகக் காவியத்தின் முதற் செய்யுள் முதன் மொழியிற் பார்த்தற்குரிய பொருத்தம் (வெண்பாப். முதன்.1)

**செய்யுண் முதன்மொழிப் பொருத்தம்**
மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்று பத்து வகையாய்க் காவியத்தின்

முதற்செய்யுள் முதன் மொழியில் பார்த்தற்குரிய பொருத்தம் (வெண்பாப். முதன். 1)

**செய்யுள்**

1. பாட்டு : செய்யுளுறுப்பான... வகுத்துரைத்தனரே, (தொல்.பொ, 313)
2. காவியம் : உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் (சிலப். பதி. 87)

**செய்யுள் வழக்கு**

செய்யுளில் வழங்குஞ் சொல் : திரிசொல், திசைச்சொல், வடசொல்லாகிய செய்யுளும் வழக்கும் (நன். 267, உரை)

**செய்யுள் வழு**

யாப்பிலக்கணத்தோடு பொருந்தாத இயல்பினையுடைய குற்றம் (தண்டி. 112)

**செய்யுள் விகாரம்**

வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற் குறை, இடைக் குறை, கடைக்குறை எனச் செய்யுளில் சொற்கள் பெறும் ஒன்பது வகை மாறுபாடு (நன். 155, உரை)

**செய்யுளியல்**

இலக்கண நூல்களில் யாப்பிலங்கணங் கூறும் பகுதி

**செய்யுளுறுப்பு**

எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்ற செய்யுளின் அங்கங்கள்

**செய்வினை**

1. வினை முதல் வினை (இலக். கொத். 67)
2. செய்யும் தொழில் : செய்வினை தூய்மை (குறள். 455)
3. முற்பி றப்பில் செய்த செயல்பாடு: சீலமில்லாச் சிறிய னேனுஞ் செய்வினையோ பெரிதால் (திவ் : திருவாய். 4, 7, 1)
4. பில்லி சூனியம்

**செயப்படுபொருள்**

வினை முதலது தொழிலின் பயனை அடைவது: வினையே செய்வது செயப்படுபொருளே (தொல், சொல், 112)

2. நூலாசிரியன் கூறப்புகும் நூற்பொருள்: தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும் (யாப்.வி. கடவுள் வா. உரை)

**செயப்படுபொருள் குன்றியவினை**
செயப்படு பொருளைப் பெறவல்ல வினைச்சொல் (நன். 320, சடகோப.)

**செயப்பாட்டுவினை**
படு விகுதி புணர்ந்த முதனிலையுடையதாயச் செயப்படு பொருளை எழுவாயாகக் கொண்ட வினை (இலக். கொத். 67)
2. பழவினை: செயப்பாட்டு வினையாற் றெரிந்துணர் வரியது (மணி. 23, 77)

**செயற்கை யளபெடை**
செய்யுளின் ஓசை நிரம்பப் புலவர் செய்து கொள்ளும் அளபெடை (தொல். பொ. 329, உரை)

**செருக்கள வஞ்சி**
போர்க்களத்தைச் சிறப்பித்து அகவற்பாவால் பாடப்படும் பிரபந்தம்: செருக்களங் கூறிற் செருக்கள வஞ்சி (இலக். வி. 869)

**செருவிடை வீழ்தல்**
அகழினையும் காவற் காட்டையுங் காத்துப் பட்ட வீரரது வெற்றியைப் புகழும் புறத்துறை (பு. வெ. 5, 4)

**செவ்வணி**
தலைமகற்குத் தலைவியின் பூப்பு உணர்த்தற் குறியாகத் தோழியணிந்து கொள்ளுஞ் செங்கோலம்: செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி. (நம்பியகப். 205)

**செவியறிவுறூஉ**
அரசர்க்கு நல்லறிவு புகட்டுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 9, 23). காண்க: 2. செவியறிவுறூஉ மருட்பா. அரசர்க்கு நீதிமுறைகளைக் கூறுவதும் மருட்பாவால் அமைந்ததுமாகிய ஒரு பிரபந்தம் (காரிகை. செய். 5, உரை)

**செவியறிவுறூஉ மருட்பா**
அரசர்க்கு நீதி முறைகளைக் கூறுவதும் மருட்பாவால் அமைந்ததுமாகிய ஒரு பிரபந்தம் (காரிகை. செய். 15, உரை)

**செவியுறை யங்கதம்**
அரசர்க்கு உறுதி கூறும் நோக்குடன் அறிஞர் கூறும் வசைச் செய்யுள் (தொல். பொ. 440, உரை)

**சென்று தேய்ந்திறுதல்**
நூற்குற்றம் பத்தனுள் நூலின் அழகு வரவரக் குறைந்து கொண்டே வரும் குற்றம் (தொல். பொ. 664, உரை)

## சே

**சேட்படுத்து-தல்**
விரைய வரைந்து கோடல் கருதிக் களவுக் கூட்டத்தி லெலாம் இடையூறுகளை எடுத்து மொழிந்து அக்கூட்டத் திற் கியையாது தோழி மறுத்துக் கூறித் தலைவனை அகற் றுதல் (திருக்கோ. 97, உரை)

**சேட்படை**
1. தூரத்திலிருக்கை
2. விரைய வரைந்து கோடல் கருதிக் களவுக் கூட்டத்து ளுளவாம் இடையூறுகளை எடுத்து மொழிந்து அதற் கியையாது மறுத்துத் தோழி தலைவனை யகற்றுங் கிளவிக் கொத்துவகை (திருக்கோ. 90, அவ.)

**சேர்வையணி**
வேறுபட்ட பல அணிகள் சேர்ந்து வரும் அலங்காரம் (அணியி. 43)

**சேரிப் பரத்தை**
ஊர்ப் புறச்சேரியில் வாழும் பரத்தை (தொல். பொ. 151, உரை).

## சொ

**சொல்**
1. பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச் சொல், உரிச்சொல் என்ற நால்வகை மொழிகள் (நன். 270)
2. தமிழ் மொழியிலுள்ள வடசொல், திரிசொல், திசைச் சொல், வடசொல் என நால்வகைப் பட்ட சொற்கள் (தொல். சொல். 397)

**சொல்லணி**
சொல்லினோசை முதலியன இன்பம்பட அமைக்கும் அலங்காரம் (தண்டி.)

**சொல்லாகுபெயர்**
'உரை செய்தான்' என்பதில் என்பதில் உரையென்பது அம்மொழியால் உணரப்படும் பொருளுக்கு ஆவது போன்ற ஆகுபெயர் (நன். 270, உரை)

**சொல்லானந்தம்**
பிரபந்தத் தலைவனது இயற்பெயரையடுத்துக்கேடு பயக்கும் அமங்கலச் சொல்லைப் புணர்த்துப் பாடுவது (யாப்.வி. 96, பக். 519)

**சொல்லுருபு**
வேற்றுமையுருபுகட்குப் பிரதியாக வழங்குஞ்சொல்: உருபுவே றுருபு சொல்லுரு பாகியும் (இலக். கொத். 18)

**சொல்லெச்சம்**
(இலக்.) சொல் எஞ்சி நிற்பது (சீவக. 4, உரை)

**சொல் வழு**
சொல் இலக்கணத்தோடு பொருந்தாமையாகிய குற்றம் (தண்டி. 108)

**சொற்குற்றம்**
1. சொல்லிய கணத்திற்கு மாறான குற்றம்
2. சொல்லின் தீமை

**சொற்சீரடி**
காண்க: அம்போதரங்கம் (காரிகை. செய். 10, உரை, பக். 96)

**சொற்பின் வருநிலை**
ஒரு சொல் வெவ்வேறு பொருளிற் பலமுறை வரும் அணி (தண்டி. 41, உரை)

**சொற்பொருட்பின் வருநிலை**
ஒரு சொல் ஒரு பொருளிலேயே பல முறை வரும் அணி (தண்டி. 41, உரை)

**சொற்பொருத்தம்**
செய்யுண் முதன் மொழிப் பொருத்தம் பத்தனுள் வகையுளி சேர்ந்ததும் சிறப்பில்லாததும், பல்பொருட்கேற்பதும், பொருள் இல்லாததும், திரிதல் கெடுதல் என்னும் விகார முடையதுமாகாது, மூவசையுடைய மங்கலச் சொல் செய்யுளின் முதற்கண் அமைதலாகிய பொருத்தம் (வெண்பாப். முதன்.3 )

**சொற்றொடர் நிலைச் செய்யுள்**
காண்க : அந்தாதி (தண்டி. 11, உரை)

## சோ

**சோரகவி**
ஒருவன் மேல் பிறன் பாடிய கவியைத் தான் பாடியதாக வேறொருவனுக்குக் காட்டுபவன் (வச்சணந். செய். 47)
2. திருட்டுப்பாடல்

## ஞா

**ஞாபகங் கூறல்**
குறித்த பொருளை நேரே கூறாது, அரிதும் பெரிதுமாக நலிந்து சூத்திரத்தை இயற்றவதனாற் குறிப்பிடுகையாகிய தந்திரவுத்தி (தொல். பொ. 666)

**ஞாபகச் சூத்திரம்**
அறுவகைச் சூத்திரத்துள் எளிதுஞ் சிறிதுமாக இயற்றற் பாலதனை அரிதும் பெரிதுமாக இயற்றிப் பிறிதொரு பொருளை அறிவிக்குஞ் சூத்திரம் (யாப். வி. பக். 11)

## த

**தகுதியணி**
தக்க இரண்டு பொருள்களின் சேர்க்கையை உணர்த்தும் அணி (அணியி. 39)

**தகுதியின்மையணி**
தகாத இரண்டு பொருட்களின் சேர்க்கையை உணர்த்தும் அணி (அணியி. 39)

**தகுதி வழக்கு**
பொருள்களுக்கு இயல்பாயமைந்த சொற்களை யொழித்துத் தகுதியான வேறு சொற்களால் கூறும் இடக்கரடக்கல், மங்கலம், குழுஉக்குறி என்ற மூவகை வழக்கு (நன். 267 உரை.)

**தகையணங்குறுத்தல்**
தலைவியின் அழகு தலைவனுக்கு வருத்தமுறுத்தலைக் கூறும் அகத்துறை (குறள். 109. அதி.)

**தசகம்**
பத்துச் செய்யுள் கொண்ட பிரபந்தம்

**தசப்பிரா துற்பவம்**
திருமாலின் பத்து அவதாரம் பற்றிய நூல்

**தசாங்கத்தயல்**
ஆசிரிய விருத்தத்தால் அரசியல் உறுப்புக்கள் பத்தனையும் பாடும் பிரபந்தவகை (தொன். 283, உரை)

**தசாங்கப்பத்து**
நேரிசை வெண்பாவால் அரசியலுறுப்புக்கள் பத்தனையும் பாடும் பிரபந்தவகை (இலக்.வி. 840)

**தடுமாறுத்தி**
காரியத்தைக் காரணமெனத் தடுமாறக் கூறும் அணிவகை (மாறனலங். சொல். 205)

**தடுமாறுவமை**
காண்க : தடுமாறுவமம். காண்க : எதிர்நிலையணி. உவமான உவமேயங்களை மாற்றிச் சொல்லும் அணி (அணியி. 4)

**தண்டகம்**
ஒருவகை ஆரியச் செய்யுள் (வீரசோ. யா. 34, உரை)

**தண்டகமாலை**
தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் 300 வெண்பாக்களாலான இலக்கியம் (தொன். வி. 283, உரை)

**தண்டாபூபிகா நியாயம்**
தண்டத்தைத் தின்ற எலி அதிலேயுள்ள அப்ப முதலிய வற்றையுந் தின்றிருப்பது பெறப்படுதல் போல வெளிப் படையான செய்தியை உணர்த்தும் ஒருவகை நியாயம். ஒரு பொருளைச் சொல்ல தண்டாபூபிகா நியாயத்தினான் மற்றொரு பொருள் தோன்றுதலாம் (அணியி. 54)

**தந்துநிறை**
பகையிடத்தினின்று பசுநிரையை வீரர் தம்மூர்ப் புறத்துத் தந்து நிறுத்துதலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 58)

**தந்துரைத்தல்**
மூலத்தில் கூறப்படாத சொற்பொருள் முதலியவற்றை வருவித்துரைத்தல்

**தந்துரை**
பாயிரம் : நூற்குள் நுதலிய பொருளல்லாதனவற்றைத் தந்து கூறுவது (நன். 1)

**தந்துரைக்கிளவி**
பிறவுயிர்களைப் போன்று செய்யும் ஒலி : தந்தையரைக் கிளவியிற் றந்துரை முடித்த...ஆயம் (பெருங். உஞ்சைக். 54, 31)

**தபுதார நிலை**
கணவன் தன் தாரமிழந்து துயருறும் நிலையைக் கூறும் புறத்துறை : காதலி யிழந்த தபுதார நிலையும் (தொல். பொ. 79)

**தரவிணைக் கொச்சகம்**
இரண்டு தரவு கொண்ட கொச்சகக் கலிப்பா வகை (கலித். 133, உரை)

**தரவு**
கலிப்பாவின் முதலுறுப்பு (தொல். பொ. 444)

**தரவு கொச்சகம்**
கொச்சகக் கலிப்பா வகை (காரிகை. செய். 12, உரை)

**தரு**
இசைப்பாட்டு வகை (இராம. நா. பாலகா. 3)
2. ஒருவகைச் சந்தம்

**தலபுராணம்**
தலப் பெருமைகளைக் கூறும் நூல்

**தலைக்காஞ்சி**
பகைவரை யழித்துப்பட்ட வீரனது தலையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு. வெ. 4, 11)

**தலைக்குறை**
சொல்லின் முதற்குறை (சீவக. 365, உரை)

**தலைத்தோற்றம்**
வீரனொருவன் பகைவர் பசு நிரையைக் கைப்பற்றி வருத லறிந்து அவனுறவு முறையார் மனமகிழ்தலைக் கூறும் ஒரு புறத்துறை (புறநா. 262)

**தலைப்பாட்டு**
கூத்தின் முதலில் தொடங்கும் பாட்டு : தலைப்பாட்டுக் கூத்தியும் (சிலப். 14, 156)

**தலைபெயலுவமை**

காண்க : எதிர்நிலையணி (புறநா. 60, உரை)

**தலைப்பெயனிலை**

1. மகப் பேறாகிய கடனையிறுத்துத் தாய் இறந்த நிலையைக் கூறும் புறத்துறை (புறப். வெ. 10, சிறப்பிற். 5)

2. போர்க்களத்தினின்று புறங்காட்டிச் சென்ற மகனது செயற்காற்றாது தாய் இறந்துபட்ட நிலை கூறும் புறத்துறை (தொல். பொ. 79, உரை)

**தலைமகள்**

அகப்பொருட்டலைவி : தலைமகள் கற்பினொடு மாறு கொள்ளாமையும் (இறை. 14, 93, உரை)

**தலைமகன்**

அகப்பொருட்டலைவன்: பூப்பின்கட் சாராத் தலைமகனும் (திரிகடு. 17)

**தலைமடக்கு**

செய்யுளடியின் முதற்சீரே அவ்வடியில் மடங்கி வரும் மடக்கணி வகை

**தலைமாராயம்**

பகைவனது தலையைக்கொண்டு வந்தவன் மனமுவக்கும்படி மன்னன் செல்வமளித்ததைக் கூறும் புறத்துறை (பு. வெ. 4, 12)

**தலையாகு மோனை**

செய்யுளின் ஓரடியின் எல்லாச் சீரிலும் மோனை எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (காரிகை. ஒழிபி. 6, உரை)

**தலையாகெதுகை**

முதற்சீர் முழுதும் ஒன்றிவரும் எதுகை (காரிகை. ஒழிபி. 6 உரை)

**தலையெழுத்து**

உயிரெழுத்து (பேரகத். 8, உரை)

**தலையொடு முடிதல்**

போர்க்களத்தில் மாண்ட கணவனது வெட்டுண்ட தலையைப் பிடித்துக் கொண்டு இறந்துபட்ட மனைவியைப் பற்றிக் கூறும் புறத்துறை

**தழாத்தொடர்**

ஒரு சொல் அடுத்துவருஞ் சொல்லை நேரே தழுவாது அமையும் தொடர் (நன். 153, உரை)

**தழிஞ்சி**

1. போரில் ஆயுதங்களால் தாக்குண்டு கேடுற்ற தன் படையாளரை முகமன் கூறியும் பொருள் கொடுத்தும் அரசன் தழுவிக் கோடலைக் கூறும் புறத்துறை : அழிபடை தட்டோர் தழிஞ்சியோடு தொகைஇ (தொல். பொ. 63)
2. ஒரு வீரன் தனக்குத் தோற்றோடுவோர் மேற் படை செய்யாத மறப்பண்பினைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 20)
3. பகைவர் சேனை தம் எல்லையிற் புகுதாதபடி அரிய வழியைக் காத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 4, 3)

**தழுவுதொடர்**

ஒரு சொல் மற்றொரு சொல்லை நேரே தழுவி நிற்குந் தொடர் (நன். 152, உரை)

**தளை**

அறுவகைச் செய்யுளுறுப்புக்களில் ஒரு சீரின் ஈற்றசைக்கும் அதனை அடுத்து வரும் சீரின் முதல் அசைக்கும் உள்ள தொடர் (காரிகை. உறுப். 5, உரை)

**தற்கிழமை**

ஒரு பொருளுக்கும் அதன் சினைகுணம் செயல் முதலிய வற்றிற்கும் உள்ளது போலத் பிரியாதிருக்கும் சம்பந்தம் (நன். 300)

**தற்குணம்**

விசேடகுணம். ஒரு பொருளின் குணத்தை மற்றொரு பொருள் பற்றுதலைக் கூறும் அணி (மாறனலங். 134)

**தற்குறிப்பேற்றம்**

பொருளிடத்து இயல்பாக நிகழுந் தன்மையை யொழித்துக் கவிஞன் வேறொரு வகையை ஏற்றுச் சொல்லும் அணி (தண்டி. 55)

**தற்சமம்**

ஒலி மாறுபாடின்றித் தமிழில் வழங்கும் ஆரியச் சொல்

**தற்சிறப்புப் பாயிரம்**

தெய்வ வணக்கமும் செயப்படுபொருளு முரைத்து ஆசிரியர் நூன்முகப்பிற்கூறும் பாயிரம் (காரிகை. 1, உரை)

**தற்பவம்**

1. தமிழில் திரிந்து வழங்கும் வடசொல்: தற்பவந் தற்சபமே பெரும்பான்மையுஞ் சாற்றினமே (பி.வி.2)
2. யாதொரு காரணத்தால் யாதொன்று இறக்கப்பட்டது, அது மீட்டும் அப்பொருள் காரணமாகப் பிறந்த தொகை கூறும் அணி (மாறனலங். 202)

**தன்குறியிடுதல்**

தானே குறியிட்டாளுதலாகிய உத்திவகை (மாறனலங் பாயி. 25)

**தன்குறி வழக்கம் மிகவெடுத்துரைத்தல்**

முப்பத்திரண்டு உத்திகளில் தான் உண்டாக்கிய குறியீட்டைத் தன் நூலில் மிகுதியும் எடுத்தாளும் தந்திர உத்தி (நன். 14)

**தன்கோட்கூறல்**

முன்னூலாசிரியர் கூறியவாறு கூறாது தன் கோட்பாட்டைக் கூறுகை (மாறனலங். பாயி. 25)

**தன்மேம்பாட்டுரை**

தற்புகழ்ச்சியணி : தான்றற் புகழ்வது தன்மேம் பாட்டுரை (தண்டி. 70)

**தன்மை நவிற்சி**

பொருள் முதலியவற்றை இயற்கையில் உள்ளவாறே கூறு அணி (அணியி. 93)

**தன்வினை**

1. தொழில் செய்வோனின் வினையை உணர்த்தும் சொல் (புறநா. 59, உரை)
2. தனது செயல்
3. ஊழ், விதி : தன்வினை தன்னைச் சுடும்

**தன்னின முடித்தல்**

ஒன்றைச் சொல்லுமிடத்து விரிவருமை வேண்டி அதற்கினமாகிய மற்றொன்றையும் அதனோடு கூட்டி முடித்தலாகிய உத்தி (தொல். சொல். 27, சேனா.)

**தன்னுறு தொழில்**
அரசன் கட்டளையை எதிர் பாராதே அவன் வீரர் பகைவரின் ஆநிரை கவர்தலைக் கூறும் வெட்சித் திணைப் பகுதி (பு.வெ. 1, 2)

**தன்னை வேட்டல்**
1. தலைவனுடன் வீரன் தன்னுயிர் மாய்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 26)
2. இறந்த கணவனுடலைப் போர்க்களத்தில் அவன் மனைவி தேடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 2)

**தனிக்காப்பு**
ஒற்றைப் பாவாலாகிய காப்பு

**தனிச்சீர்**
நேரிசை வெண்பா கலி வெண்பாக்களின் இரண்டாமடியிறுதியில் எதுகை பெற்று வரும் சீர்

**தனிச்சொல்**
கலிப்பா முதலியவற்றில் 'ஆங்கு' என்பது போலத் தனித்து வருஞ்சொல் (தொல். பொ. 447, உரை)

**தனிநிலை**
ஆய்தம் (நன். 60). ஒரு செய்யுளால் வரும் பிரபந்தம் (இலக். வி. 768, உரை)

**தனிப்பாட்டு**
காண்க : தனிப்பாடல். விடுகவி

**தனிமொழி**
1. தொகைப்படாது தனித்து நிற்கும் மொழி: சொற்றான் இரண்டு வகைப்படும், தனி மொழியுந் தொடர்மொழியுமென (தொல். சொல். 1, சேனா.)
2. பிறமொழியினின்றும் தோன்றாத மொழி

**தனியன்**
1. ஒரு நூலை அல்லது ஆக்கியோனைப் புகழ்ந்து கூறும் தனிச் செய்யுள் (திவ்.)
2. குரு ஸ்தோத்திரமான ஒற்றைச் சுலோகம்
3. தனித்தான். ஒன்றியானவன்—து: "தாயுமிலி தந்தையிலி தான்றனியன்" (திருவா. 12,3)

## தா

**தாஅ வண்ணம்**
இடையிட்டு வரும் எதுகையுடைய சந்தம் (தொல். பொ. 527)

**தாண்டகச் சதிதம்**
1. தாண்டகவடி மிக்குச் சந்தவடி குறைந்துவரும் செய்யுள் (யாப்பு. வி. 95, 456)
2. சந்தவடியுந் தாண்டகவடியும் விரவி யோசை கொண்டு வருஞ் செய்யுள் (யாப். வி. 95, 455)

**தாண்டகம்**
1. 26 எழுத்தின் மிக்க அடியான் வரும் அளவழித் தாண்டகம் அளவியற்றாண்டகம் என்ற இரு பகுப் பினையுடைய பாக்கள் (யாப்.வி. 95, 447)
2. அறுசீராலேனும் எண்சீராலேனும் இயன்ற ஒத்த நான்கடி கொண்ட செய்யுள்களுடையதும் கடவுளரைப் புகழ்வதுமான பிரபந்த வகை (பன்னிருபா. 305)

**தாண்டகவடி**
இருபத்தாறுக்கு மேற்பட்ட எழுத்துக்களால் இயன்ற அடி (யாப்.வி. 95, 256)

**தாதெழுத்து**
எழுத்துவகை (யாப். வி. 536)

**தாப்பிசை**
செய்யுளின் இடையிலுள்ள மொழி முன்னும் பின்னும் சென்று கூடும் பொருள்கோள் (நன். 416)

**தாபதநிலை**
காதலனை யிழந்த மனைவி தவம் புரிந்தொழுகிய நிலைமை யைத் தெரிவிக்கும் புறத்துறை (தொல். பொ. 79)

**தாபதப்பக்கம்**
நீராடல், நிலக்கிடை கோடல், தோலுடுத்தல், எரி யோம்பல், ஊரடையாமை, சடைபுனைதல், காட்டி லுணவு, கடவுட்பூசை என்னும் தாபதர்க்குரிய எண்வகை யொழுக்கங்களைக் கூறும் புறத்துறை: நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும் (தொல். பொ. 74)

**தாபத வகை**

தவவேடத்தர் புண்ணியத்தைத் தழுவி யொழுகும் நடையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8, 14)

**தாய பனுவல்**

இடையிடையே இலக்கணங்கள் கலந்துவரும் இலக்கிய வகை: சின்மென் மொழியாற் றாயபனுவலோடு (தொல். பொ. 547)

**தார்நிலை**

1. தம்மரசனைச் சூழ்ந்து மொய்த்த பகைவரை வெற்றிடத்துப் பொருது நின்ற அவன் தானைத் தலைவர் முதலியோர் விரைந்து வந்து எறிதலைக் கூறும் புறத்துறை: வேன்மிகு வேந்தனை மொய்த்த வழியொருவன்தான் மீண்டெறிந்த தார்நிலை (தொல். பொ. 72)
2. வீரன் ஒருவன் பகைவரது தூசிப்படையைத் தானே தடுப்பேனென்று தன் தறுகண்மை கூறும் புறத்துறை (பு.வெ. 7, 8)

**தாரகை மாலை**

அருந்ததிக் கற்புடை மகளிர்க்குள்ள இயற்கை குணங்களைக் கூறும் பிரபந்தம் (இலக். வி. 867)

**தாலப்பருவம்**

பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தில் தலைவனைத் தாலாட்டு தலைக் கூறும் பகுதி

**தாலாட்டு**

1. குழந்தைகளைத் தொட்டிலிலிட்டு உறங்கச் செய்யப் பாட்டுப் பாடுதல்: அஞ்சன வண்ணனை யாய்ச்சி தாலாட்டிய செஞ்சொல் (திவ். பெரியாழ். 1,3,10)
2. தாலாட்டுக்கு ஏற்றதாய்ப் பிரபந்தத் தலைவனுடைய சிறந்த செய்கைகளைத் தெரிவிக்கும் பல கண்ணிகளை உடையதொரு பிரபந்தம்

**தாவுவண்ணம்**

காண்க: தாஅவண்ணம்: தாவு வண்ணமாவது இடையிட்டு வந்த எதுகைத்தாலது (வீரசோ. யாப். 36)

**தாழிசை**

பாவினங்களுள் ஒன்று (தொல், பொ. 447)

**தாற்பருவம்**
பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்தில் பாட்டுடைத் தலைவனை எட்டாம் மாதத்தில் தாலாட்டுவதாகக் கூறும் பகுதி

**தான்குறியிடுதல்**
உத்தி முப்பத்திரண்டனுள் உலகத்து வழங்குதலன்றித் தன்னூலுள்ளே வேறு குறியிட்டு ஆளுதலாகிய உத்தி வகை (தொல். பொ. 666)

**தானநிலை**
இசைக் கூறுபாடு: வலிவும் மெலிவும் சமனும் என்று சொல்லப்படா நின்ற இசைக் கூறுபாடுகள் (சிலப். 3, 93, உரை)

**தானப் பொருத்தம்**
உயிரெழுத்துக்களை அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஔ, எ, ஏ என ஐந்தாகப் பகுத்துப் பாட்டுடைத் தலைவனது பெயர் தொடங்கும் உயிரினத்தைப் பாலதானமாகக் கொண்டு தொடங்கி, மேல் குமர, இராச, மூப்பு, மரணத்தானம் என உயிரினங்களை எண்ணி, மூப்பு மரணத்தானமுமான எழுத்துக்களை நீக்கி மற்றைத் தானங்களிலுள்ள எழுத்துக்களால் நூலைத் தொடங்கும் செய்யுண் முதன் மொழிப் பொருத்தம் (வெண்பாப். முதன். 5)

**தானம்**
தானப் பொருத்தத்தில் வரும் பாலத்தானம், குமரத்தானம், இராசத்தானம், மூப்புத்தானம், மரணத்தானம் என்ற நிலைக்ள்

2. எழுத்துப் பிறக்கும் இடம் (நன். 73)
3. இடம்.

**தானவண்ணம்**
ஒருவகை இசைப்பாட்டு

**தானறி சுட்டு**
தன்னையே அறிவிக்குஞ் சுட்டு: ஆலான அத்தினுடைய என்று விபக்தியானபோது தானறி சுட்டாய் அதுக்கு ஹேது வான தொன்மைக் காட்டுமிறே (திவ். பெரியாழ். 2,6,6 வ்யா. பக். 373)

**தானியாகுபெயர்**
தானியின் பெயர் தானத்துக்கு ஆவது (நன். 290, உரை)

**தானெடுத்து மொழிதல்**

உத்தி முப்பத்திரண்டனுள் முன்னோர் கூற்றை எடுத்தாளுதலாகிய உத்தி

**தானைநிலை**

1. பகைவர் அஞ்சுதற்குரிய பதாதியின் நிலைமை கூறும் புறத்துறை (தொல். பொ. 72)
2. இருதிறச் சேனையும் புகழும்படிப் பொருத வீரனது திறலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 22)

**தானைமறம்**

1. வீரனொருவன், பொர வெதிர்ந்த இருவகைச் சேனையும் பொருது மடியாமை பரிகரித்த ஆற்றலின் உயர்ச்சி கூறும் புறத்துறை (பு. வெ. 7, 3)
2. உயிர்க்கேடுகட்கு அஞ்சாது பூசலுக்கு முற்படும் வேந்தனது சிறப்புக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 4)
3. சேனையின் தறுகண்மையைப் புகழ்ந்து பகைவரின் கேட்டிற்கு இரங்குதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 5)

**தானைமாலை**

ஆசிரியப்பாவால் அரசரது கொடி படையைப் பாடும் பிரபந்தவகை (இலக். வி. 869)

## தி

**திசைச்சொல்**

செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரு நிலத்தினின்றும் தமிழில் வந்து வழங்கும் மொழி (தொல். சொல். 397; நன். 273 உரை)

**திசைமொழி**

காண்க : திசைச்சொல்

**திட்டாந்தப் போலி**

இயைபில்லா உதாரணம் : பக்கப் போலியு மேதுப்போலியுந் திட்டாந்தப் போலியுமாம் (மணி. 29, 146)

**திணை**

1. தமிழ் நூல்களில் கூறப்படும் அகமும் புறமும் ஆகிய ஒழுக்கம் : (ஐந்திணை நெறியளாவி—கம்பரா, சூர்ப்பனகை)

2. உயர்திணை அஃறிணையாகிய பகுப்புக்கள் : ஆயிரு திணையி னிசைக்குமென் சொல்லே (தொல். சொல். 1)

**திணைநிலைப் பெயர்**

1. சாதி குறிக்கும் பெயர் : பல்லோர்க் குறித்த திணை நிலைப் பெயரே (தொல். சொல். 167. சேனா.)

2. ஐந்திணைத் தலைமக்கட்கு வழங்கும் பெயர்: ஆனா வகைய திணைநிலைப் பெயரே (தொல். பொ. 22)

**திணைநிலைவரி**

ஐந்திணைச் செய்திகளைக் காமக் குறிப்புத் தோன்றப் பாடும் பாவகை (சிலப். 10, கட்டுரை)

**திணைப் பெயர்**

ஐந்திணையில் வாழும் மக்கட்கு வழங்கும் பெயர் (தொல். பொ. 21)

**திணை மயக்கம்**

1. ஒரு நிலத்துக்கு உரிய காலம், உரிப் பொருள், கருப் பொருள்கள் மற்ற நிலத்துக்குரிய அப்பொருளுடன் கலந்துவரப் பாடலமைக்கை

2. அகம், புறம் என்ற திணைகள் ஒன்றோடொன்று மயங்கி வருகை

**திணைவழு**

ஒரு திணைச்சொல்லை மற்றொரு திணைப்பொருளில் சொல்வதாகிய வழு வகை (தொல். சொல். 11, சேனா.)

**திணைவழு வமைதி**

மரபு பற்றி ஆன்றோரால் அமைத்துக் கொள்ளப்பட்ட திணைவழு (தொல். சொல். 57, சேனா.)

**திரிசொல்**

செய்யுளில் மட்டுமே வழங்குதற்குரிய தமிழ்ச்சொல் (தொல். சொல். 399)

**திரிதல்**

1. மூவகை விகாரங்களுள் ஒரெழுத்து மற்றொன்றாக மாறுவது (நன். 154)

2. ஒன்றை மற்றொன்றாகக் கருதுகை : சுட்டல் திரிதல் கவர் கோடல் (மணி. 27, 22)

**திரிபந்தாதி**

முதல் எழுத்து மட்டுந்திரிய இரண்டு முதலிய பல வெழுத்

துக்கள் ஒன்றிப் பொருள் வேறுபட வரும் செய்யுளாலாகிய அந்தாதிப் பிரபந்தம்

**திரிபாகி**

மூவெழுத்துக்களைச் சேர்க்க ஒரு மொழியாகவும் அதன் முதலிரு எழுத்துக்களைச் சேர்க்க மற்றொரு மொழியாகவும் வந்து வெவ்வேறு பொருள் தரும் சித்திரகவி வகை (தண்டி. 45, உரை)

**திரிபு**

1. வேறுபாடு : குறிதிரி பறியா வறிவனை (கலித். 39 46)
2. தோன்றல், திரிதல், கெடுதல் என்ற புணர்ச்சி விகாரம் (தொல். எழுத். 109, உரை)
3. முதல் எழுத்து ஒழிய இரண்டு முதலான எழுத்துக்கள் அடிதோறும் ஒத்திருக்கையிற் பொருள் வேறுபடப் பாடும் செய்யுள்

**திரிபுடை**

சத்த தாளத்தொன்று (பரத. தாள. 22)

**திருப்பதிகம்**

1. பெரும்பாலும் பத்து அல்லது பதினொரு செய்யுட்கள் கொண்டதாய்த் தேவாரத்துள்ளது போலத் தெய்வத்தைப் புகழ்ந்துரைக்கும் பாடற்றொகை
2. புத்தரின் அருமை பெருமைகளைப் பாராட்டும் ஒரு நூல் (சி. சி. பர. சௌத். 2, ஞானப்.)

**திருப்பல்லாண்டு**

1. நாலாயிரப் பிரபந்தத்துள் பெரியாழ்வார் பாடிய ஒரு பிரபந்தம்
2. சிவபிரான் மீது சேந்தனார் பாடிய ஒரு பிரபந்தம்

**திருப்பள்ளியெழுச்சி**

கடவுளைத் துயிலெழுப்பும் பாசுரங்கள் அமைந்த பிரபந்தம் (திவ்.)

**திருவிருக்குக் குறள்**

ஓரடி இரு சீராக நாலடியான் வரும் செய்யுள் வகை (தேவா. 138)

**திருவிளையாடல்**

மதுரையில் சிவபெருமான் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்கள்

**திலதுக் கலித்துறை**

கட்டளைக் கலித்துறை வகை (தஞ்சைவா. 1, உரை)

## தீ

**தீக்கணம்**

செய்யுண் முதற்சீராக அமைக்கத் தகாததும் நிரை நேர் நிரை என வருவதுமாகிய செய்யுட்கணம்

**தீர்க்க சந்தி**

ஓருயிர் தன்னினத்துயிரோடு புணரும்போது அவ்விரண்டும் அவ்வினத்து நெட்டுயிராக மாறும் வடமொழிச் சந்தி

**தீவகம்**

1. விளக்கு
2. முதனிலைத் தீவகம், இடைநிலைத் தீவகம், கடை நிலைத் தீவகம் என மூவகைப்பட்டு, ஒரு சொல் ஓரிடத்தினின்று பல விடத்துஞ் சென்று பொருள் விளக்கும் அணி (தண்டி. 38)

## து

**துடி**

கால நுட்பம். குமரனாடல், சத்தக் கன்னிகைகளாடல், குறிஞ்சிநிலப் பறை, பாலைநிலப் பறை. வாய்திறந் தம்பவளந் துடிப்பப் பாடுமின் (திருவா. 9, 11)

**துடிக்கூத்து**

பதினொரு வகை ஆடல்களுள் பகைவரை அழித்தபின் முருகக் கடவுள் சத்த மாதரும் துடி கொட்டியாடிய கூத்து (சிலப். 6, 51) (பிங்.)

**துடிநிலை**

1. போர்க்களத்தே மறவரது வீரம் பெருகத் துடி கொட்டுதலைக் கூறும் புறத்துறை: மறங்கடைக் கூட்டிய துடிநிலை(தொல். பொ. 59)
2. வழிவழியாய்த் துடி கொட்டி வருவோனது குணங் களைக் கூறும் புறத்துறை (புறப். வெ. 1, 19)

**துணங்கை**

இரு கைககளையும் விலாப்புடைகளில் ஒற்றியடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒருவகைக் கூத்து: பிணந்தின் வாய துணங்கை தூங்க (திருமுருகு. 56)

2. பேய்

**துணிபுத்தூக்கு**
எழுவகைத் தூக்குள் ஒன்று

**துணிபொருள்**
நிச்சயித்த பொருள்: குற்றி யல்லன் மகன் எனத் துணி பொருண் மேலானும் (தொல். சொல். 25, சேனா.)

**துணிவு**
தனியிடை எதிர்ப்பட்ட தலைவியைத் தெய்வ மகளோ மானிட மகளோ என்று ஐயுற்ற தலைவன் மானிட மகளே என ஒருதலைத் துணிதலாகிய கைக்கிளை வகை

**துணிவுவமை**
உவமேயத்தை உவமானமாக முதலில் ஐயுற்றுப் பின் உவமேயமாகவே துணியும் அணிவகை (வீரசோ. அலங். 15, உரை)

**துணைவஞ்சி**
பிறரை வெல்லவேனும் கொல்லவேனுந் துணிந்து நிற்கின் றானொருவனைச் சில கூறிச் சந்து செய்வித்தலைக் கூறும் புறத்துறை (புறநா. 45)

**துணைவினை**
ஒரு வினைக்குத் துணையாக வரும் வினை

**தும்பைத் திணை**
பெருவீரச் செயல் காட்டிப் பகைவரோடு போர் செய்தலைக் கூறும் புறத்திணை வகை (தொல். இடம்.)

**தும்பை மாலை**
தும்பை மாலை யணிந்து பெரும்போர் புரிந்த வீரனைப் புகழும் பிரபந்த வகை (தொன்.வி. 283, உரை)

**தும்பையரவம்**
தன் சேனையை அரசன் தலையளி செய்தலைக் கூறும் புறத் துறை (பு.வெ. 7, 2)

**துயிலெடைநிலை**
1. பாசறைக்கண் துயிலும் வேந்தரைச் சூதர் அவர் புகழ் கூறித் துயிலெழுப்பல் கூறும் புறத்துறை: தாவினல் லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதரேத்திய துயிலெடை நிலையும் (தொல். பொ. 91)
2. அரசர் முதலியோரைத் துயிலெடுத்தல் பற்றிப் பாடப் படும் பிரபந்தம் (சது.)

**துள்ளல்**

துள்ளலோசை : கலிப்பாவிற்குரிய ஓசை (காரிகை செய். 1, உரை)

**துள்ளலோசை**

கலிப்பாவுக்குரிய ஓசை (காரிகை. செய்.1, உரை)

**துறை**

1. அகமும் புறமும் பற்றிய தமிழ்ப்பொருட்கூறு: தீந்தமிழின் றுறைவாய் நுழைந்தனையோ (திருக்கோ. 20)
2. பாவினத் தொன்று (காரிகை. செய். 6, உரை)

**துறைப்பாட்டு**

அகப்பொருட் புறப்பொருட் டுறைகளைக் குறித்து வருஞ் செய்யுள் (இலக்.வி. 603, உரை)

## தூ

**தூக்கானந்தம்**

தாளமமைத்து இசையில் பாடும்போது பெயரைப் பிளந்து கூறுதலானும் குரலை யுயர்த்துத் தாழ்த்துக் கூறுதலானும் தலைவன் பெயர் புலனாகாதமையும் குற்றம் (யாப். வி. 96, பக். 522)

**தூக்கு**

1. மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும் (நன், 53) செய்யுள் (திவா.)
2. பாக்களைத் துணித்து நிறுக்குஞ் செய்யுளுறுப்பு (தொல். பொ. 313) கூத்து (திவா.) இசை-பாணி நடைத் தூக்கு (புறப். வெ. 12. வென்றி. 17)

**தூங்கல்**

வஞ்சியோசை (காரிகை. செய். 1)

**தூங்கல் வண்ணம்**

வஞ்சியோசை பயின்றுவரும் சந்தம் : தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும் (தொல். பொ. 542)

**தூங்கலோசை**

வஞ்சிப்பாவிற்குரிய ஓசை : தூங்கலோசை வஞ்சியாகும் (தொல். பொ. 396)

**தூங்கிசை**

செய்யுட்குரிய நால்வகை யோசையுள் ஒன்று

**தூங்கிசைச் செப்பல்**
இயற்சீர் வெண்டளையான் மாமுன் நிரையும் விளமுன் நேருமாக வரும் வெண்பாவுக்குரிய ஓசை (காரிகை. செய். 1, உரை)

**தூங்கிசைத் துள்ளல்**
கலிப்பாவுக்குரிய ஓசை வகை (யாழ். அக.)

**தூங்கிசை யகவல்**
நிரையொன்றாசிரியத் தளையான் வரும் அகவற் பாவுக் குரிய ஓசை (காரிகை. செய். 1, உரை)

**தூசங்கொளல்**
ஒருவன் பாடிய வெண்பாவின் ஈறு முதல் எழுத்துக்களே ஈறும் முதலுமாக மற்றொரு வெண்பாப் பாடுவது (யாப். வி. 96, பக். 502)

**தூதிடையாடல்**
மாலைக்காலத்துத் தலைவியுற்ற துன்பம் நோக்கித் தோழி தலைவனிடம் தூதாக நடத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 12. இருபாற். 3)

**தூதிற் பிரிவு**
தன் அரசன் தூதாகத் தலைவன் பிரியும் பிரிவு: (ஓதற் பிரிவுந் தூதிற் பிரிவும் அந்தணர் முதலிய மூவரிடத்தன (தொல். பொ. 26, உரை)

**தூது**
1. தூது மொழி
2. காமக் கூட்டத்துக் காதலரை இணக்குஞ் செயல்
3. செய்தி
4. பாணன் முதலிய உயர்திணைப் பொருளையேனும் கிள்ளை முதலிய அஃறிணைப் பொருளையேனும் ஊடல் நீக்கும் வாயிலாகக் காதலர்பால் விடுத்தலைக் கலிவெண்பாவாற் கூறும் பிரபந்தம் (இலக். வி. 874)

**தூதுவென்றி**
தூதுவன் தான் சென்ற காரியத்தில் அடைந்த வெற்றியைக் குறித்துக் கூறும் புறத்துறை (மாறனலங். 84, உரை. பக். 96)

## தெ

**தெம்பாங்கு**
தெம்மாங்கு : தென்னாட்டில் நாட்டுப்புறத்தார் பாடும் இசைப்பாட்டு வகை

**தெய்வக் காப்பு**
பாட்டுடைத் தலைவனைத் தெய்வங் காக்கவென்று கூறும் பிள்ளைத்தமிழ்ப் பகுதி (திவா.)

**தெய்வப் புணர்ச்சி**
காண்க : இயற்கைப் புணர்ச்சி

**தெரிகவி**
தெரிந்தெடுக்கப்பட்ட செய்யுட்டிரட்டு

**தெரிகவிச் செய்யுள்**
பல நூல்களினின்று பொறுக்கி யெடுக்கப்பட்ட செய்யுட்களின் தொகுதி

**தெரிதரு தேற்றம்**
ஐயுற்றதினை ஆராய்ந்து துணிவது தெரிவிக்கும் உவமையணிவகை (சங். அக.)

**தெரிநிலை**
1. தெளிவுபட அறிவிக்கும் நிலை (நன். 423)
2. ஆராய்ந்து அறியும் நிலை (தொல். சொல். 256, சேனா.) காண்க : தெரிநிலை வினை

**தெரிநிலையும்மை**
காண்க : உம்: தெரிதற் பொருட்கண் வருதலிற் றெரிநிலையும்மை (தொல். சொல். 255, சேனா.)

**தெரிநிலை வினை**
காலத்தை வெளிப்படையாகத் தோற்றுவிக்கும் வினை (நன். 320, உரை)

**தெரியாநிலை வினை**
காண்க : குறிப்பு வினை (சங். அக)

**தெரிவில் புகழ்ச்சி**
ஒன்றைப் பழித்தற்கு வேறொன்றைப் புகழும் அணி (வீரசோ. அலங். 32)

**தெளிவில் புகழ்ச்சி**
பழிப்பதுபோல் புகழ்வதாகிய அணி (வீரசோ. அலங். 14, உரை)

**தெளிவு**

1. துவக்கம்
2. பொருள் வெளிப்படப் புலப்படுதலாகிய செய்யுட் குணம் : தெளிவெனப்படுவது பொருள் புலப்பாடே (தண்டி. 16)

## தே

**தேமா**
நேர்நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 4)

**தேமாங்கனி**
நேர் நேர் நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 4)

**தேமாங்காய்**
நேர் நேர் நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை உறுப். 4)

**தேமாந் தண்ணிழல்**
நேர் நேர் நேர் நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 5)

**தேமாந்தண்பூ**
நேர் நேர் நேர் நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 5)

**தேமா நறுநிழல்**
நேர் நேர் நிரை நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 5)

**தேமா நறும்பூ**
நேர் நேர் நிரை நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 5)

**தேர் மறம்**
அரசனது போர்த் தேரின் சிறப்பினைக் கூறும் புறத்துறை (புற. வெ. 7, 10)

**தேர் முல்லை**
பகைவரை வென்று மீண்ட தன் தலைவனது தேர் வரவறிந்து தலைவி மகிழ்ந்துகூறும் புறத்துறை (பு. வெ. 10. முல்லைப். 3)

**தேர் வென்றி**

தன்றேரைச் செலுத்திப் பகைவர் தேர்களை அழிக்கும் வீரனது செயலைச் சிறப்பிக்கும் புறத்துறை (பு. வெ. 12, ஒழிபு. 14)

**தேவகதியெழுத்து**

செய்யுண் முதலில் வருதற்குரியனவும் நன்மை பயப்பனவு மாகிய அ, இ, உ, எ, க, ச, ட, த, ப என்ற எழுத்துக்கள் (வெண்பாப். முதன்மொழி. 18, உரை)

**தேவபாணி**

தேவரைப் புகழும் பாட்டுவகை : செந்துறை வெண்டுறை தேவபாணி யிரண்டும் (சிலப். 6, 35, உரை)

**தேற்றேகாரம்**

நிச்சயப் பொருளை உணர்த்தும் ஏகாரம் (குறள். 261, உரை)

**தை**

தமிழ் பத்தாம் மாதம் : ''தைஇத் திங்கட் டண்ணிய தரினும்'' (குறுந்தொ. 196) மகர ராசி : பூசநாள்

**தையல்**

அழகு, பெண், வியங்கோண்முற்று. மேகம் : ''தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்'' (திருமந். 10)

## தொ

**தொகாநிலைத் தொடர்**

முற்றுத்தொடர், பெயரெச்சத் தொடர், வினையெச்சத் தொடர், எழுவாய்த் தொடர், விளித்தொடர், வேற்றுமைத் தொடர், இடைத்தொடர், உரித் தொடர், அடுக்குத் தொடர் என்று ஒன்பது வகைத்தாய் இடையில் வேற்றுமை யுருபு முதலியன தொக்கு நில்லாமலும் ஒருமொழித் தன்மைப் படாமலும் உள்ள தொடர் சொற்கள் (நன். 152, உரை)

**தொகுத்தல்**

1. நூல் யாப்பு நான்கனுள் விரிந்த நூலைச் சுருக்கிக் கூறுவது (தொல். பொ. 652)
2. சொல் அல்லது அசை கெடுதலாகிய செய்யுள் விகாரம். (தொகுக்கும் வழித் தொகுத்தலும்—தொல். சொல். 403)

**தொகுத்துக் கூறல்**

முப்பத்திரண்டு உத்திகளுள், நூல் நுவல் பொருளை ஓரிடத்தே சுருக்கிக் கூறுவது (தொல். பொ. 666)

**தொகை**

வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத் தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என அறுவகையாய் ஒரு சொன்னீர்மைப்பட்ட தொடர்ச் சொல் (தொல். சொல். 420)

**தொகைக் குறிப்புச் சொல்**

குறிப்பினால் தொகை கொண்ட பொருளை உணர்த்தும் எண்ணுப்பெயர் (நன். 269)

**தொகைச் சூத்திரம்**

பல்திறப் பொருள்களையும் வேறுவேறாகத் தொகுத்துச் சொல்வன. "நன் கியம்புவ னெழுத்தே" (நன். 20, 56)

**தொகைநிலை**

1. வென்ற வேந்தன் தன் படைகட்குச் சிறப்புச் செய்யுமாறு அதனை ஒருங்கு தொகுக்கும் உழிஞைத் துறை (தொல். பொ. 68)
2. போரில் இருதிறத்தாரும் ஒருங்கு மாய்ந்ததைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 28)
3. பகை வேந்தரெல்லாம் ஒருங்கு பணிதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 32)

**தொகைநிலைச் செய்யுள்**

ஒருவராலேனும் பலராலேனும் பாடப்பட்டனவாய்ப் பொருள் இடம் காலம் தொழில் என்பன பற்றியும் பாட்டு அளவு என்பன பற்றியும் ஒருங்கு திரட்டப்பட்ட செய்யுள் நூல் (தண்டி. 4)

**தொகை யுருவகம்**

'ஆகிய' என்ற உருபு தொக்கு வரும் உருவகம் (தண்டி. 35)

**தொகை மொழி**

பொருளணிவகை (யாப். வி. 56)

**தொகைநிலையுருவகம்**

காண்க : தொகையுருவகம்; 'ஆகிய' என்ற உருபு தொக்கு வரும் உருவகம் (தண்டி. 35)

**தொகை யுவமம்**

பொதுத்தன்மை வெளிப்பட்டு வாராமல் ஆராய்ந்துணரும் படி மறைந்து நிற்கும் உவமை (தண்டி. 30)

**தொகைவிரி**

நூல் யாப்பு நான்கனுள் விரித்துக் கூறியதனைத் தொகுத்தும் தொகுத்துக் கூறியதனை விரித்தும் கூறும் முறை (நன். 50)

**தொடர்நிலைச் செய்யுள்**

பழையதொரு கதை மேல் நாற்பொருளும் வனப்பும் அமைய இயற்றப்படும் செய்யுணூல் (சீவக. 1, உரை)

**தொடர்நிலைச் செய்யுள் குறியணி**

சாதிக்க வேண்டும் பொருளின் காரணத்தை வெளிப்படையாகக் கூறும் அணிவகை (அணியி. 60)

**தொடர்பின்மையணி**

தொடர்பின்றிக் காரியம் நிகழ்ந்ததாகக் கூறும் அணி (அணியி. 37)

**தொடர்பு**

பாட்டு (பிங்.)

**தொடர்புயர்வு நவிற்சி**

தொடர்பில்லாதிருப்பத் தொடர்பையும் தொடர்பிருப்பத் தொடர்பின்மையையும் கூறும் உயர்வு நவிற்சியணி

**தொடர் முழுதுவமை**

உவமான வாக்கியத்திலும் உவமேய வாக்கியத்திலும் பொதுத் தன்மையைத் தெரிவிக்கும் சொல் தனித்தனி வரும் அணி (அணியி. 17)

**தொடர்மொழி**

1. இரண்டெழுத்துக்கு மேற்பட்ட எழுத்துக்களைக் கொண்ட சொல் : இரண்டிறந் திசைக்குந் தொடர் மொழி யுளப்பட (தொல். எழு. 45)
2. இரண்டு சொற்களால் ஆகும் தொடர் : தொடர்மொழி பல பொருளன (நன். 260)

**தொடர்க் காஞ்சி**

1. போர்ப் புண்ணுற்ற தன் கணவனைப் பேய் தீண்டு தலை நீக்கிய மனைவி தானுந் தீண்டாதிருத்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 79)

2. தறுகண் வீரனது புண்ணினைத் தீண்டுதற்கு அஞ்சி நடுங்கிப் பேய் பெயர்ந்தமை கூறும் புறத்துறை (பு. வெ. 4, 19)

**தொடை**
1. பாட்டு
2. மோனைத் தொடை, எதுகைத் தொடை, முரண் தொடை, இயைபுத் தொடை, அளபெடைத் தொடை என்ற ஐவகையான செய்யுள் தொடுக்கும் தொடை (இலக். வி. 723)

**தொடை முரண்**
முரண் தொடை (செம்மை, பசுமை, தொடை முரண்-சீவக 2, உரை)

**தொடையானந்தம்**
அளபெடைத் தொடைப் பாட்டினுள் பாட்டுடைத் தலைவனது பெயர் சாத்தி அளபெடுப்பத் தொடுக்கும் ஆனந்தக் குற்றம் (யாப். வி. 522)

**தொல்கதை**
புராணம் : சூத னோதியது மூவாறு தொல்கதை (கந்தபு. அவையடக். 8)

**தொழிலாகு பெயர்**
வற்றலென்பது போலத் தொழிலின் பெயர் அதனையுடைய பொருட்கு ஆவது (நன். 290)

**தொழிலுவமம்**
தொழிலைப் பொதுத் தன்மையாகக் கொண்ட உவமையணி வகை (தண்டி. 29)

**தொழிற் சொல்**
1. வினைச் சொல்
2. தொழிற்பெயர் (யாப். வி. 536)

**தொழிற்பெயர்**
1. வினைப்பெயர் : தொழிற்பெயர் முன்னர் (தொல். எழுத். 296)
2. வினையாலணையும் பெயர் : தொழிற் பெயராயி னேகாரம் வருதலும் (தொல். சொல். 141)

**தொறு**
தான் புணர்ந்த மொழியின் பொருண்மையினைப் பலவாக்கி அடுத்தடுத்து ஆங்காங்கு என்பனபட நிற்கும் ஓரிடைச்

சொல் : நவிறோறும் நூனயம் போலும் (குறள். 783, நன். 420, மயிலை.)

**தொன்மை**

1. பழமை : தொன்மை யுடையார் தொடர்பு (நாலடி. 216)
2. உரை விரவிப் பழைமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவது (தொல். பொ. 549)

**தொனியர்த்தம்**

ஆற்றலானன்றிக் குறிப்பானறியப்படும் பொருள்

## தோ

**தோல்**

பழையதொரு பொருண்மேல் மெல்லென்ற சொல்லான் அறம் பொருளின்பம் வீடு என்ற விழுமிய பொருள் பயப்பச் செய்யப்படும் நூல் (தொல். பொ. 551)

**தோலுழிஞை**

கிடுகு படையைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 12)

**தோன்றல் விகாரம்**

புணர்ச்சி விகாரம் மூன்றனுள் புதிதாக எழுத்து, சாரியை முதலியன தோன்றுகை (நன். 154, உரை)

**தோன்றாவெழுவாய்**

வெளிப்படச் சொல்லப்படாத எழுவாய் (சீவக. 1, உரை)

## ந

**நகுநய மறைத்தல்**

களவுக் கூட்டத்தின் முன் தலைவி நாணால் உள்ளடங்கிய தன் மகிழ்ச்சியைத் தலைவற்குப் புலனாகாதவாறு மறைக்கை (தொல். பொருள். 261)

**நச்சுச்சொல்**

செய்யுளில் வழங்கக் கூடாத தீச்சொல்

2. கொடுஞ்சொல்

**நச்செழுத்து**

பிரபந்தத்தின் முதற்சொல் மங்கல மொழியல்லாவிடத்து, ஆதி மொழிக்கண் வருதற்கு ஆகாதன என்று விலக்கப்

படும் ய்ர்ல்ள்; யா, ரா, லா, ளா; யோ, ரோ, லோ, ளோ; ஃ, மகரக்குறுக்கம் அளபெடையாகிய எழுத்துக்கள் (இலக் வி. 780)

**நட்சத்திர மாலை**

1. 27 பாடல் கொண்ட பிரபந்த வகை
2. சந்திரனுக்குரித்தான 27 நட்சத்திரங்கள்
3. நட்சத்திரக் கூட்டம்

**நடுகல்**

இறந்த வீரரின் உருவமும் பெயரும் பீடுமெழுதிப் பெரும் பாலும் அவரைப் புதைத்த விடத்தில் நடுஞ்சிலை: காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல் (தொல். பொ. 60)

**நடுங்க நாட்டம்**

தலைவனுக்கு ஏதமுளதோ என்று தலைவி ஐயுற்று நடுங்கு மாற்றால் தோழி அவரிடஞ் செய்தியொன்று கூறிக் களவொழுக்கத்தை அவள் வாயிலாகவே அறிய முயல்வதைக் கூறுந்துறை (திருக்கோ. 70, உரை)

**நடுவுநிலைத் திணை**

பாலைத்திணை : நடுவு நிலைத்திணையே நண்பகல் வேனிலோடு (தொல். பொ. 9)

**நடுவெழுத்தலங்காரம்**

சித்திரகவி வகை

**நடைவழு**

செய்யுட் குற்றங்களுள் ஒன்று (யாப். வி. 525)

**நயனப்பத்து**

தலைவனுடைய கண்களைப் பத்துச் செய்யுளாற் புகழும் பிரபந்தம் (இலக். வி. 852, உரை)

**நல்லிசை வஞ்சி**

1. பகைவரது வேற்றுப்புலம் அழியவிட்ட வீரனது வெற்றியை மிகுத்துக் கூறும் புறத்துறை (பு.வெ. 3, 24)
2. பகைப்புலம் அழிவெய்தியதற்கு இரங்கலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8, 25)

**நலம் பாராட்டல்**

தலைவியின் அழகை வியந்துரைக்கும் அகத்துறை: கலந்துழி மகிழ்தலு நலம் பாராட்டலும் (நம்பியகப். 125)

**நலம் புனைந்துரைத்தல்**

நலம் பாராட்டல் (குறள். 112, அதி.)

**நலிபு**

ஆய்தவெழுத்திற்குச் செய்யுளில் வழங்குமொரு பெயர் (தொல். பொ. 535, உரை)

**நலிபு வண்ணம்**

ஆய்தம் அடிக்கடி பயின்று வருஞ் சந்தம் (தொல். பொ. 535)

**நவமணிமாலை**

ஒன்பது பாவகையால் அந்தாதியாக இயற்றப்படும் ஒரு பிரபந்தம் (இலக். வி. 837)

நவரத்தினமாலை : அணிகிளர் மாடவீதி நச்சரவுச்சியட்கு நவமணி மாலை மானும் (குற்றால. தல. நகரச் சருக். 13)

**நன்மொழி புணர்தல்**

நூலழகு பத்தனுள் இனிய மொழிகளைச் சேர்த்து வழங்குதல் (நன். 13)

## நா

**நாகபந்தம்**

இணைந்த இரண்டு பாம்புகள் போல வரைந்த சித்திரத்தின் அறைகளில் எழுத்துக்களை அடைக்கும்படியமைந்த சித்திரகவி வகை (தண்டி. 95)

**நாட்பொருத்தம்**

பாட்டுடைத் தலைவன் பெயரின் முதலெழுத்தின் நாண் மீனுக்கும், நூலின் முதன் மொழியின் முதல் எழுத்தின் நாண்மீனுக்கும் உள்ள பொருத்தம் (வெண்பாப். முதன். 1)

**நாடகக் காப்பியம்**

நாடகத் தமிழ் நூல் : நாடகக் காப்பிய நன்னூ னுனிப் போர் (மணி. 19, 80)

**நாடக சந்தி**

முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்று ஐவகைப்பட்ட நாடகக் கதைப் பொருத்து (சிலப். 3, 13, உரை)

**நாடகத் தமிழ்**
முத்தமிழுள் கூத்துப்பற்றி வழங்கும் தமிழ் இலக்கியப் பகுதி : இனி, நாடகத் தமிழில் தேவபாணி வருங்கால் (சிலப். 6, 35, உரை)

**நாடக வழக்கு**
1. நாடகத்திற்குரிய நெறி
2. புனைந்துரை வழக்கு : நாடக வழக்கினு முலகியல் வழக்கினும் (தொல். பொ. 53)

**நாண்மங்கலம்**
1. தருமத்தினை யுண்டாக்கும் செங்கோலினையும் அருளினையும் விரும்பியோன் பிறந்த நாளின் சிறப்பைச் சொல்லும் புறத்துறை (பு.வெ. 9, 24)
2. அரசற்கு யாண்டு இத்துணை சென்றது என்று எழுதும் மங்கலம் (தொல். பொ. 91, பக். 336)

**நாண்முல்லை**
போரின் பொருட்டுக் கணவன் பிரிந்த இல்லிலே தலைவி தற்காத்துத் தங்கிய நிலைமை கூறும் புறத்துறை (பு,வெ. 10. முல்லைப். 4)

**நாணநாட்டம்**
தலைவி நாணும் வகையால் அவட்குத் தலைவனுடன் கூட்ட முன்மையைச் சோதித்தறிகை (திருக்கோ. 67)

**நாணுவரையிறத்தல்**
பத்து அவத்தையுள் நாண் நீங்குதலாகிய அவத்தை வகை (தொல். பொ. 100)

**நாமமாலை**
தலைவன் பெயர்களை வஞ்சிப்பாவாற் புகழ்ந்து கூறும் பிரபந்தவகை (இலக். வி. 866)

**நாழிகைக்கவி**
நாழிகை வெண்பா : அரசரும் கடவுளரும் நாழிகைதோறும் செய்யும் செயல்களை 30வெண்பாவில் கூறும் பிரபந்தவகை (பன்னிருபா. 290, 291)

**நாள்**
வெண்பாவின் ஈற்றடி யிறுதியில் வரும் ஓரசைச்சீர் வாய்பாடு (காரிகை. உறுப். 4)

**நாற்கணம்**

உயிர்க்கணம், வன்கணம், மென்கணம், இடைக்கணம் என்ற நால்வகை எழுத்துக்கள் (யாழ். அக.)

**நாற்கதி**

தேவர், நரகர், மக்கள், விலங்கு என்ற நால்வகைப் பிறப்பு (யாழ். அக.)

**நாற்கவி**

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால்வகைக் கவி (பிங்.)

2. ஆசுகவி முதலிய நால்வகைப் புலவர்கள் (வச்சணந். செய்யு. 1)

**நாற்பண் (இசை)**

நான்கு நிலத்துக்குரிய குறிஞ்சி, பாலை, மருதம், செவ்வழி என்ற பண்கள்

**நாற்பொருள்**

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருள்கள் : நாற்பொருட் பயத்தோ டெழுதந் தழுவி (நன். 4)

**நான்மணிமாலை**

அந்தாதியாகப் பாடப்பட்டதும் வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம் என்பன மாறி மாறி இயைந்து வரும் 40 செய்யுளுடையதுமான பிரபந்தவகை (பன்னிருபா. 225)

**நானிலம்**

குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என்னும் நால்வகைப் பட்ட நிலம் : நாவறழீ இயவிந் நானிலந் துஞ்சும் (திருக்கோ. 191)

## நி

**நிதரிசனம்**

1. திருஷ்டாந்தம்
2. ஒரு பொருளின் செயல் முதலியன மற்றோர் பொருளுக்கு நன்மையோ, தீமையோ புலப்பட நிகழ்வதாகக் கூறும் அணிவகை (தண்டி. 83)

**நிந்தையுவமை**

உவமேயத்தை உயர்த்தி உவமானத்தை இகழ்ந்து சொல்லும் உவமையணிவகை (தண்டி. 30, உரை)

**நியமச்சிலேடை**
பல பொருளுக்கு இயையுமாறு சிலேடித்ததை ஒன்றுக்கு நியமிக்கும் சிலேடையணி (தண்டி. 75)

**நியமச் சூத்திரம்**
ஓரிடத்திற் பல விதிகள் நிகழும் நிலையில் குறித்த ஒன்றை வரையறுக்குஞ் சூத்திரம் (யாப். வி. 1, பக். 11)

**நியம விலக்குச் சிலேடை**
நியமஞ் செய்து கூறிய சிலேடையை வேறொன்றற்குங் கூறி அந்நியமத்தை விலக்கும் சிலேடையணி (தண்டி. 76, உரை)

**நியமவுவமை**
உவமானமாகக் கூறத்தக்கன பலவற்றுள் சிறந்த தொன்றனையே தேற்றேகாரத்தால் நிச்சயித்துக் கூறும் உவமை வகை (தண்டி. 30, உரை. 9)

**நிரனிறை**
பொருள்கோள் நான்கனுள் நிறுத்த முறையே சொற்களை அன்னுவயிக்கை (தொல். சொல். 405)

**நிரனிறை வழு**
ஒரு நிரலை முன்வைத்து அதன்பின் வைக்கும் நிரலை மாறுபட வைக்குங் குற்றம் (இலக். வி. 697)

**நிரை**
காண்க : நிரையசை. இணைக்குறிலேனும் ஒற்றடுத்த இணைக்குறிலேனும் குறில் நெடிலாலேனும் ஒற்றடுத்த குறில் நெடிலாலேனும் ஆகிய செய்யுளசை

**நிரைகோட்பறை**
நிரை கவரும்போது அடிக்கும் பாலைப் பறைவகை (இறை. கள. 1, 18)

**நிரை கோடல்**
போர்த் தொடக்கமாகப் பகைவர் பசு நிரையைக் கவர்கை : (இங்ஙனம் நிரைகோடலை மேவினாராக (சீவக. 1847: உரை)

**நிரைபசை**
முற்றியலுகரத்தாலேனும் குற்றியலுகரத் தாலேனும் தொடரப்படும் நிரையசை (தொல். பொ. 327, உரை)

**நிரைபு**
காண்க : நிரைபசை முற்றியல் அல்லது குற்றியலுகரம் தொடர்ந்துவரும் நிரையசை

**நிரைபெயர்த்தல்**
எதிரிகள் கைக்கொண்ட ஆநிரைகளைத் திரும்பக் கைப்பற்றல் (பு.வெ. 2,1, கொளு)

**நிரை மீட்சி**
பகைவர் கவர்ந்த பசு நிரையை மீட்கை

**நிரையசை**
இணைக்குறிலாலேனும் ஒற்றடுத்த இணைக் குறிலாலேனும் குறில் நெடிலாலேனும் ஒற்றடுத்த குறில் நெடிலாலேனும் ஆகிய செய்யுளசை

**நிரையொன்றாசிரியத்தளை**
ஆசிரியப்பாவில் நிரையீற்றியற்சீர் முன் நிரை முதலியற் சீர் வந்து ஒன்றுந்தளை (காரிகை. உறுப். 10)

**நிரோட்டகம்**
இதழியைந்து பிறவா எழுத்துக்களால் ஆகிய செய்யுள் (திருச்செந்தில் நிரோட்டகயமக வந்தாதி)

**நிலக்கணம்**
மூன்று நிரையடுத்து வருவதும் செய்யுளின் தொடக்கத் திருப்பின் நன்மை பயக்குமென்று கருதப்படுவதுமான செய்யுட்கணம் : நிலக்கணந்தானே மலர்த்திரு விளங்கும் (இலக். வி. 800, உரை)

**நிலைத்திணை**
அசரம். இறைவன் இயங்குதிணைக்கண்ணும் நிலத்திணைக் கண்ணும் அவற்றின்தன்மையாய் நிற்குமாறு (தொல் எழுத். 46, உரை)

**நிலைமடக்கு**
அணிவகை (திவா.)

**நிலைமண்டிலம்**
காண்க : நிலைமண்டில வாசிரியப்பா. சீர்கள் தம்மில் அளவொத்த அடிகளையுடைய ஆசிரியம் (இலக். வி. 734, உரை)

**நிலைமண்டில வாசிரியப்பா**
சீர்கள் தம்மில் அளவொத்த அடிகளையுடைய ஆசிரியம் (இலக். வி. 734, உரை)

**நிலைமொழி**

பதப் புணர்ச்சிக்கண் முதனிற்கு மொழி : நிலைமொழி முன்னர் வேற்றுமை யுருபிற்கு (தொல். எழுத். 173)

**நிவப்புத் தூக்கு**

ஐஞ்சீருள்ள இசைப்பாட்டு (சிலப். 3, 16, உரை)

**நிறுத்தச்சொல்**

காண்க: நிலைமொழி : நிறுத்தச் சொல்லே குறித்து வரு கிளவி யென்று (தொல். எழுத். 107)

**நிறையவை**

எல்லாப் பொருளையும் அறிந்து, எதிர்வரும் மொழிகளை எடுத்துரைக்க வல்லார், குழுமிய அவை (யாப். வி. பக். 515)

**நினைப்பணி**

ஒரு பொருள் ஒப்புமையாற் பிறிதொன்றனை ஞாபகப் படுத்துவதாகக் கூறும் அணிவகை (அணியி. 8)

## நீ

**நீட்டல்**

1. நீளச் செய்கை
2. குற்றுயிரை நெட்டுயிராக இசைக்கும் செய்யுள் விகார வகை (தொல். சொல். 403)

**நீடுநினைந்திரங்கல்**

கூட்டம் வாயாது காலம் நெடிதாகத் தலைவன் தலைவியை நினைந்து இரங்குதலாகிய அகப்பொருட்டுறை (சங். அக.)

**நீண்மொழி**

1. சபதம்: நீண்மொழிக் குன்றா நல்லிசைச் சென் றோம்பல் (மலைபடு. 539)
2. வீரனொருவன் செய்த வஞ்சினங் கூறும் புறத்துறை (புறநா. 287, தலைப்பு)

**நீர்க்கணம்**

செய்யுளின் முதலில் மங்கலமாக அமைக்கத்தக்கதும் நேர் நிரை நிரை யென வருவதுவாகிய செய்யுட்குணம் (திவா.)

**நீர்ப்படை**

நடுகல்லை நீராட்டித் தூய்மை செய்தலைக் கூறும் புறத் துறை: காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல் (தொல். பொ. 60)

**நீராடற் பருவம்**

பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவம் பத்தனுள் பாட்டுடைத் தலைவி நீராடுதலைக் கூறும் பகுதி

**நீரோட்டி**

நிரோட்டகம்

## நு

**நுட்பம்**

1. நுண்மை: நெய்யினும் யாருமறிவர் புகைநுட்பம் (நாலடி. 282)
2. அறிவு நுட்பம்
3. பொருளின் நுட்பம்: திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம் (நன். 18)

   ஒருகருத்தைக் குறிப்பினாலுணர்த்தும் அணி (தண்டி. 62)

   நுண்ணிய ஆராய்ச்சி தோன்ற எழுதப் பெற்ற உரை (யாப். வி. 1)

**நுவலாச்சொல்**

ஒரு பொருளைப் பழித்தாற் போலப் புகழும் அணி (வீரசோ. அலங். 32)

**நுவலா நுவற்சி**

காண்க: 1. ஒட்டணி (குறள். 475, உரை)

2. குறிப்பெச்சம் (நன். 359, மயிலை.)

**நுவலுழித் தோற்றம்**

1. பாடி வீட்டுள்ளோர் மகிழ்ந்துரைத்தற்குக் காரணமான நிரை கொண்டார் வரவுணர்த்தும் புறத்துறை (தொல். பொ. 58)
2. ஊரிலுள்ளோர் கண்டு மகிழ்ந்துரைத்தற்குக் காரண மான நிரை மீட்டோர் வரவுணர்த்தும் புறத்துறை (தொல். பொ. 58)

## நூ

**நூல்**

ஆகமம்: ஒற்று முரைசான்ற நூலும் (குறள். 581)

ஆலோசனை: ஏதிலவேதிலார் நூல் (குறள். 440)

**நூல் யாப்பு**
தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழி பெயர்ப்பு என நால்வகையாக இயற்றப்படும் நூலினமைப்பு (நன். 50)

**நூல் வழக்கு**
1. செய்யுள் வழக்கு
2. சாஸ்திர முறை (சீவக. 214, உரை)

**நூலழகு**
சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசையுடைமை, ஆழ முடைத்தாதல், முறையின் வைப்பு, உலக மலையாமை, விழுமியது பயத்தல், விளங்குதாரணத்தாதல் என்னும் பத்துவகை நூல் நயங்கள் (நன். 13)

**நூழில்**
1. கொன்று குவிக்கை : ஒள்வாள் வீசிய நூழிலும் (தொல். பொ. 72)
2. வீரனொருவன் பகைமன்னர் சேனையைக் கொன்று தன் வேலைத் திரித்து ஆடுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 15)
3. பொருள் கருதி வழிபறிப்பார் மக்களைக் கொன்று குவிக்குமிடம் : (நூழிலு மிழுக்கும்—(குறிஞ்சிப். 258)

**நூழிலாட்டு**
வீரனொருவன் தன் மெய்யிற்றாக்கிய வேலைப் பறித்துப் பகைவர் மேலோக்கியதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 16)

**நூற்பா**
நூற்பாவகவல். இலக்கணம் முதலிய அமைத்தற்குரிய அகவல் வகை (திவா.)

**நூற்பாவகவல்**
இலக்கணம் முதலிய அமைத்தற்குரிய அகவல் வகை (திவா.)

**நூற்றந்தாதி**
100 வெண்பா அல்லது கலித்துறை அந்தாதியாகப் பாடப் படும் பிரபந்தம் (இலக். வி. 842)

**நூன்மலைவு**
செய்யுட்குற்றம் (யாப். வி. பக். 525)

**நான்முகம்**

1. பாயிரம்
2. நூலின் ஆரம்பம் : இந்நான் முகத்து உரைக்கப் படுவதாகிய சிறப்புப் பாயிரம் (சி. போ. பா. பக். 35, சுவாமி. 50)
3. நூற்றுறை

## நெ

**நெஞ்சறி சுட்டு**

சொல்லாற் குறியாது மனத்திலுள்ள பொருளைக் குறிக்க வருஞ் சுட்டு (கலித். 140, உரை)

**நெஞ்சுவிடு தூது**

1. மனத்தைக் காதலர்பால் தூது விடுவதாக அதனை முன்னிலைப்படுத்திக் கூறும் பிரபந்தம்
2. மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றும், உமாபதி சிவா சாரியர் இயற்றியதுமான சைவ சித்தாந்த நூல்

**நெஞ்சோடு புலத்தல்**

அன்பற்ற காதலரிடஞ் செல்லும் மனத்தோடு புலந்து தலைவனேனும் தலைவியேனும் கூறும் அகத்துறை (குறள். 130, அதி.)

**நெட்டிசை**

விருத்தத்தில் நெடிய சந்தம்

**நெட்டெழுத்து**

1. இரண்டு மாத்திரை கொண்ட உயிரெழுத்து : நெட் டெழுந்திம்ப ரொத்தகுற் றெழுத்தே (தொல். எழுத். 41)
2. பெயர் முழுமையும் அடங்கிய கையெழுத்து

**நெடிலடி**

ஐஞ்சீரான் வரும் அடி : (மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே (தொல். பொ. 351)

**நெடுங்கணக்கு**

அரிச்சுவடி (தொல். எழுத், 94, உரை)

**நெடுஞ்சீர் வண்ணம்**

நெட்டெழுத்துப் பயின்றுவரும் சந்தம் (தொல். பொ. 532)

**நெடுந்தூக்கு**

தூக்கு ஏழனுள் எழுசீர் கொண்டது (சிலப். 3, 16, அரும்.)

**நெடுமொழியலங்காரம்**

போரில் வீரனொருவன் தனக்கு நிகரில்லையென்று மேம் படுத்துரைக்கும் அணி (மாறனலங். 212)

**நெடுமொழி வஞ்சி**

வீரனொருவன் பகைவர் சேனையைக் கிட்டித் தன் ஆண்மையை உயர்த்துக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 12)

**நெடுவெண் பாட்டு**

ஏழடிச் சிறுமையும் பன்னீரடிப் பெருமையும் உடைய வெண்பா வகை (தொல். பொ. 430)

**நெய்தல்**

1. கடலும் கடல் சார்ந்த இடமும்: எற்பாடு நெய்த லாதல் மெய்பெறத் தோன்றும் (தொல். பொ. 8)
2. நெய்தற்றிணையின் உரிப்பொருளாகிய இரங்கல்: நெய்தல் சான்ற வலம்பல (மதுரைக். 325)
3. சாப்பறை: ஓரினெய்தல் கறங்க (புறநா. 194)

**நெறிவிலக்கல்**

வழியின் ஏதமுணர்த்தி இரவில் அவ்வழியே தலைவியிடம் வருதல் தகாதெனத் தோழி தலைவனை விலக்கும் அகத் துறை (மாறனலங். 101, உரை, பக். 148)

## நே

**நேர்: நேரசை**

காண்க: நேர்பசை. குற்றுகர முற்றுகரங்களோடு இயைந்து வரும் நேரசை (தொல். பொ. 316, உரை)

**நேர்நிலை வஞ்சி**

காண்க: சமநிலை வஞ்சி

**நேர்பசை**

குற்றுகர முற்றுகரங்களோடு இயைந்துவரும் நேரசை (தொல். பொ. 316, உரை)

**நேரசை**

குறிலும் நெடிலும் தனித்தேனும் ஒற்றெடுத்தேனும் வரும் அசைவகை (யாப். 6)

**நேரடி**
அடி ஐந்தனுள் நாற்சீரால் வருவது (தொல். பொ. 348)

**நேரிசை**
காண்க : நேரிசை வெண்பா. இரண்டாமடியீற்றில் தனிச்சொற் பெற்றுவரும் வெண்பா வகை

**நேரிசைச் சிந்தியல் வெண்பா**
இரண்டாமடியில் தனிச்சொற் பெற்றுவரும் சிந்தியல் வெண்பா வகை (காரிகை. செய். 7)

**நேரிசை யாசிரியப்பா**
ஈற்றயலடி முச்சீராய் வரும் ஆசிரியப்பா

**நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா**
தரவொன்றும் தாழிசை மூன்றும் தனிச்சொல்லுஞ் சுரிதகமும் பெற்றுவரும் கலிப்பா (காரிகை. செய். 16)

**நேரிசை வெண்பா**
இரண்டாமடி யீற்றில் தனிச்சொற் பெற்றுவரும் வெண்பா வகை

**நேரொன்றாசிரியத்தளை**
நேரீற்றியற்சீர் முன் நேர் வருந்தளை (காரிகை. உறுப். 10, உரை)

## நொ

**நொச்சித் திணை**
நொச்சி மாலை சூடி வீரர் எயில் காத்தலைக் கூறும் புறத்திணை (பு. வெ. 5, கொளு)

**நொச்சி மாலை**
வீரர் எயில் காத்தலைச் சிறப்பிக்கும் பிரபந்த வகை (யாழ். அக.)

**நொடி**
1. சொல் : புதல்வரை மருட்டும் பொய்ந் நொடி பகரவும் (பெருங். உஞ்சைக். 33, 72)
2. கையின் இரண்டு விரல்களைத் தெறித்து உண்டாக்கும் ஒலி
3. கைவிரலை நொடிக்குங் கால நுட்பம் : கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை (தொல். எழுத். 7)

**நொண்டிச் சிந்து**

காண்க : நொண்டி நாடகம். கள்வன் ஒருவன் படையி லுள்ள குதிரையொன்றைத் திருட முயன்றபோது கால் தறியுண்டு பின் நல்வழி பெற்ற செய்தியைச் சிந்து செய்யு ளாற் புனைந்து கூறும் நாடக நூல்.

## நோ

**நோக்கலங்காரம்**

காண்க : தற்குறிப்பேற்றம் (வீரசோ. அலங். 25)

**நோக்கு**

1. ஓசை முதலியவற்றால் கேட்டாரை மீட்டும் தன்னை நோக்கச் செய்யும் செய்யுளுறுப்பு (தொல். பொ. 416)
2. விருப்பம் (யாழ். அக.)
3. ஓர் உவம உருபு (தொல். பொ. 287)

**நோக்குடைப் பொருள்**

1. குறிப்புப் பொருள்
2. கருகற் சொற்களலாமைந்த சுவையுடைப் பொருள்

**நோக்கெதிர் நோக்கு-தல்**

தலைவன் நோக்கியவிடத்துத் தலைவி எதிர் நோக்குதல் : நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு தானைக் கொண்டன்ன துடைத்து (குறள். 1082)

## ப

**பஃறொடை**

காண்க : பஃறொடை வெண்பா. நான்கடியின் மிக்கு வரும் வெண்பா (காரிகை. செய். 5, உரை)

**பஃறொடை வெண்பா**

நான்கடியின் மிக்கு வரும் வெண்பா (காரிகை. செய். 5, உரை)

**பகட்டுமுல்லை**

முயற்சியான் வந்த இளைப்பாலும் பாரம் பொருத்ததாலும் மனைக்கிழவனை உழுகின்ற எருத்துடன் உவமிக்கும் புறத்துறை (பு. வெ. 10, பொதுப். முல்லைப். 6)

**பகற்குறி**

களவொழுக்கத்திற் பகற்காலத்தே தலைவனுந் தலைவியும் சந்திக்கக் குறிப்பிட்ட இடம் (நம்பியகப். 37)

**பகாப்பதம்**
பகுக்கத்தகாத சொல் (நன். 130)

**பகுதி**
அடியொன்றுக்கு ஒன்பது எழுத்து வரும் சந்தம் (வீரசோ. யாப். 33, உரை)

**பகுதிப் பொருள் விகுதி**
தனக்கு ஒரு பொருளின்றிப் பகுதியின் பொருளிலேயே வரும் விகுதி (சீவக. 247, உரை)

**பகுபதம்**
பகுதி விகுதி முதலியனவாகப் பிரிக்கக்கூடிய மொழி (நன். 128)

**பகுபதவுறுப்பு**
பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என்ற சொல்லுறுப்புகள் (நன். 133, உரை)

**பகைத் தொடை**
காண்க : 1. முரண்டொடை
2. மாறுபட்டவற்றின் சேர்க்கை

**பசலை**
1. அழகு தேமல் : பசலை சேர்முலை மங்கையர் (கந்தபு. இரணியன். யுத். 56)
2. பொன்னிறம் : பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ (புறநா. 155)
3. காம நோயால் உண்டாம் நிற வேறுபாடு : பசலை யாயப் பிரிவு தெய்யோ (ஐங்குறு. 231)
4. இளமை : பசலை நிலவின் (புறநா. 392)
5. கவலையின்மை

**பஞ்ச காவியம்**
சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்ற ஐம்பெருங் காப்பியங்கள்

**பஞ்சலட்சணம்**
எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐவகைத் தமிழிலக்கணம்

**படலம்**
நூலின் பகுதி (தொல். பொ. 481, 484)

**படுத்தலோசை**
தாழ உச்சரிக்கப்படும் ஒலி

**படைத்து மொழிதல்**

ஒன்றனை ஏறிட்டுச் சொல்லுதல் : அவற்றைச் செய்யப் பட்டனவாக இல்லாது படைத்து மொழிந்தமையால் (இறை. 12, 86)

**படைமடம்**

அறப்போர் நெறியினின்றும் மாறுபடுகை : படைமடம் படான் பிறர் படைமயக் குறினே (புறநா. 142)

**படைவழக்கு**

தம்மில் இனமொத்த படைவீரர்க்கு அரசன் படை வழங்கு தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 4, 4)

**பண்டறி சுட்டு**

முன்னமே யறிந்ததைக் குறிக்குஞ் சுட்டு: அதுவே பண்டறி சுட்டு (இறை. உ, உரை, பக். 24)

**பண்ணத்தி**

உரையும் பாட்டுமாகச் செய்யப்படும் ஒருவகைப் பனுவல் (தொல். பொ. 492)

**பண்பாகுபெயர்**

பண்புப் பெயர் பண்பிக்கு ஆகி வருவது (தொல். சொல். 115)

**பண்பி**

பண்பையுடைய பொருள் : வினை முதலாலும் பண்பியு மாகிய ஒரு நிமித்தம் பற்றி (தொல். சொல். 427, சேனா.)

**பண்பு**

1. வண்ணம், வடிவு, அளவு, சுவை யென்னும் நாற்குணம்
2. இயல்பு : நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே (தொல். பொ. 478)
3. மனத்தன்மை
4. பண்புப்பெயர் : பண்புகொள் பெயர்க் கொடை (தொல். சொல். 18)

**பண்புகொள் பெயர்**

1. பண்புச் சொல் தழுவிய பெயர் : பண்புகொள் பெயர்க் கொடை (தொல். சொல். 18)
2. பண்படியாகப் பிறந்த பெயர்ச் சொல் (தொல். எழுத். 482, உரை)
3. பண்பியைக் குறிக்கும் பெயர் : பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும் (தொல். சொல். 115)

**பண்புத்தொகை**

பண்போடு பண்பிக்கு உளதாகிய ஒற்றுமை நயத்தை விளக்குதற்கு வரும் 'ஆகிய' என்னும் பண்புருபு தொக்கு நின்றவையும் ஒரு பொருளுக்கு இரு பெயர்கள் பொதுவும் சிறப்பும் வந்தவையும் பண்புத் தொகைகளாகும். (தொல். 899. நன். 365). முன்மொழிப் பண்புத் தொகையும் (வீரசோ. தொகை. 5, உரை)

**பண்புதொகுமொழி**

காண்க: பண்புத்தொகை: ஐம்பாலறியும் பண்புதொகு மொழியும் (தொல். எழுத். 482)

**பண்புருபு**

பண்பைக் குறிக்கும் ஆகிய என்னும் சொல்லுருபு (நன் 365, உரை)

**பண்புவமை**

ஒத்த பண்பு சொல்லி உவமிக்கும் உவமை (தண்டி. 29)

**பண்பொட்டு**

காண்க: பண்புத்தொகை. வடாஅ தென்னும் முற்று வினைக் குறிப்பைப் பெயர்ப்படுத்திப் பனிபடு நெடுவரை யொடு பண்பொட்டாக்கி (புறநா. 6, உரை)

**பதச் சேதம்**

1. சொற்றொடரைத் தனித்தனிச் சொல்லாகப் பிரிக்கை
2. சீர்: சீரைப் பதச்சேத மென்றும் பகர்வர் (யாப். வி. 22, பக். 97)

**பதப்புணர்ச்சி**

நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபடுகை (நன். 242, மயிலை)

**பதவியல்**

பதத்தின் இலக்கணமுணர்த்தும் பகுதி

**பதவுரை**

சொற்றொடரைப் பதம் பதமாகப் பிரித்துரைக்கும் பொருள்: விரித்துரை பதவுரை விரித்த சூரனை (பிங். 7, 315)

**பதிகம்**

தெய்வத்தைப் பற்றிப் பெரும்பாலும் பத்துச் செய்யுட் களால் பாடப்படும் பிரபந்தத் தொகுதி

**பதிவிரத முல்லை**

கற்புக்கு அறிகுறியாக அணியும் முல்லை (தக்கையாகப். 119, உரை)

**பதிற்றந்தாதி**

வெண்பா அல்லது கலித்துறையில் பத்துப் பாடலால் அந்தாதியாகப் பாடும் இலக்கியம் (இலக். வி. 841)

**பதிற்றுப் பத்தந்தாதி**

பெரும்பாலும் 10 பாடற்கு ஒரு சந்தமாகப் பத்துச் சந்த பேதமுடைய 100 செய்யுளில் அந்தாதியாகப் பாடப்படும் பிரபந்தவகை (மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி)

**பயந்தோர் பழிச்சல்**

தலைவியின் பெற்றோரைத் தலைவன் வாழ்த்திப் புகழும் புறத்துறை (பு.வெ. 11, ஆண்பாற். 5)

**பயலை நோய்**

தலைவன் பிரிவால் தலைவிக்கு உண்டாம் நோய் : என் பயலை நோ யுரையாயே (திவ். பெரியதி. 3, 6, 2)

**பயன் முற்று**

செய்யுளுக்குப் பொருள் கூறுமிடத்துப் பொருள் இனிது விளங்கத் தனித்தனியே பிரிக்கப்படும் சொற்றொடர்.

**பயனிலை**

சொற்றொடரில் எழுவாய் கொண்டு முடியும் சொல்: அன்றி யனைத்தும் பெயர்ப்பயனிலையே (தொல். சொல். 67)

**பயனுவமம்**

பயன் பற்றி வரும் ஒப்புமை (தொல். பொ. 276, உரை)

**பயிர்ப்பு**

மகடூஉக் குணம் நான்கனுள் கண்டறியாதன கண்டுழி யுண்டாம் மனங் கொள்ளாநிலை: கண்டறியாதன கண்டுழி மனங் கொள்ளாத பயிர்ப்பும் (தொல். பொ. 99, உரை)

2. மனங் கொள்ளாமை : பயிர்ப்பச் சிறகாற் புல்லி (சீவக. 1624)

**பயோதரப்பத்து**

மகளிர் தனங்களைப் பத்துப் பாடலால் சிறப்பிக்கும் பிரபந்தம் (இலக். வி. 852)

**பரணி**

போர் முகத்தில் ஆயிரம் யானைகளை அழித்து வென்ற வீரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட பிரபந்த வகை (இலக். வி. 839)

**பரத்தையிற் பிரிவு**

பரத்தையைக் குறித்து மனைவியை விட்டுப் பிரிந்திருத் தலைக் கூறும் அகத்துறை (அகநா. 204, உரை)

**பரவை வழக்கு**

உலக வழக்கு : இவை செய்யுளகத் தல்லது பரவை வழக்கி னுள் வாரா (தொல். பொ. 330, உரை)

**பரிசங்கை**

ஓரினத்திலிருந்து ஒரு பொருளைப் பிரித்து அதனை உயர்த்திச் சொல்லும் அணிவகை (மாறனலங். 231) காண்க : ஒழிப்பணி

**பரிசில் கடாநிலை**

பரிசில் நீட்டித்த தலைவனுக்குப் பரிசில் வேட்டோன் தன்னிடும்பை கூறிக் கேட்கும் புறத்துறை (புறநா. 101)

**பரிசில் விடை**

தன் புகழ் கூறுவோர்க்கு அரசன் வேண்டியன வழங்கி அவர் மகிழ விடை கொடுத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 26)

**பரிசிலர்**

பரிசில் வேண்டி இரப்போர் : பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த (சிறுபாண். 218)

**பரிசிற்றுறை**

அரசன் முன்னே பரிசிலர் தாம் கருதிய பேறு இதுவெனக் கூறும் புறத்துறை (புறப். வெ. 9, 5)

**பரிசினிலை**

பரிசில் கொடுத்த பின்னும் விடை கொடுத்துத் தாழ்க்கும் தலைவனிடத்தினின்று பரிசில் பெற்றோன் தானே செல்ல ஒருப்படுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ, 9, 25)

**பரிணாமாலங்காரம்**

உவமானப் பொருள் அப்போது நிகழுஞ் செய்கையிற் பயன் படுத்தற் பொருட்டு உவமேயத்தின் உருவத்தைக் கொண்டு பரிணமித்தலாகிய அலங்காரவகை

**பரிபாட்டு : பரிபாடல்**

1. ஒருவகைப் பா (தொல். பொ. 430)
2. எட்டுத் தொகையுள் எழுபது பரிபாட்டால் தொகுக்கப்பட்டதொரு நூல் : செய்ய பரிபாடற் றிறம் (தனிப்பா.)

**பரிபாடைச் சூத்திரம்**

நூலின் பரிபாஷைகளை விளக்கும் சூத்திரம் (யாப். வி பக். 12)

**பரிமாண வகுதி**

குற்றெழுத்து அல்லது நெட்டெழுத்து

**பரிமாற்றவணி**

பரிவருத்தனை. ஒன்றைக் கொடுத்து மற்றொன்று பெறு தலைக் கூறும் அணி (தண்டி. 85)

**பரியாயப் பெயர்**

ஒரு பொருட் பல்பெயர் (சூடா.) ஆனை யெண்ணும் பரியாயப் பெயருடைய (சி. போ. பா. 2, பக். 54)

**பரியாயம்**

பொருளை வெளிப்படையாகக் கூறாது குறிப்பாற் கூறும் அணி (தண்டி. 71)

**பரிவருத்தனை**

1. பண்ட மாற்றுகை
2. ஒன்றைக் கொடுத்து மற்றொன்று பெறுதலைக் கூறும். அணி (தண்டி. 85)

**பருந்தின் வீழ்வு**

சூத்திர நிலை நான்கனுள் முன்பின் சூத்திரங்களோடு இயைபில்லாது செய்மையி லுள்ள சூத்திரத்தினோடு இயைபுபட்டு நிற்பது (நன். 19)

**பருப்பொருள்**

1. நூலின் பிண்டப் பொருள் : பருப் பொருட்டாகிய பாயிரம் (இறை. கள. 1, உரை)
2. சுவையற்ற செய்தி : பதர்ச்சொற் பருப்பொருள் பன்னுபு நீக்கி (பெருங். இராவண. 4, 51)
3. மேலெழுந்தவாரியான பொருள் : பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து (பத்துப்பாட்டு, உரைச்சிறப்.)

**பருவம்**

1. காலம் : இவை பாராட்டிய பருவமு முளவே (அகநா. 26)
2. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்ற ஆறு இருதுகள் : பருவமாறினும் (கந்தபு. மார்க். 176)

**பல்சந்தமாலை**

10 வகைச் சந்தங்களால் இயன்றதும் 10 முதல் 100 வரை செய்யுளுடையதுமான பிரபந்தம் (இலக். வி. 834)

**பல்பொருட்பெயர்**

காண்க : பலபொருள் ஒரு சொல். பலபொருள் கொண்ட ஒரு பதம் : ஆயிருவகைய பலபொருளொரு சொல் (தொல். சொல். 52)

**பல்லவி**

கீர்த்தனத்தில் திரும்பத் திரும்பப் பாடப்படும் உறுப்பு

**பல்லாண்டு**

1. பல வருடம் : பல்லாண்டும் பரமாத்தமனைச் சூழ்ந் திருந் தேத்துவர் (திவ். திருப்பல். 12)
2. நீடு வாழ்க என்னும் வாழ்த்து : பல்லாண்டென்னும் பதங்கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே (திருவிசை. திருப்பல். 4)
3. திருப்பல்லாண்டு

**பலபடப்புனைவணி**

ஒரு பொருளினிடத்துப் பல தருமங்களிருத்தலாற் பல பொருள்களை அதன்பால் ஆரோபித்துக் கூறும் அணி (அணியி. 7)

**பலபொருளுவமை**

ஓர் உவமேயத்துக்குப் பல பொருள் உவமையாக வரும் உவமையணி (தண்டி. 30)

**பலபொருளொருசொல்**

பல பொருள் கொண்ட ஒருபதம் : ஆயிருவகைய பலபொரு ளொரு சொல் (தொல். சொல். 52)

**பலர்பால்**

ஐம்பாலுள் உயர்திணையிற் பன்மை குறித்து வரும் பால் (நன். 262)

**பலரறிசுட்டு**

உலகறி பொருண்மேல் வருஞ்சுட்டு

**பலரறிசொல்**
காண்க : 1. பலர்பால் (தொல். சொல். 7)
2. பலருமறிந்த செய்தி
3. வதந்தி (திவா.)

**பலவரி**
மெய்வர்க்கம்

**பலவயிற் போலியுவமை**
ஒரு வாக்கியப் பொருளோடு மற்றொரு வாக்கியப் பொருள் உவமிக்கப்படுகையிற் பலவிடங்களில் உவமவுருபு வெளிப்பட்டு வரும் உவமை வகை (தண்டி. 30)

**பலவறி சொல்**
காண்க : பலவின்பால் (தொல். சொல். 9) ஐம்பாலுள் அஃறிணையிற் பன்மை குறிக்கும் பால் (நன். 263)

**பலவின்பால்**
ஐம்பாலுள் அஃறிணையிற் பன்மை குறிக்கும் பால் (நன். 263)

**பலவினைச் சிலேடை**
பலவினை பற்றி வருஞ் சிலேடையணிவகை (தண்டி. 75)

**பவமத்திமம்**
முதலடியும் நான்காமடியும் எழுத்துக் குறைந்து நடுவிரண்டடியும் எழுத்து மிக்கு நாலடியுஞ் சீர் ஒத்து வருவது (யாப். வி. பக். 481)

**பவனிக்காதல்**
பவனி வந்த காதலனைக் கண்டு காதல் கொண்ட தலைவி தோழியாரிடம் வருந்திக் கூறுவதாகப் பாடப்படும் பிரபந்த வகை

**பழிகரப்பங்கதம்**
வசையைக் குறிப்புப் பொருளாகக் கொண்ட செய்யுள் வகை (தொல். பொ. 438, உரை)

**பழிப்புவமை**
உவமேயத்தை உயர்த்தி உவமானத்தைப் பழிக்கும் அணி (வீரசோ. அலங். 14)

**பள்ளிசை**
பள்ளுப் பிரபந்தம்

**பள்ளியெழுச்சி**
1. அரசர் முதலியோரைத் துயிலெழுப்பும் பிரபந்தம்
2. துயில் நீங்குகை

**பள்ளு**

நாடகப் பிரபந்த வகை (அரு. நி.). காளி முதலிய தெய்வங்கட்குப் பலி கொடுக்குங் காலத்துப் பாடப்படும் பண் வகை

**பள்ளேசலி**

பள்ளிசை

**பற்றாசு**

நேரிசை வெண்பாவில் முதற் குறளினிறுதிச் சீரோடு தனிச் சொல்லைப் பொருத்தும் அசை : பற்றாகொன்றுதான்... இடைநின்று கூட்டுதல் போல் (வெங்கைக் கோ. 415)

**பறழ்**

1. மரங்களில் வாழ்வன, தவழ்வன, மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி இவற்றின் இளமைப் பெயர் (திவா.)
2. பறழ்ப் பன்றிப் பல்கோழி (பட்டினப். 75)

**பறை**

1. வரிக்கூத்து வகை (சிலப். 3, 13, உரை)
2. ஒரு பிரபந்தம் : அவர் பாடின பள்ளும் பறையும் இசையிலே கேட்டருளும்படி (கோயிலொ. 104)
3. விரும்பிய பொருள் : இறைவா நீதாராய் பறை (திவ். திருப்பா. 28)
4. வட்டம் : பறைக்கட் பீலித்தொகை (அகநா. 15)

**பன்மணிமாலை**

கலம்பக வுறுப்புகளுள் ஒருபோகும் ஊசலும் அம்மானையு மின்றி வரும் பிரபந்தம் (இலக். வி. 814)

**பன்மை**

ஒன்றல்லாதது : தானறி பொருள் வயிற் பன்மை கூறல் (தொல். சொல். 23)

**பன்மைப்பால்**

பலர்பால், பலவின்பால்கள் : பன்மை பாலாற் கூறுதல் (தொல். சொல். 62, இளம்பூ.)

**பன்மை பற்றிய வழக்கு**

1. ஒரு கூட்டத்திற் பலரின் அல்லது பலவற்றின் இலக்கணத்தைக் கொண்டு அக்கூட்டத்தையே அவ் விலக்கணம் உடையதாக வழங்கும் வழக்கு : வேற்றுமை யென்பது பன்மை பற்றிய வழக்கெனினும் அமையும் (தொல். சொல். 62, சேனா.)

**பன்மையியற் பெயர்**

1. ஓரினப் பொருளைக் குறிக்கும் இயற்பெயர் (தொல். சொல். 176, 182, சேனா.)
2. பல பாலையுங் குறித்து நிற்கும் பெயர் (நன். 284, விருத்.)

**பன்மொழித் தொகை**

இரண்டு பெயருக்கு மேற்பட்ட பெயர்களாலாகிய தொகை (தொல். சொல். 420, உரை)

**பனுவல் வாழ்த்து**

ஒரு நூலைப் புலவர் புகழ்தலைக் கூறுந்துறை (மாறனலங் 84, 102)

**பனுவல் வென்றி**

பிற நூல்களிலும் ஒரு நூல் சிறப்புடைத்தெனக் கூறுந் துறை (மாறனலங். 198, 477)

## பா

**பா : பாட்டு**

அத்தொடை பாவி நடத்தலிற் பாவே (இலக். வி. 711)

**பாக்கு**

1. எதிர்கால வினையெச்ச விகுதி : உண்பாக்குச் சென்றான் (நன். 343)
2. தொழிற்பெயர் விகுதி : கரபாக்கு, வேபாக்கு (குறள். 1127, 1128)

**பாகதச் சிதைவு**

பிராகிருத மொழியிலிருந்து தமிழிற் சிதைந்து வந்த சொல் (திருக்கோ. 53, உரை)

**பாகம்**

1. பக்குவம் : இப்பழம் நல்ல பாகத்திலிருக்கிறது
2. திராட்சா பாகம், கதலீ பாகம், நாரிகேள பாகம் என்ற மூவகைச் செய்யுள் நடை: பாகத்தினாற் கவிதை பாடிப் படிக்கவோ? (தாயு. சச்சிதா. 3)
3. மனநிலை : குறிப்பின்றியும் பாகமுணர்வார் குறிப்புப் பெற்றுழி மிகவுணரும் (தொல். பொ. 127, உரை)

**பாகுட கவி**
காணிக்கையாகச் சமர்ப்பிக்கும் பாட்டு (செந். ப. 1, 335)

**பாங்கற் கூட்டம்**
தோழனது உதவியால் தலைவியைத் தலைவன் குறியிடத்துக் கூடுகை (திருக்கோ.)

**பாங்கன்**
1. தோழன்: பாங்கன் னிமித்தம் பன்னிரெண்டென்ப (தொல். பொ. 104)
2. கணவன் : பொருள்வயிற் பாங்கனாற் சென்ற நெறி (நாலடி. 400)

**பாங்கி**
தலைவியின் தோழி: பாங்கற் கூட்டம் பாங்கியிற் கூட்டம் (நம்பியகப். அகத். 27)

**பாங்கியிற் கூட்டம்**
தோழியின் உதவியால் தலைவியைத் தலைவன் குறியிடத்துக் கூடுகை

**பாசறை**
பகைமேற் சென்ற படை தங்குமிடம்: மாறுகொள் வேந்தர் பாசறை யோர்க்கே (பதிற்றுப். 83, 9)
2. பசிய இலையில் செறிந்த முழை: மரகதப் பாசறை... பணிமாமணி திகழும் (தஞ்சைவா. 180)

**பாசறை நிலை**
பகைவேந்தர் பணிந்தொடுங்கவும் வெற்றிவேந்தன் அவரிடத்தை விட்டு நீங்கானாய்ப் பாசறையில் தங்குதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 3, 21)

**பாசறை முல்லை**
பாசறையில் தலைமகன் தன் தலைவியை நினைக்கும் புறத்துறை (தொல். பொ. 76, உரை)

**பாசிநிலை**
பகைவருடைய வலிகெட அவருடைய அகழிடத்துப் பொருதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 17, கொளு)

**பாசி நீக்கம்**
சொற்றோறும் அடிதோறும் பொருளேற்று வரும் பொருள்கோள் (இறை. 56, உரை)

**பாசி மறன்**

போர்மேற் சென்ற படை பாசிநிலை வெற்றிக்குப் பின் பகைவர் ஊரகத்துப் போர் விரும்புதலைக் கூறும் புறத் துறை (தொல். பொ. 68, உரை)

**பாசுரம்**

1. திருப்பாடல்: பாசுரம் பாடலுற்றார் பரசமயங்கள் பாற (பெரியபுரா. திருஞான. 818)
2. திருமுகம்: மதிமலி புரிசை யென்னுஞ் சிறப்பியற் சீங்கால் செய்யுட் பாசுரம் (திருவிளை. திருமுகர். 10)
3. மொழி (சூடா.)
4. வகை: எல்லாப் பாசுரத்தானுந் தலைமகளை யாற்று விக்கும்
5. வாய்பாடு: பாசுரம் வஞ்சிக் குரிச்சீர் (யாப். வி. 95, பக். 424)

**பாட்டு**

1. பாடுகை
2. இசைப்பாடல்
3. இசை: கூத்தும் பாட்டும் (மணி. 2, 19)
4. செய்யுள்: பாட்டுரை நூலே (தொல். பொ. 391)
5. சொல் (நாநார்த்த. 236)
6. வசைமொழி

**பாட்டுடைத் தலைமகன்**

காப்பியத் தலைவன்: எம்பெருமான் பாட்டுடைத் தலைமக னாகவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கிளவித் தலைமக்களாகவும் (திருவிருத். 6, அப்பிள்ளையுரை)

**பாட்டுடைத் தலைவன்**

காண்க: பாட்டுடைத் தலைமகன்: உயர்ந்தோன் பாட்டு டைத் தலைவனாகும் (நம்பியகப். 246)

**பாட்டுமடை**

குரவைக் கூத்து முதலியவற்றின் இடையே பாடும் பாட்டு (சிலப். 24, தலைப்பு)

**பாடபேதம்**

ஒரு நூலின் பிரதியில் கண்டவற்றிற்கு வேறான பாடம்

**பாடம்**

1. படிக்கும் நூற்பகுதி: பாடம் போற்றல் (நன். 41)
2. படிப்பு

3. மூலபாடம் : பாடமே யோதிப் பயன்றெரிதல் தேற்றாத மூடர் (நாலடி. 316)
4. வேதபாடம்
5. பாராமலொப்பிக்கும்படிக் கைவந்தது : அவனுக்கு நன்னூல் முழுவதும் பாடம்

**பாடல்**
1. பாடுகை : பாடல்சான்ற புலனெறி வழக்கமும் (தொ. பொ. 53)
2. இசைப்பா
3. செய்யுள் : மங்கல வாழ்த்துப் பாடலும் (சிலப். பதிகம். 63)
4. புகழ் : பாடல் சான்ற...பட்டினம் (சிறுபாண். 151)
5. படிக்கை

**பாடற்பயன்**
இன்பம், தெளிவு, நிறை, ஒளி, வன்சொல், இறுதி, மந்தம், உச்சம் என்னும் எண்வகையான இசைப்பயன் (சிலப்பதி. 3, 16, உரை)

**பாடாண்டிணை**
பாட்டுடைத் தலைவனது கீர்த்தி, வலி, கொடை, அளி முதலியவற்றைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (தொல். பொ. 80, உரை)

**பாடாந்தரம்**
பாடபேதம்

**பாடிமாற்றம்**
வழக்குச் சொற்கள் (தொல். பொ. 553, உரை)

**பாடியகாரர்**
1. பேருரைகாரர்
2. பாணினீயத்தின் பேருரைகாரரான பதஞ்சலி (பி.வி. 1, உரை)

**பாடியம்**
பேருரை

**பாடிவீடு**
பாசறை : பாடி வீட்டினை வலஞ்செய்கென்றான் (கம்பரா. விபீடண. 151)

**பாடினி**

பாண்குல மகளிர் : மறவேந்தன் மறம் பாடிய பாடினி யும்மே (புறநா. 11)

**பாடுதுறை**

1. புலவர்கள் பாடுதற்குரிய போர்த்துறை : பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே (புறநா. 21)
2. தத்துவராய சுவாமிகளியற்றிய ஒரு சமய நூல்

**பாடுநர்**

1. இசை பாடுவோர்
2. புலவர் : பாணர் பாடுநர் பரிசிலர் (புறநா. 135)

**பாடைப்பாடல்**

அக நாடகங்களுக்கும் புற நாடகங்களுக்குமுரிய செய்யு ளுருக்கள் : பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும் (மணி. 2, 20)

**பாடேடு**

தாயேடு (யாழ். அக.)

**பாண்**

பாட்டு : பூணினான்றன் பாண்வலைச் சென்றுபட்டார். (சீவக. 2040)

2. பாணர் சாதி : மீன்சேவும் பாண்சேரி (புறநா. 3, 48)
3. இச்சக வார்த்தை : பாண்குலாய்ப் படுக்க வேண்டா (சீவக. 2515)
4. தாழ்ச்சி: சிறுகாற் புல்லிப் பணிந்து பாண்செய்த தன்றே (சீவக. 1624)

**பாண்டரங்கம்**

கூத்துப் பதினொன்றனுள் திரிபுரத்தை யழித்தபோது சிவபிரான் வெண்ணீறணிந்து ஆடியது (சிலப். 6, 45)

**பாண் பாட்டு**

யானையை யெறிந்து போரிற்பட்ட வீரர்க்குயாழ் வல்ல பாணர் சாப்பண் பாடித் தம்முரிமை செய்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 11)

**பாண்மகன்**

பாணன்: பாண்மகன் பட்டுழிப் படூஉம் பான்மையின் யாழினம் (மணி. 18, 17)

**பாணர் மாலையர்**

பாண்குல மகளிர் : பாலை குழல்சேர் பாணர் மாலையர் (திருவாலவா. 54, 26)

**பாணர்**

1. பாடல்வல்ல ஒரு சாதி: கூத்தரும் பாணரும் (தொல். பொ. 91)
2. காண்க : பாணான்

**பாணாற்றுப்படை**

தலைவனொருவனிடம் பரிசு பெற்று வரும் பாணனொருவன் மற்றொரு பாணனை அத்தலைவனிடம் பரிசு பெறுதற்கு வழிச் செலுத்துவதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 28)

**பாணி[1]**

1. காலம் : எஞ்சொல்லாற் பாணி நின்றனனாக (குறிஞ்சிப். 152)
2. தாமதம் : பணிப்பதே பாணியென்றான் (சீவக. 1929)
3. நீண்ட காலம் (திவா.)

**பாணி[2]**

1. இசைப்பாட்டு (திவா.)
   புறத்தொடு பாணியிற் பூங்கொடி மயங்கி (சிலப். 8, 44)
2. சங்கீதம் : பாணியாழ் (சீவக. 1500)
3. ஒலி : கிணைநிலைப் பொருநர் வைகறைப் பாணியும் (சிலப், 13, 148)
4. அழகு : காமம்...பாணியுமுடைந்து (குறுந். 136)

**பாத்திரம்**

1. நாடகத்தில் வேடம் பூண்டு நடிப்பவன்—ள் : நட்டுவக் குறையோ பாத்திரக் குறையோ? (மதுரைப் பதிற்றுப். 25)
2. கொள்கலம் (பிங்.)
3. இரப்போர் கலம் : பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல் (தேவா. 1070, 3)

**பாதம்**

செய்யுளடி : வாங்கரும் பாதநான்கும் வகுத்த வான்மீகி (கம்பரா. நாட்டுப். 1)

**பாதமயக்கு**

1. வேறு புலவர்கள் பாடிய அடிகள் மூன்றனோடு தாம் ஓரடி பாடி முடிக்கும் மிறைக் கவி வகை (யாப்.வி. 96, பக். 504)
2. அடிமயக்கு

**பாதாதிகேசம்**

1. அடி முதல் தலைவரை
2. தலைமக்களின் அடி முதல் கேசம் வரையுள்ள உறுப்புக் களைச் சிறப்பித்துக் கூறும் பிரபந்த வகை (இலக். வி. 871)

**பாதீடு**

1. பங்கிடுகை (யாழ். அக.)
2. தலைவன் விருப்பப்படிப் போர் வீரர் பகைவரிட மிருந்து கவர்ந்த நிரையைத் தமக்குள் பங்கிடுவதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 58)

**பாயம்**

1. புணர்ச்சி விருப்பம் : பிணவொடு பாயம் போகாது (பெரும்பாண். 342)
2. மணத்துக்கு விருப்பமானது: நனிபடு சிலம்பிற் பாயம் பாடி (குறிஞ்சிப். 58)

**பாயிரம்**

1. முகவுரை (நன். 1)
   செறு மனத்தார் பாயிரங்கூறி (பழமொழி. 165)
2. பொருளடக்கம் : இருந்தமிழ்ப் பாயிரம் (சடகோபரந். 9)

**பார்ப்பன முல்லை**

பகைத்த மன்னரிருவருடைய மாறுபாட்டை நீக்க முயலும் பார்ப்பானது நடுவுநிலை கூறும் புறத்துறை (பு.வெ. 8, 18)

**பார்ப்பன வாகை**

வேதம் வலல அந்தணன் வேள்வி வேட்டலாற் பெறும் பெருமையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8, 9)

**பார்ப்பு**

1. பறப்பவற்றின் இளமை (தொல். பொ. 559)
2. தவழ்பவற்றின் இளமை (தொல். பொ. 560)
3. விலங்கின் குட்டி (பிங்.)

**பாரகாவியம்**
பெருங்காப்பியம் : பாரகாவிய மெலா மீரிரு தினத்தினிற் பகர (தமிழ்நா. 221)

**பாரங்கதன்**
கல்வித் துறையிற் கரை கண்டவன்

**பாரதன்**
1. கூத்தாடி
2. தீ

**பாரதியரங்கம்**
சுடுகாடு : பாரதியாடிய பாரதியரங்கத்து (சிலப். 6, 39)

**பாரதி விருத்தி**
கூத்தன் தலைவனாகவும் நடன்நாடிகள் பொருளாசவும் வரும் நாடகவகை (சிலப். 10, கட்டுரை)

**பால்**
1. பகுதி : பால்வரை கிளவி (தொல். எழுத். 165)
2. ஊழ் : பால்வரை தெய்வம் (தொல். சொல். 58)
3. ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற பிரிவு (ஐம்பால் தொல். சொல். 10)
4. ஒருமை, பன்மை என்ற இருவகைப் பாகுபாடு : பன்மைப் பாலாற் கூறுதல் (தொல். சொல். 62, இளம்பூ.)
5. அகத்திணை, புறத்திணை என்ற பாகுபாடு

**பால்பகாவஃறிணைப்பெயர்**
ஒன்றன்பால் பலவின்பால் இரண்டற்கும் பொதுவான பெயர் (நன். 281)

**பால்வரை கிளவி**
எண், அளவு முதலியவற்றின் பகுதியைக் குறிக்குஞ் சொல் (தொல். எழுத். 165)

**பால்வரை தெய்வம்**
நல்வினை தீவினைகளை வகுக்குந் தெய்வம்: பால்வரை தெய்வம் வினையே பூதம் (தொல். சொல். 58)

**பால் வழு**
ஒருபாற்சொல் ஏனைப்பாற் சொல்லொடு முடிமுதலாகிய குற்றம் (தொல். சொல். 11, சேனா.)

**பால் வழுவமைதி**

பால் வழுவை ஆமென்று அமைத்துக் கொள்வது (நன். 379, உரை)

**பாலை**

1. முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்த நிலம் : நடுங்குதுய ருறுத்துப் பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் (சிலப். 11, 65-66)
2. பாலைத் தன்மை : பாலைநின்ற பாலைநெடுவரி (சிறுபாண். 11)
3. புறங்காடு : பாலை நிலையும் (தொல். பொ. 79)
4. பாலை நிலத்து உரிப்பொருளாகிய பிரிவு : பாலை சான்ற சுரம் (மதுரைக். 314)

**பாலை நிலை**

இறந்த கணவனுடன் தீப்பாய்வாள் தான் உடன்கட்டை யேறுதலை விலக்கினோருடன் உறழ்ந்து கூறும் புறத் துறை : நல்லோர் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடை யிட்ட பாலை நிலையும் (தொல். பொ. 79)

**பாலைப்பண்**

பெரும்பண் வகை (திவா.)

**பாவண்ணம்**

நூற்பாவுக்குரிய சந்தம் (தொல். பொ. 526)

**பாவிகம்**

தொடக்க முதல் முடிவு வரை வனப்புடையதாக அமையும் காவியப் பண்பு : பாவிகம் என்பது காப்பியப் பண்பே (தண்டி. 89)

**பாவின் புணர்பு**

மிறைக்கவி

**பாவினம்**

தாழிசை, துறை, விருத்தம் என்ற முப்பகுதியான பாவின் வகை

**பாவைக் கூத்து**

கூத்துப் பதினொன்றனுள், அவுணர் மோகித்து விழும்படிக் கொல்லிப்பாவை வடிவு கொண்டு திருமகள் ஆடிய ஆடல் (சிலப். 6, 61)

2. பொம்மையாட்டம்

**பாவைப் பாட்டு**

திருப்பாவை, திருவெம்பாவைகளில் உள்ளவை போல நான்கடியின் மிக்குவருஞ் செய்யுள் வகை (தொல். பொ. 461, உரை)

**பாவை யாடலீ**

காண்க : 1. பாவைக் கூத்து (சிலப். 6, 61, உரை)

2. பெண்பாற் பிள்ளைத்தமிழின் உறுப்புக்களுள் பாட்டுடைத்தலைவி பாவை வைத்து விளையாடுகை (திவா.)

**பாழூர்**

குடி நீங்கிய ஊர் : பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே (புறநா. 132)

**பாற்பொருத்தம்**

செய்யுண் முதன்மொழிப் பொருத்தம் பத்தனுள் குற்றெழுத்துக்களை ஆண்பாலாகவும், நெட்டெழுத் துக்களைப் பெண்பாலாகவும், ஒற்றும் ஆய்தமுமாகிய எழுத்துக்களை அலிப்பாலாகவும் கொண்டு, ஆண்பாலைப் புகழுமிடத்து ஆணெழுத்துக்களையும், பெண்பாலைப் புகழுமிடத்துப் பெண்ணெழுத்துக்களையும் செய்யுள் மொழி முதலில் அமைக்கும் பொருத்தவகை (வெண்பாப். முதன். 5)

**பான்**

ஒரு வினையெச்ச விகுதி (நன். 343)

**பான் மயக்கம்**

ஒரு பால் ஏனைப்பாலின்கண் மயங்குதலாகிய வழுவின் அமைதி (சிலப். 17, பெரியவனை.)

**பான் முல்லை**

தலைவியை மணந்த தலைவன் மனமகிழ்ந்து தம்மை ஒருங்கு கூட்டிய நல்வினையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு. வெ. 10, முல்லைப். பொது. 7)

## பி

**பிச்சியார்**

1. சைவத் தவப்பெண்ணாய்ப் பிச்சை யெடுப்பாள் ஒருத்தியைக் காமுகனொருவன் கண்டு விரும்புவதாகப் பாடும் கலம்பகவுறுப்பு

2. சைவத் தவப்பெண் : பிச்சியாரென்னும் பேருனக் கிட்டதே (குமர. பிர. மதுரைக்கலம். 32)

**பிசி**

1. உவமேயத்தை உவமானப் பொருளாற் குறிப்பித்துக் கூறுவது (தொல். பொ. 488)
2. பிதிர் : பிசியு நொடியும் பிறர்வாய் கேட்டு (மணி 22, 62)
3. பொய்

**பிசிபடுமொழி**

செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**பிண்ட சூத்திரம்**

தலைமைப் பொருளைப் பொதுப்படக் கூறும் சூத்திரம் (நன். 20)

**பிண்டப்பொருள்**

கருத்து

**பிண்டம்**

1. உண்டை (பிங்.)
2. உருவற்ற கரு : உறுப்பில் பிண்டமும் (புறநா. 28)
3. உடல் : உண்டி முதற்றே யுணவின் பிண்டம் (புறநா. 18)
4. சோற்றுத்திரார் : பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும் (தொல். பொ. 63)
5. சூத்திரம், இயல், ஓத்து என்ற மூன்றுறுப்புக் கொண்ட நூல் : மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானும் (தொல். பொ. 480)

**பித்திகாமார்ச்சல நியாயம்**

மதின்மேற் பூனை எப்பக்கத்துக் குதிக்குமென்பது அறியப்படாமை போல, ஒரு விஷயம் எவ்வாறு தீர்மானிக் கப்படும் என்பதை அறியலாகா நெறி

**பிந்துமதி**

யாப்பு வகை

**பிபீலிகா நியாயம்**

எறும்பு போல முறைப்பட எண்ணித் தவறாது துணியும் நெறி

**பிபீலிகாமத்திமம்**

முதலடியும் ஈற்றடியும் எழுத்து மிக்கும், நடுவிரண்டடியும் எழுத்துக் குறைந்தும், நாலடியுஞ் சீரொத்து வருஞ் செய்யுள் (யாப். வி. பக். 483)

**பிபீலிகாயதி**

எறும்பின் உடலிடைபோல இடைப்பாகஞ் சுருங்கி வரும் பாடல்

**பிரகரணப் பிரகரணம்**

அறம் பொருள் இன்பம் இவற்றைப் பொருளாகக்கொண்ட நாடகவகை (சிலப். 3, 13, உரை)

**பிரசயம்**

சுவரிதத்தை அடுத்த அநுதாத்தங்களைச் சேர்த்துக் கூறும் போது உள்ள ஸ்வரம் (பி. வி. 40, உரை)

**பிரத்தாரம்**

கட்டளையடியிற் பல்வேறு வகையாக வரக்கூடும் அசைகளையெல்லாம் மொத்தக் கணக்கிடுகை (யாப். வி. பக். 471)

**பிரத்தியனீக வலங்காரம்**

வெல்லக் கூடாத உவமேயத்தையொத்த பிறிதொரு பொருள்மேல் உவமைப் பொருள் பகைமை சாதிப்பதாகக் கூறும் அணி வகை (மாறன. 135)

**பிரத்தியாகாரம்**

வடமொழிச் சூத்திரங்களின் முதல் கடைகளில் நின்ற வெழுத்துக்களைக் கூட்டி இடைநின்ற வெழுத்துக்களை நீக்கி அனைத்தையுங் குறியீடாக வமைக்கை (பி.வி. 4)

**பிரதி நாயகன்**

கதாநாயகனுடைய பிரதான சத்துரு

**பிரபந்தம்**

சாதகம், பிள்ளைக்கவி, பரணி, கலம்பகம், அகப்பொருட் கோவை, ஐந்திணைச் செய்யுள், வருக்கக் கோவை, மும்மணிக் கோவை, அங்கமாலை, அட்டமங்கலம், அநுராக மாலை, இரட்டை மணி மாலை, இணைமணி மாலை, நவமணி மாலை, நான்மணி மாலை, நாம மாலை, பல்சந்த மாலை, மணிமாலை, புகழ்ச்சி மாலை, பெருமகிழ்ச்சி மாலை,... பெருங்காப்பியம், சிறுகாப்பியம் எனத் தொண் ணூற்றாறு வகைப்பட்ட நூல்

**பிரமம்**

மணம் எட்டனுள் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பெய்தாமுன் அணிகலனணிந்து தானமாகக் கொடுப்பது

2\. முழுமுதற் பொருள்

**பிராசம்**
அடுத்தடுத்து வரும் எழுத்தோசை யொற்றுமை

**பிராந்தி மதாலங்காரம்**
ஒற்றுமை பற்றிய மயக்கவணி (அணியி. 6)

**பிரிதல்**
உரிப்பொருள் ஐந்தனுள் பாலைத் திணைக்குரிய தலைவன் தலைவியர் ஒருவரையொருவர் நீங்கியிருக்கை (தொல். பொ. 14)

**பிரிந்திசை**
செய்யுளோசை வகை

**பிரிந்திசைக் குறள்**
ஒத்தாழிசைக் கலியுறுப்பினுள் ஒன்றாகிய அம்போதரங்கம் (வீரசோ. யாப். 11, உரை)

**பிரிந்திசைத்துள்ளல்**
பல தளையும் விரவி வரும் கலிப்பாவோசை வகை (காரிகை. செய். 1)

**பிரிந்திசைத் தூங்கல்**
பல தளையும் விரவும் வஞ்சிப்பாவோசை வகை (காரிகை. செய். 1, உரை)

**பிரிநிலை**
வேறுபடுத்திக் காட்டும் நிலை (தொல். சொல். 258 உரை)

**பிரிநிலை நவிற்சியணி**
பெயர்ச் சொற்களுக்கு உறுப்பாற்றலால் மற்றொரு பொருளைத் தந்து உரைப்பதாகிய அணிவகை (அணியி. 97)

**பிரிநிலை யெச்சம்**
1. பிரிக்கப்பட்ட பொருள் விளங்கக் கூறப் பெறாமல் எஞ்சி நிற்கும் வாக்கியம் (தொல். சொல். 431, சேனா.)
2. வாக்கியத்தில் கூறப்படாது எஞ்சி நிற்கும் சொல் (தொல். சொல். 423, தெய்வச்.)

**பிரிபொருட் சொற்றொடர்**
ஒன்றாத பொருளையுடைய தொடராலாகிய பாவழு (இலக்.வி. 691)

**பிரிபொருட்டொடர் மொழி**
செய்யுட் குற்றங்களுளொன்று (யாப். வி. 525)

**பிரிமொழிச் சிலேடை**

பிரிக்கப்பட்டுப் பல பொருள் பயக்குஞ் சொற்றொடர் (தண்டி. 75, உரை)

**பிரிவிலசை நிலை**

தனியே வழங்காது இரட்டித்தே நிற்கும் அசைநிலை (தொல். சொல். 280, சேனா.)

**பிள்ளைக்கவி**

காண்க : பிள்ளைத்தமிழ் (இலக்.வி. 805)

முன்னோர் மொழிந்த சொன்னடை பொருணடை கொண்டு கவி பாடுவோன் (வெண்பாப். செய். 48)

**பிள்ளைத்தமிழ்**

ஆண்பாற் பிள்ளைத்தமிழ் பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப்பட்டு, பிள்ளையின் பல பருவங்களைப் பற்றிக் கூறும் பிரபந்தவகை

**பிள்ளைத் தெளிவு**

பிள்ளைத் தன்மையுள்ள போர் வீரனொருவன் போரிற் பட்ட தன் புண்ணைப்பார்த்து மகிழ்ந்து கூத்தாடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 2,8)

**பிள்ளை நிலை**

போரிற் சென்றறியாத மறக்குடிச் சிறுவர் தாமே செய்யுந் தறுகணாண்மையைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60)

**பிள்ளைப் பெயர்ச்சி**

பிள்ளைத் தன்மையுள்ள போர்வீரனொருவன் தீ நிமித்தங்களுக்கு அஞ்சாது போருக்குச் செல்வதையும் அதற்காக அரசன் அவனைப் புகழ்வதையும் கூறும் புறத்துறை (புறநா. 259)

**பிள்ளையாட்டு**

வாளாற் பொருது மேம்பட்ட அரசிளங்குமரனைக் கண்டு அந்நாட்டிலுள்ளவர் உவந்து பறையொலிக்க அரசு கொடுத்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60)

**பிளவு**

பிரிந்திசைப்பு : இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்பட (தொல். சொல். 412, சேனா.)

**பிறந்தவழிக் கூறல்**

இடத்து நிகழ் பொருளை இடத்தாற் கூறும் ஆகுபெயர் வகை (தொல். சொல். 110, தெய்வச்.)

**பிறநூன் முடிந்தது தானுடன்படுதல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் பிற நூல்களின் முடிவுக்குத் தான் உடன்படும் உத்தி (நன். 15)

**பிறப்பு**
வெண்பாவின் இறுதியில் நிரையசை யொன்றுடன் உகர மான நேரசை கூடி வரும் வாய்பாடு (காரிகை. செய்.5)

**பிறப்புவமைப் போலி**
அணிவகை (பாப்பா. 50)

**பிறபொருள் வைப்பு**
வேற்றுப்பொருள் வைப்பு (வீரசோ. அலங். 11)

**பிறவினை**
பிறரைக் கொண்டு செய்விக்குஞ் செயலை யுணர்த்தும் வினை (தொல். எழுத். 76, இளம்பூ.)

**பிறன்கோட் கூறல்**
முப்பத்திரண்டு உத்திகளுள், பிறன் கொள்கையைக் கூறும் உத்தி (நன். 15)

**பிறிதின் கிழமை**
ஒரு பொருளுக்கும் அதன் அங்கமாகாத பிற பொருளுக்கும் உள்ள வேறுபாட்டுச் சம்பந்தம் : தற்கிழமையும் பிறிதின் கிழமையும் (நன். 300)

**பிறிதினவிற்சி**
கருதிய பொருளை அதற்குரிய நேர் வகையாற் கூறாது மற்றொரு வகையாற் கூறும் அணிவகை (அணியி. 29)

**பிறிதினியைபு நீக்கிய விசேடணம்**
விசேடியம் தன்னினத்துப் பிற பொருளைக் குறிக்காது தடுக்காது விசேடணம் (சீவக. 7, உரை)

**பிறிதுபடு பாட்டு**
ஒரு செய்யுளைத் தொடையும் அடியும் வேறுபட உரைத் தால் சொல்லும் பொருளும் வேறுபடாமல் பிறிதொரு வகைச் செய்யுளாய் முடியும் மிறைக்கவி (மாறன. 291)

**பிறிதுபடு மொழி**
செய்யுட் குற்றத்தொன்று (யாப். வி. 525)

**பிறிது மொழிதல்**
கருதிய பொருளை மறைத்து, அதனைப் புலப்படுவதற்கு அது போன்ற பிறிதொன்றினைக் கூறும் அணி (தண்டி. 51)

**பிறை**

1. இளஞ் சந்திரன் : பிறைமதி (குறள். 782)
2. மகளிர் தலையணிவகை : தண்ணம் பிறையுந் தலை பெற நிறுத்துக (கல்லாடம். 14)
3. கு, யூ, ளு, பூ முதலிய தமிழ் வடிவெழுத்துக்களின் கீழ்ப் பகுதியாயுள்ள பிறை போன்ற குறி

**பின்பனி**

அறுவகைப் பருவங்களுள் இரவின் பிற்பகுதியில் பனி மிகுதியுமுடைய மாசி பங்குனி மாதங்கள் : பின்பனி தானு முரித்தென மொழிப (தொல். பொ. 10)

**பின்முடுகு வெண்பா**

பின்னிரண்டடிகள் முடுகிச் செல்லும் வெண்பாவகை

**பின் முரண்**

இரண்டாஞ்சீரும் நான்காஞ்சீரும் மறுதலைப்பட வருந் தொடை (காரிகை. ஒழிபி. 5, உரை)

**பின்மொழி நிலையல்**

'அடைகடல்' என்ற தொடரிற் போல, முதன் மொழியிற் பொருள் சிறந்து நிற்குந் தொடர் (தொல். சொல். 419 சேனா.)

**பின் மோனை**

இரண்டாஞ் சீரிலும் இறுதிச் சீரிலும் வரும் மோனை (காரிகை. ஒழிபி. 5, உரை)

**பின்வருநிலை**

முன் வந்துள்ள சொல்லும் பொருளும், தனித்தனியாயினுங் கூடியாயினும் பலவிடத்துப் பின்னும் வரும் அணிவகை (தண்டி. 40)

**பின்தேர்க்குரவை**

இரத வீரரை வென்ற அரசனுடைய தேரின் பின்னே நின்று கொற்றவையும் கூளிச் சுற்றமும், களித்தாடுதலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 76)

**பின்னது நிறுத்தல்**

முப்பத்திரண்டு உத்திகளுள் முன் வைக்க வேண்டியதைப் பின்னே வைக்கும் உத்தி வகை (நன். 14)

**பின்னளபெடை**

இரண்டாஞ்சீர்க்கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணும் அளபெடை வரத் தொடுக்கும் தொடை (காரிகை. ஒழிபி. 5, உரை)

**பின்னியைபு**
இரண்டாஞ்சீர்க்கண்ணும் நான்காஞ் சீர்க்கண்ணும் இயைபுத் தொடையமையத் தொடுப்பது (காரிகை.ஒழிபி.5, உரை)

**பின்னெதுகை**
இரண்டாஞ்சீர்க்கண்ணும் நான்காஞ்சீர்க்கண்ணும் எதுகை யமையத் தொடுப்பது (காரிகை. ஒழிபி. 5, உரை)

## பீ

**பீர்**
1. பெண்டிர்க்குக் காமநோயாலுண்டாகும் பசலை நிறம் (சூடா.); முலைகள் பீர் கொண்டதும் (தேவா. 835, 5)
2. வெளுப்பு: மனிசர்க் காகும் பீர் (திவ். திருவாய். 1, 58)

**பீர்பூ-த்தல்**
காம நோயால் பீர்க்கம் பூப்போல உடல் பசத்தல்: பெய்வளை...நன்னலம் பீர்பூப்ப (பு. வெ. 12, இருபாற். 18)

## பு

**பு**
1. தொழிற் பெயர் விகுதி
2. பண்புப் பெயர் விகுதி
3. இறந்தகால வினையெச்ச விகுதி

**புகழ்க்கூத்து**
கதாநாயகன் புகழ் குறித்து நிகழும் ஆடல் (சிலப். 3, 12, உரை)

**புகழ்ச்சி மாலை**
96 பிரபந்தங்களுள் அகவலடியும் கலியடியும் மயங்கிய வஞ்சிப்பாவால் மகளிரது சிறப்பைக் கூறும் பிரபந்தம் (இலக். வி. 866)

**புகழ்தலுவமை**
உபமேயத்தை வாளாவிடுத்து, உபமானத்தை யாதேனும் ஒரு சிறப்புக் காட்டிப் புகழ்ந்து கூறும் உவமையணி வகை (தண்டி. 30, உரை)

**புகழ் பொருள்**
உபமேயம் (அணியி. 3)

**புகழ்பொருளுவமையணி**
காண்க : இதரவிதரம் (அணியி. 2)

**புகழ் மாலை**
தலைவர் புகழைத் தெரிவிக்கும் சொன்மாலை: வறியோர் தொடுக்குப் புகழ் மாலை சூடும் நல்லியக் கோடனை. (புறநா. 176, உரை)

**புகழ்வதி னிகழ்தல்**
காண்க : இகழாவிகழ்ச்சி (மாறனலங். 229, உரை)

**புகழாப் புகழ்ச்சி**
பழிப்பது போல புகழும் அணி வகை. (தண்டி. 82)

**புகுமுகம் புரிதல்**
ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டவிடத்துத் தலைவன் தன்னை நோக்குதலை விரும்பும் தலைவியின் உள்ள நிகழ்ச்சி (தொல். பொ. 261)

**புடை பெயர்ச்சி**
1. நிலைமாறுகை
2. வெளியேறுகை
3. கருத்தாவின் தொழிற்பாடு

**புணர்குறி**
தலைவன் தலைவியர் சந்திக்கும் குறியிடம்: புணர்குறி செய்த புலர்குரலேனல். (அகநா.118)

**புணர்ச்சி**
1. சேர்க்கை (பிங்.)
2. எழுத்து முதலியவற்றின் சந்தி :புணர்ச்சி வாயின் (தொல். எழுத். 142)
3. முன்பின் தொடர்பு

**புணர்ச்சி மாலை**
காண்க : தண்டகமாலை (சங். அக.)

**புணர்ச்சி விகாரம்**
தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் சந்தி விகாரங்கள்

**புணர்ச்சி விதும்பல்**
புணர்ச்சிக்கு விரையும் விருப்பம். (குறள். 129, அதி. தலைப்பு)

**புணர்-தல்**
1. பொருந்துதல். (திவா.)

2. கலவி செய்தல் : மன்னியவளைப் புணர்ப்புக்கு (திவ். பெருமாள். 6, 9)
3. அளவளாவுதல் (பிங்.)
4. எழுத்து முதலியன சந்தித்தல். மொழி புணரியல்பே (தொல். எழுத். 108)
5. உடலிற் படுதல்: மென்முலைமேற் பனிமாருதம் புணர (கம்பரா. சூர்ப்பண. 77)
6. கூடியதாதல் : புணரின் வெகுளாமை நன்று (குறள். 308)

**புணர்-த்தல்**

1. சேர்த்தல் : நின் கழற்கணே புணர்ப்பதாக (திருவாச. 5, 71)
2. எழுத்து முதலியன சந்திக்கும்படி செய்தல் : பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும் (தொல். எழுத். 108)

**புணர்தல்**

தலைவனும் தலைவியும் கூடுதலாகிய குறிஞ்சி யுரிப் பொருள் (தொல். பொ. 14)

**புணர்நிலையணி**

வினை, பண்பு இவை காரணமாக இரு பொருளுக்கு முடிக்குஞ் சொல்லொன்றாகப் புணர்ந்து நிற்கச் சொல் லும் அணி (தண்டி. 84)

**புணர்ப்பு[1]**

1. சம்பந்தம் : என்தனி நாயகன் புணர்ப்பே (திவ். திருவாய். 2, 8, 2)
2. நட்பு
3. துணை : புகையழல் வேலோன் புணர்ப்பாகி நின்றாள் (பு. வெ. சிறப்பிற். 10)

**புணர்ப்பு[2]**

1. பிரபந்தம்.
2. எழுத்து முதலியவற்றின் சந்தி : இயல்போடு விகாரத் தியைவது புணர்ப்பே (நன். 151)

**புணர்ப்பு வழு**

செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**புணராவிருக்கம்**
தான் காதலித்தவளைக் கூட நேராமையால் உண்டான விதனத்தோடு தலைவன் தனித்து உறைந்து வருந்துதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 11, கைக். 8)

**புணரியல்**
உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபுப் புணரியல்கள் அமைந்த இலக்கணப்பகுதி

**புதியன புகுதல்**
சொல் வழக்கம் முதலியன புதியனவாக உண்டாகை: பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல (நன். 462)

**புதினம்**
நாவல், கற்பனைக் கதை
நூதனம்
செய்தி
அதிசயம்

**புயவகுப்பு**
பாட்டுடைத் தலைவனது தோள் வலியைக் கூறும் கலம்பக வுறுப்பு (குமர. பிர. மரைக். 11)

**புராணம்**
1. பழமை: புராணப் பொழில் (குற்றா. தல. திருமால். 51)
2. பழங்கதை
3. அறுபத்து நாலு கலையுள் ஒன்றும், வியாச முனிவரால் இயற்றப்பட்டதும், சருக்கம், பிரதி சருக்கம், வமிசம், மன்வந்தரம், வமிசானு சரிதம் இவற்றைக் கூறுவது மான பழைய நூல்வகை (மச்சபு. நைமிசா. 37)

**புரிவில் புகழ்ச்சியணி**
பழிப்பது போலப் புகழும் அணிவகை (வீரசோ. அலங். 12)

**புருட காலம்**
முப்பத்தைந்து வருட காலம் (சங். அக.)

**புருடச் சக்கரம்**
சித்திரகவி வகை

**புலநெறி வழக்கம்**
புலவரால் கைக் கொள்ளப்படும் செய்யுள் வழக்கு (தொல். பொ. 53)

**புலவர்**

காண்க : புலமையோர்

கவி, கமகன், வாதி, வாக்கி என்ற நால்வகைக் கல்வி வல்லோர் (பிங்.)

கற்றோர் : புகரின் றென்மனார் புலமை யோரே (தொல். எழுத். 369)

**புலவராற்றுப்படை**

1. ஒரு புலவன், தனக்குப் பரிசளித்த அரசனையும் அவனது தலைநகரையும் வேறு புலவனிடம் சிறப் பித்து, அவ்வரசனிடத்து அவனை ஆற்றுப் படுத் தலைக் கூறும் புறத்துறை (புறநா. 48)
2. ஒரு புலவனைக் கடவுளிடத்துப் பயன் கொள்ளும்படி ஆற்றுப்படுத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 42)
3. புலவராற்றுப்படை பற்றிய பிரபந்தம்

**புலவி**

ஊடலின் முதிர்தல்-ஊடல் : புணர்வின் னினிய புலவிப் பொழுதும் (சீவக. 1378)

**புலன்**

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இந்திரிய விஷயங்கள் : கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியுமைம் புலனும் (குறள். 1101)

2. செவ்விதிற் கிளந்தோதல் வேண்டாது சேரி மொழியாற் குறித்தது தோன்றும் நூல் வனப்புளொன்று (தொல். பொ. 554)

**புலனறி சிறப்பு**

வேற்றுப் புலத்தினது நிலையை அறிவித்தார்க்குத் தாம் கூறியதினும் பெருகக் கொடுத்தலை யுணர்த்தும் ஒரு புறத் துறை (பு.வெ. 1, 17)

**புறுவத சந்தி**

உயிரளபெடை தோன்றும் புணர்ச்சி (பி.வி. 5, உரை)

**புலைமை**

1. இழிவு : நின் தலைமையில் வாழ்க்கை புலைமை யென்றஞ்சி (மணி. 24, 80)
2. இழிவான நடை

**புள்ளி**

1. எழுத்தின் மேலிடும் குத்து அல்லது சுழிக்குறி (தொல். எழுத்து. 15, 16)
2. மெய்யெழுத்து : ஒன்றன் புள்ளி (நன். 189)
3. ஆய்தம் (தொல். எழுத். 2)
4. குற்றியலிகர உகரங்கள் (தொல். பொ. 666, உரை)

**புளிமா**

நிரை நேர் வாய்பாடு (காரிகை. உறுப். 7)

**புளிமாங்கனி**

நிரை நேர் நிரை வாய்பாடு (காரிகை. உறுப். 7)

**புளிமாங்காய்**

நிரை நேர் நேர் வாய்பாடு (காரிகை. உறுப். 7)

**புளிமாந் தண்ணிழல்**

நிரை நேர் நேர் நிரை வாய்பாடு (காரிகை. உறுப். 8)

**புளிமாந்தண்பூ**

நிரை நேர் நேர் நேர் வாய்பாடு (காரிகை. உறுப். 8)

**புளிமா நறுநிழல்**

நிரை நேர் நிரை நிரை வாய்பாடு (காரிகை. உறுப். 8)

**புளிமா நறும்பூ**

நிரை நேர் நிரை நேர் வாய்பாடு (காரிகை. உறுப். 8)

**புறச்சுட்டு**

சொற்குப் புறத்துறுப்பாய் வருஞ்சுட்டெழுத்து

**புறச்சொல்**

நாடகத்தில் தனக்குட் பேசிக் கொள்ளாமல் எல்லோரும் கேட்கும்படியாக உரைக்குஞ்சொல் (சிலப். 3, 13, உரை)

**புறஞ்சொல்**

1. வெளியிற் கூறும் அலர்மொழி : புறஞ்சொ லென்னும் பெருஞ்சிமி றார்ப்ப(சீவக. 1665)
2. பழிச்சொல் : புறஞ்சொ லூற்றாது புகழுந் தன்மையர் (பெருங். வத்தவ. 10, 31)

**புறத்திணை**

வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் என எழுவகையாகவும் (தொல்.) இவற்றுடன் கரந்தையும் நொச்சியும் சேர ஒன்பது வகையாகவும் (பன்னிரு படலம்), இவ்வொன்பதுடன் பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை மூன்றுஞ்சேரப் பன்னிரு வகை

யாகவும் (பு.வெ.) பிரித்துக் கூறப்படும் புறப்பொருள் பற்றிய ஒழுக்கங்கள்

**புறத்திரட்டு**
புறப்பொருள் பற்றிய செய்யுட்களைப் பல நூல்களிலிருந்து திரட்டி அமைக்கப்பட்ட தொகை நூல்

**புறத்திறை**
வேற்றரசனுடைய மதிலை, மேற் சென்ற வேந்தன் முற்றுகை செய்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 10)

**புறத்துழிஞை**
வேற்றரசனுடைய மதிலைச் சூழ்ந்த அகழியின் கரையில், மேற்சென்ற வேந்தன் சேனையுடன் தங்கி முற்றுகையிடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 6, 16)

**புறத்துறை**
வேற்றரசனுடைய மதிலை மேற்சென்ற வேந்தன் முற்றுகை செய்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 10)

**புறநிலை**
'நீ வணங்கும் தெய்வம் நின்னைப் புறங்காப்ப நின்வழிவழி மிகுவதாக' எனக் கூறுவதும் 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாவதுமான நூல் வகை (சது.)

**புறநிலை வாழ்த்து**
'வழிபடு தெய்வம் நின்னை புறங்காப்ப வழிவழி செல்வத்தோடு சிறந்து பொலிக' என்று தலைவனொருவனைக் கூறும் வாழ்த்து (தொல். பொ. 422)

**புறப்பாட்டு**
புறப்பொருளைப் பற்றிய செய்யுள்

**புறப்பாட்டு வண்ணம்**
இறுதியடி முடியாதிருப்பவும் தான் முடிந்த அடி போலக் காட்டும் சந்தம் (தொல். பொ. 537)

**புறப்பொருள்**
காண்க :
1. புறத்திணை (பு.வெ. சிறப்பு. 1)
2. வீரம் (சீவக. 1090, உரை)
3. வெளிப்படையான பொருள் (கம்பரா. இரணிய. 32)

**புறம்**
ஏழனுருபுள் ஒன்று (நன். 302)

**புறனடைச் சூத்திரம்**
விதித்தவற்றுள் அடங்காதனவற்றை அமைத்துக் காட்டும் பொதுச் சூத்திரம் (சீவக. 89, உரை)

**புனருத்தி**
காண்க : கூறியது கூறல் (சூடா.)

**புனற்றருபுணர்ச்சி**
வெள்ள நீரிடையே வீழ்ந்த தலைவியைத் தலைவன் காத்த விடத்து அவ்விருவர்க்கும் உண்டான கூட்டம் (தொல். பொ. 114, உரை, பக். 548)

**புனைந்துரை**
1. அலங்கரிக்கும் வாசகம் (நம்பியகப். 2)
2. பாயிரம் (நன். 2)

**புனைவிலி புகழ்ச்சி**
காண்க : பிறிது மொழிதல் (அணியி. 27, பக். 17)

## பூ

**பூக்கோணிலை**
போரை மேற்கொள்ளும்போது வெட்சி முதலிய மலர்களை அரசனிடமிருந்து வீரன் பெற்றுக் கொள்ளுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 4, 10, தலைப்பு)

**பூசன்மயக்கு**
1. குலமுதற்பிள்ளை யிறக்கச் சுற்றத்தார் புலம்புதலைச் சொல்லும் புறத்துறை (பு. வெ. 10, சிறப். 6)
2. வேந்தன் இறந்துபட்டானாக அவனது குடிகள் இரங்கு தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 10, சிறப். 7)

**பூசன் மாற்று**
நிறை கவர்ந்த வெட்சியார் மீட்கவந்த கரந்தையாரைப் போரில்அழித்தமை கூறும் புறத்துறை (பு.வெ. 1,10)

**பூட்டுவிற் பொருள்கோள்**
பொருள்கோள் எட்டனுள், செய்யுளின் முதலினும் ஈற்றினும் உள்ள சொற்கள் தம் முளியையப் பொருள் கொள்ளும் முறை (நன். 415)

**பூத்தருபுணர்ச்சி**
தனக்கு எட்டாத மரத்தினின்றும் தான் விரும்பிய பூவைப் பறித்துதவிய தலைவனது நன்றி பாராட்டித் தலைவி அவனைக் கூடுங் கூட்டம் (தொல், பொ. 114, பக். 548)

**பூமிச் சக்கரம்**
சித்திரகவி வகை

**பூமியாகாயச் சக்கரம்**
சித்திரகவி வகை

**பூவைநிலை**
1. காயாம் பூவை மாயவன் நிறத்தொடு உவமித்துப் புகழும் புறத்துறை (பு.வெ. 9, 4)
2. அரசனைத் தேவரோடு ஒப்பக் கூறும் புறத்துறை (புறநா. 56) (தொல். பொ. 60)

## பெ

**பெண் கலை**
வண்ணப்பாவின் பிறபகுதி

**பெண்ணெழுத்து**
1. உயிர்மெய்
2. நெட்டெழுத்து (வெண்பாப். முதன். மொ. 6)

**பெண்பாற் பிள்ளைத்தமிழ்**
ஆண்பால் பெண்பால்கட்குப் பொதுவாயுள்ள பருவங்களோடு, பெண்பாற்கே சிறப்பாகவுரிய கழங்குப் பருவம் அல்லது நீராடற் பருவம், அம்மானைப் பருவம், ஊசற் பருவங்களைச் சேர்த்துப் பெண் தெய்வத்தை அல்லது சிறப்புடைப் பெண்பாலைப் புனைந்து பாடும் பிள்ளைத் தமிழ் வகை

**பெயர்**
முதல் வேற்றுமை: அவைதாம் பெயர் ஐயொடு (தொல். சொல். 641)

**பெயர்ச் சூத்திரம்**
காண்க: குறிச் சூத்திரம் (யாப். வி. பாயி. பக். 11)

**பெயர்ச் செவ்வெண்**
பெயர்களில் எண்ணிடைச் சொல் தொக்கு விட்டிசைத்து வருந் தொடர் (நன். 428)

**பெயர்ச் சொல்**
நால்வகைச் சொற்களுள் பொருளைக் குறிக்க வழங்குஞ் சொல்

**பெயர்த் திரிசொல்**
1. திரிந்து வழங்கும் பெயர்ச் சொல் (சீவக. 1774, உரை

2. தம் பொருளை அரிதில் விளக்கும் பெயர்ச்சொல் (நன். 272, உரை)

**பெயர் நேரிசை**
பாட்டுடைத் தலைவன் பெயர் சார்ந்து வர 50, 70 அல்லது 90 நேரிசை வெண்பாக்களால் இயற்றப்படும் பிரபந்தவகை (இலக். வி. 830)

**பெயர் வேற்றுமை**
முதல் வேற்றுமை : அவ்வாறும் பெயர் வேற்றுமைப் பயனிலையாம் (தொல். சொல். 66, சேனா)

**பெயரிடை நிலை**
பெயரின் பகுதி விகுதிகட்கு இடை நிற்கும் எழுத்து (நன். 141, உரை)

**பெயரியல்**
சொல்லதிகாரத்திற் பெயர்ச் சொல்லிலக்கணங் கூறும் பகுதி (தொல்.)

**பெயரியற் சொல்**
தன் பொருளை இயல்பில் விளக்கும் பெயர்ச்சொல் (நன். 269, மயிலை.)

**பெயரின்னிசை**
பாட்டுடைத் தலைவன் பெயர் சார்ந்துவர 50, 70, 90 இன்னிசை வெண்பாவால் இயற்றப்படும் பிரபந்தவகை (இலக். வி. 825); (சது.)

**பெயருரிச் சொல்**
பெயர் சொல்லைத் தழுவி வரும் சொல்

**பெயரெச்சம்**
பெயர் கொண்டு முடியும் வினைக்குறை (நன். 340)

**பெயரெஞ்சு கிளவி**
காண்க : பெயரெச்சம் (தொல். சொல். 238)

**பெருக்கலங்காரம்**
அதிசயவணி (வீரசோ. அலங். 25, உரை)

**பெருங்காஞ்சி**
1. ஒவ்வொருவரையும் கூற்றம் அணுகுமென்று கூறு தலைப்பற்றிச் சொல்லும் புறத்துறை வகை (தொல். பொ. 79, உரை)
2. வீரர்படை முகத்துத்தம் ஆற்றல் தோற்றுவித்தலைக் கூறும் புறத்துறைவகை (பு. வெ. 4, 6)

**பெருங்காப்பியம்**

96 பிரபந்தங்களுள் தன்னிகரில்லாத தலைவனைப் பற்றிய நால் நாற்பொருள் பயப்ப நாடுநகர் முதலியவற்றைச் சிறப்பித்துப் பாடப்படும் தொடர்நிலைச் செய்யுள்வகை (தண்டி. பொது. 7)

**பெருஞ்சோற்றுநிலை**

போர் மேற்கொண்ட அரசன் படையாளர்க்கு உண்டியளித்து முகமன் செய்தலைக் கூறும் புறத்துறை : பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும் (தொல். பொ. 63)

**பெருஞ்சோற்று வஞ்சி**

காண்க : பெருஞ்சோற்று நிலை : பின்றாச் சிறப்பிற் பெருஞ்சோற்று வஞ்சியும் (சிலப். 25, 144)

**பெருந்திணை**

அகத்திணை யேழனுள் ஒன்றானதும், ஒத்த சாதியல்லாதவளுடனாவது, விதிக்கு மாறாகவாவது, தன்னைவிட வயதில் முதிர்ந்தவளோடாவது, மனம் ஒவ்வாதவளோடாவது கூடும் காதல் : கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் (தொல். பொ. 1)

**பெருந்தேவபாணி**

கடவுளரைத் துதிக்கும் இசைப்பா வகை (சிலப். 6, 35, உரை)

**பெருந்தொடர்**

எழுவாய் பயனிலை முடிந்த வாக்கியஞ் சிலவற்றைப் பிணைத்து நடக்குந் தொடர்ந்த வாக்கியம் (தொல். சொல். 42, சேனா.)

**பெரும்படை**

1. பெரிய சேனை
2. இறந்த வீரன் புகழை நடுகல்லிற் பொறிப்பதைக் குறிக்கும் புறத்துறை (தொல். பொ. 60)
3. தெய்வமாகிய நடுகற்குப் பெருஞ் சிறப்புப் படைத்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60, உரை)

**பெரும்பண் (இசை)**

பாலையாழ், செந்து, மண்டலியாழ், பௌளி, மருதயாழ், தேவதாளி, நிருபதுங்கராகம், நாகராகம், குறிஞ்சியாழ், ஆசாரி, சாயவேளர் கொல்லி, சின்னராகம், செவ்வழி, மௌசாளி, சீராகம், சந்தி என்னும் பதினாறு தலைமைப் பண்கள் (பிங்.)

**பெரும்பொழுது**
கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பருவங்கள் (நம்பியகப். 11)

**பெருமகிழ்ச்சி மாலை**
பிரபந்தங்களுள் கற்புடைப் பெண்டிர் பெருமையைக் கூறும் நூல்

**பெருமங்கலம்**
1. வாழ்த்துப் பாடல்: பெருமங்கலம் பாடுவார் (சீவக. 308, உரை)
2. அரசன் தன் பிறந்த நாளில் குடிகட்கு அருள் செய்வதைக் கூறும் புறத்துறை: பிறந்த நாள்வயிற் பெருமங்கலமும் (தொல். பொ. 91)
3. 96 பிரபந்தங்களுள் அரசனது பிறந்த நாள் மங்கலத்தைக் கூறும் நூல் (சது.)

**பெருமிதம்**
1. மேம்பாடு : பெருக்கம் பெருமித நீர்த்து (குறள். 431)
2. எண்வகை மெய்ப்பாடுகளுள் கல்வி முதலிய பெருமைகளில் மேம்படுகை : கல்வி தறுக ணிசைமை கொடையெனச் சொல்லப்பட்ட பெருமித நான்கே (தொல். பொ. 257)

**பெருவஞ்சி**
பகைவர் நாட்டை எரி கொளுத்துவதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 3, 22)

## பே

**பேசாவெழுத்து**
'நமசிவாய' என்ற பஞ்சாட்சர மந்திரத்திற் சிவபெருமானைக் குறிக்கும் 'சி' என்ற எழுத்து : பேசுமெழுத்துடனே பேசாவெழுத்தினையும் (கொடிக். 4)

**பேசுமெழுத்து**
'நமசிவாய' என்ற பஞ்சாட்சரத்திற் சக்தியை உணர்த்தும் 'வ' என்றவெழுத்து : பேசுமெழுத்துடனே (கொடிக். 4)
2. வைகரி வாக்கு : ஊமை எழுத்தொடு பேசுமெழுத்துறின் (திருமந். 2158)

**பேடியெழுத்து**
ஆய்தவெழுத்து

**பேய்க்காஞ்சி**

புண்பட்ட வீரனைக் கங்குல் யாமத்துப் பேய் காத்தமை கூறும் புறத்துறை (தொல். பொ. 79)

**பேய்க்குரவை**

போருக்குச் செல்லும் அரசன் செலுத்தும் தேர்க்கு முன்னும் பின்னும் பேய் ஆடுவதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 19)

**பேராண்முல்லை**

சினமிக்க மன்னன் போர்க்களத்தைக் கைக் கொண்டதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8, 26)

**பேராண் வஞ்சி**

பகைவர் பொரும் செருவைத் தொலைத்த தலைமையை யுடைய வீரர்க்குப் பெரிதுங் கொடுத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 9)

**பேரியற் காஞ்சி**

கேட்டினியல்புகளைப் புலவர் எடுத்துக்கூறுந் துறைவகை (திவா.)

**பேரிளம்பெண்**

1. எழுவகைப் பருவ மகளிருள் முப்பத்திரண்டு வயதுக்கு மேல் நாற்பது வயது வரையுள்ள பெண் (பிங்.)
2. முப்பதுக்கு மேல் ஐம்பத்தைந்து வரை வயதுள்ள பெண் (கொக்கோ.)

**பேரெண்**

1. பெருந்தொகை
2. நாற்சீர் ஈரடியாய் வரும் அம்போதரங்க வுறுப்புவகை (காரிகை. செய். 10, உரை)

**பேரெல்லை**

செய்யுளின் அடிப்பெருமைக்கு அமைந்த வரையறை

**பேரெல்லை வெண்பா**

எட்டடி வெண்பா (யாழ். அக.)

**பேறு**

1. பெறுகை : மக்கட்பேறு (குறள். 61)
2. அடையத்தக்கது : விழுப்பேற்றி னஃதொப்ப தில் (குறள். 162)
3. புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை,

இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய பதினாறு வகைப்பட்ட செல்வம் (அபி. சிங்.)

4. செல்வம்

## பை

**பைசந்தி**

நால்வகை வாக்குகளுள் ஒன்றாய் நாபியினின்று தோன்றி இதயத்தை யடைந்த நாதரூபமான ஒலி வடிவெழுத்து : பைசந்தி யமர்ந்து நிற்கும் (சி.சி. 1, 22)

**பைசாசம்**

எண்வகை மணங்களுள் துயின்றாள், களித்தாள், மூத்தாள், இழிந்தவள் முதலிய மகளிரைச் சேரும் மணம் (தொல். பொ. 92, உரை)

## பொ

**பொதுச்சீர்**

நாலசையாலாகிய வஞ்சிப்பாவில் வரக்கூடியனவும், தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பவற்றோடு தண்ணிழல், தண்பூ, நறும்பூ, நறுநிழல் என்பவற்றைத் தனித்தனிச் சேர்ப்பதனால் தோன்றுவனவுமான பதினாறு சீர்கள் (காரிகை. உறுப். 5)

**பொதுச் சூத்திரம்**

பொதுவான இலக்கணங் கூறும் சூத்திரம்

**பொதுச் சொல்**

1. எல்லோரும் அறிந்த சொல்
2. இரு திணைகட்கும் பொதுவாகிய சொல் : ஒன்றொழி பொதுச்சொல் (நன். 269)
3. படல முதலிய நூற்பகுதிக்குத் தலைப்பாக இடும் சொல் : பொதுச் சொற்றானே படர்வது படலம் (சூடா.)

**பொதுத் தன்மை**

1. நடுவு நிலைமை
2. பெரும்பாலும் காணப்படும் குணம்
3. உவமான உவமேயங்களில் அமைந்துள்ள சாதாரண தருமம் (அணியி. 1)

**பொதுத்திணை**
இருதிணைகட்கும் பொதுச் சொல்

**பொது நீங்குவமை**
காண்க : இயைபின்மையணி (322) (தண்டி. 30,23)

**பொதுப்பண்**
இரவும் பகலும் பாடற்கு உரிய பண் (சங். அக.)

**பொதுப் பாயிரம்**
நூலியல்பு, நுவல்வோன்திறம், நுவலுந்திறன், கொள்வோன் கூற்று, கோடற்கூற்று ஆகியவற்றைப் பற்றிக் கூறும் முன்னுரை : எல்லா நூற்குமிவை பொதுப் பாயிரம் (நன். 2)

**பொதுப்பெயர்**
1. பல பொருட்குப் பொதுவாகிய பெயர் (நன். 62, உரை)
2. இரு திணைக்கும் அல்லது அஃறிணையிருபாற்கும் பொதுவாக வரும் பெயர் (நன். 281-282)

**பொது மொழி**
1. சிறப்பில்லாச் சொல் : ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது (புறநா. 58)
2. குறிப்பான பொருளில்லாத சொல்
3. பொதுப்படையான சொல்
4. பிரியாது நின்றவிடத்து ஒரு பொருளும் பிரித்தவிடத்து வேறு பொருளும் பயக்கும் சொல் (நன். 260)

**பொதுவியல்**
1. பொதுவாகவுள்ள குணம் (சி.போ. 1, 4)
2. உவமான உவமேயங்களுக்குள்ள சாமானிய தருமம்
3. பொதுவிலக்கணம் உணர்த்தும் நூற்பகுதி (நன். 352; 419)
4. வேத்தியற்கு வேறான கூத்துவகை (சிலப். 14, 148)

**பொது விலக்கணம்**
சிறப்பாகவன்றிப் பலவற்றுக்கும் பொதுவாகக் கூறும் விதி : இடுகுறி காரணப் பெயர் பொதுச் சிறப்பின (நன். 62, உரை)

**பொது வெழுத்து**
ஆரியத் தமிழ்களுக்குப் பொதுவாயுள்ள எழுத்துக்கள் (நன். 150)

**பொதுவெகரம்**
தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான 'ள' என்ற எழுத்து.

**பொருட் குற்றம்**
கவியின் பொருளில் உண்டாகும் பிழை: சொற்குற்ற மின்று வேறுபொருட் குற்ற மென்றான் (திருவிளை. தருமி. 103)

**பொருட் சிதைவு**
சொல் கால வேறுபாட்டாற் கருத்தில் மாறுகை

**பொருட் சிறப்பணி**
காண்க: அர்த்தாலங்காரம் (யாழ். அக.)

**பொருட் சுவை**
கவியின் அர்த்தரசம் (யாழ். அக.)

**பொருட்டன்மை**
பொருளின்கணுள்ள உருவ இயல்புகளை உள்ளவாறு அலங்கரித்துக் கூறும் அணிவகை (தண்டி. 28)

**பொருட்டிரிபு**
ஒரு சொல்லில் அல்லது சொற்றொடரில் உள்ள பொருள் மாறுபாடு

**பொருட்டொடர்நிலைச் செய்யுள்**
காவியம் (சிலப். உரைப்பாயிரம்)

**பொருட்பிறிதின் கிழமை**
ஒரு பொருளுக்குத் தன்னினும் வேறானதனோடு உள்ள உரிமை (சங். அக.)

**பொருட் பின்வருநிலை**
முன்வந்த பொருளே பின்னும் பலவிடங்களில் வரும் அணி (தண்டி. 41, உரை)

**பொருட்பெயர்**
1. பொருளடியாகப் பிறந்த பெயர்ச்சொல் (நன். 132)
2. ஒரு பொருளுக்கு உரிய பெயர்

**பொருண்மயக்கம்**
தன பொருளிற்றீராது பிறிதொன்றன் பொருளின் கண்ணும் செல்லும் உருபு வருகை (பி. வி. 15, உரை)

**பொருண் முடிவு**
1. செய்தி முடிவு
2. முடிந்த கருத்து

3. பயனிலை
4. பொருள் முற்றிய வாக்கியம்

**பொருண் முரணணி**

பொருள் முரண்படத் தொடுக்கும் அணிவகை (யாழ். அக.)

**பொருண் மொழி**

1. மெய்வார்த்தை: பொய்க்கரி போகன்மின் பொருண் மொழி நீங்கன்மின் (சிலப். 30, 192)
2. உபதேச மந்திரம் (சிலப். 10, 100, அரும்.)

**பொருண் மொழிக் காஞ்சி**

1. உயிர்க்கு இம்மை மறுமைகளில் உறுதிதரும் பொருளை ஒருவனுக்குக் கூறுதல் பற்றிய புறத்துறை (புறநா. 24, துறை விளக்கம்)
2. முனிவர் தாம் தெளிந்த மெய்ப்பொருளை விரும்பிக் கூறுதல் பற்றிய புறத்துறை (பு. வெ. 10, காஞ்சிப். 3)

**பொருணயம்**

நூலின் கருத்து நயம்

**பொருணிலை**

1. பொருளின் றன்மை: எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா (தொல். சொல். 107)
2. பொருண்முடிவு: (யாழ். அக.)

**பொருணூல்**

1. அகப்பொருளைப் பற்றிய நூல்: ஓங்கிய பொருணூ லன்பி னைந்திணை யென்றெடுத்த (திருவாலவா. 15, 12)
2. அர்த்த சாஸ்திரம்: பொருணூலாயும் புலவோர் (பெருங். உஞ்சைக். 34, 91)

**பொருள்கோள்**

யாற்றுநீர், மொழிமாற்று, நிரனிறை, விற்பூட்டு, தாப்பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு, அடிமறிமாற்று என எண்வகையாகச் செய்யுட்கட்குப் பொருள் கொள்ளும் முறை (நன். 410)

**பொருள்வயிற் பிரிவு**

பொருள் தேடற் காரணம்பற்றித் தலைவியைத் தலைவன் பிரிகை (திருக்கோ. 332, அவ.)

**பொருள் வழு**
செய்யுட் குற்றங்கள்

**பொருள் விளங்கவைத்தல்**
பொருள் எளிதில் விளங்குமாறு செய்யுள் முதலியவற்றை அமைக்கை

**பொருளணி**
காண்க : அர்த்தாலங்காரம் (பொருளணியியல். தண்டி.)

**பொருளதிகாரம்**
1. அகப்பொருளிலக்கண நூல்: அரசன் பொருளதிகாரமின்மையிற் கவல்கின்றான் (இறை. உரை)
2. அகம், புறம் முதலியவற்றைக் கூறும் தொல்காப்பியத்தின் மூன்றாம் பகுதி
3. அறிவுச் செய்திகளை யெல்லாம் விரித்துப் பொருணான்கினையும் கூறும் நூற்பகுதி

**பொருளாகு பெயர்**
முதற் பொருளின் பெயர் அதன் சினைக்காகும் ஆகுபெயர் (நன். 290)

**பொருளந்தாதி**
பொருளிசையந்தாதி: ஓசையாலன்றிப் பொருளால் வரும் அந்தாதித் தொடை (ஈடு. 1, 6, 2, ஜீ)

**பொருளானந்தம்**
இகழ்ச்சியினும், புகழ்ச்சியினும், உவமையினும், பிறவற்றினும் ஊறு பயப்பப் பாடும் ஆனந்தக் குற்றம் (யாப். வி. பக். 519)

**பொருளிசை யந்தாதி**
ஓசையாலன்றிப் பொருளால் வரும் அந்தாதித் தொடை (ஈடு. 1, 6, 2, ஜீ)

**பொருளியல்**
அகப்பொருள் பற்றிய செய்யுளடங்கிய ஒரு நூல் (களவியற்.)

**பொருளிலக்கணம்**
அகம் புறம் முதலியவற்றைக் கூறும் இலக்கண நூல்

**பொருளுவமை**
பொருளின் தன்மையை உவமித்துக் கூறும் அணிவகை (யாழ். அக.)

**பொலிப் பாட்டு**

1. அறுவடை முடிவிற் களத்தே தலைவனை வாழ்த்தி உழவர் பாடும் பாட்டு
2. கடுமையான சிந்தனை: பொலிப்பாட்டுப்பாடப் புகுந்தாள் (விறலிவிடு. 785)

**பொலிவு மங்கலம்**

மன்னவன் மகிழப் பிறந்த பாலனைப் பலருங் கொண்டாடுதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 23)

**பொழிப்பு**

காண்க: பொழிப்புரை: பொருளைத் திரட்டிக் கூறும் உரை (பிங்.)

**பொழிப்புத் தொடை**

அளவடியுள் முதல், மூன்றாம் சீர்க்கண் மோனை முதலாயின வரத் தொடுத்தல் (இலக். வி. 723)

**பொழிப்புரை**

பொருளைத் திரட்டிக் கூறும் உரை

**பொழுது கண்டிரங்கல்**

பிரிவாற்றாத தலைவி மாலைப் பொழுது கண்டு வருந்துகை (குறள். அதி. 123)

## போ

**போக்கியல்**

சுரிதகம் (வீரசோ. யாப். 11, உரை)

**போர்க்களத் தொழில்**

போரிற் புறங்கொடாது வீரன் பூசற் களரியிலே பட்டதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 2, 6, தலைப்பு)

**போர்க்கெழு வஞ்சி**

வஞ்சி மாலை சூடி யுத்தத்திற்குப் புறப்படும் வீரரைப் புகழும் பிரபந்த வகை

**போலி யெழுத்து**

1. ஓர் எழுத்துக்கு மாற்றாக அவ்வொலியில் அமையும் எழுத்து (நன். 122—124)
2. ஓர் எழுத்துக்கு மாற்றாக வரும் எழுத்து (நன். 122—123)

   மொழியிறுதிப் போலி: அகம்—அகன், நிலம்—நிலன்
   மொழிமுதற் போலி: பசல்—பைசல், மஞ்சு—மைஞ்சு
   மயல்—மையல்

மொழியிடைப்போலி : அமச்சு—அமைச்சு, இலஞ்சி—இலைஞ்சி, அரயர்-அரையர்

## ம

**மஃகான்**

மகரவொற்று (தொல். எழுத். 28)

**மக்கட்சுதிபெயமுந்து:**

ஆ, ஈ, ஊ, ஏ, என்ற நான்கு நெடிலும் ங, ஞ, ண, ந, ம, என்ற ஐந்து மெய்யெழுத்துக்களும் (பன்னிருபா. 24)

**மக்கட் பருவம்**

மானுடப் பிறவிக்குரிய வற்சம், பாலியம், யெளவனம் கெளமாரம், விருத்தம், வார்த்தவ்வியம் என்னும் அறு வகைப் பருவங்கள்

**மக்கள்**

1. மானுடவர்க்கம்: உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே (தொல். சொல். 1)
2. ஐம்பொறி யுணர்வோடு மனவறிவுமுடைய உயிர்கள் (தொல். பொ. 588)
3. பிள்ளைகள்: தம்பொரு ளென்ப தம்மக்கள்(குறள். 63)

**மகட்பாற் காஞ்சி**

முதுகுடித் தலைவனிடம் நின்மகளைத் தருகவென்று கேட்கும் அரசனோடு அவன் மாறுபட்டு நிற்பதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 79, உரை)

**மகடூஉ**

1. பெண்: மகடூஉ வறிசொல் (தொல். சொல். 2)
2. மனைவி: இற்பொலி மகடூஉப் போல (புறநா. 331)

**மகடூஉக் குணம்**

பெண்களுக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணம் (இறை. 2, உரை, பக். 29)

**மகடூஉ முன்னிலை**

பெண்ணை முன்னிலைப்படுத்திக் கூறுகை (காரிகை. பாயி. 1, உரை)

**மகண்மறுத்து மொழிதல்**

பகைவீரன் தம்மகளை மணங்கோடற்கு விரும்பிக் கேட்கச் சிற்றரசர் மறுத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 5, 9)

**மகரக் குறுக்கம்**

தன் மாத்திரையிற் குறைந்த மகரமெய் (நன். 96)

**மகளிர் பருவம்**

1. பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற எழுவகைப் பெண் பருவம் (திவா.)
2. வாலை, தருணி, பிரவுடை, விருத்தை என்ற நால் வகைப் பெண்பருவம் (பிங்.)

**மகிழ்ச்சியணி**

மகிழ்ந்து சொல்லுகையாகிய அலங்காரவகை (வீரசோ. அலங். 12)

**மகிழிசை**

செந்துறை பாட்டுள் ஒருவகை

**மங்கலச் சொல்**

1. சுபத்தைக் குறிக்கும் மொழி
2. ஆதிவசனம்
3. செய்யுட்களின் முதலில் வரற்குரிய திரு, பூ, உலக முதலாய நன்மொழிகள் (வெண்பாப். முதன்மொழி. 2)

**மங்கலப் பொருத்தம்**

செய்யுண் முதன் மொழிப் பொருத்தம் பத்தனுள் முதன் மொழியிடத்து மங்கலச் சொல் நிற்பது (வெண்பாப். முதன்மொழி. 2)

**மங்கல மொழி**

காண்க : மங்கலச் சொல்: செய்யுட்களின் முதலில் வரற்குரிய திரு, பூ, உலகு முதலாய நன்மொழிகள்

2. சுபத்தைக் குறிக்கும் மொழி
3. ஆதி வசனம்; நல்லுரை; நல்லாசி

**மங்கல வழக்கு**

தகுதி வழக்கு மூன்றனுள் மங்கலமல்லாததை மங்கலமாகக் கூறும் வழக்கு (நன். 267, உரை)

**மங்கல வாழ்த்து**

1. பிரபந்தத்தின் முதலில் அல்லது இறுதியில் செய்யப் படும் துதி (சி. சி. பாயி. 1, சிவஞா.)
2. மணமக்களுக்கு ஆசி கூறுகை: மங்கல வாழ்த்துப் பாடலும் (சிலப். பதி. 63)

**மங்கல வள்ளை**

உயர்குல மங்கையை ஒன்பது வெண்பாவால் வகுப்புறப் பாடும் பிரபந்தம் (இலக். வி. 828)

**மங்கல வெள்ளை**

1. பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் சந்தமும் வெண்பாவும் விரவிய ஒன்பது பாடல்களாலேனும், கலிவெண்பா ஒன்றினாலேனும், ஒன்பது வெண்பாக்களாலேனும், ஒன்பது சந்தங்களாலேனும் உயர்குடிப் பிறந்த கற்புடை மடந்தையைப் புகழ்ந்து பாடும் பிரபந்தம் (பன்னிருபா. 300 - 302)
2. சந்தனக் குழம்பு: மங்கல வெள்ளை வழித்து (சீவக. 1477)

**மஞ்சரிப்பா**

பிரபந்தவகை : கிருஷ்ண ராயற்கு மஞ்சரிப்பா...செய் ஞானப்பிரகாச குருராயன் (தொண்டை. சத. 95)

**மடக்கியல்**

காண்க : சுரிதகம் (யாழ். அக.)

**மடக்கு**

1. மாறிமாறி வருகை
2. தாறுமாறு
3. செய்யுளில் சொல் சீர் முதலியன பொருள் வேறுபட்டு மீண்டும் மீண்டும் வருவதாகிய சொல்லணிவகை (தண்டி. 30)

**மடந்தை**

1. பெண்: இடைக்குல மடந்தை (சிலப். 16, 2)
2. மகளிர்ப் பருவம் ஏழனுள் பதினான்கு முதல் பத்தொன்பது வயது வரையுள்ள பருவத்துப் பெண் (பிங்.)
3. பருவமாகாத பெண் (யாழ். அக.)

**மடம்**

1. அறியாமை: மடப்பாலின்றிச் சூழ்மதி வல்லார் (சீவக. 1927)
2. மகடூஉக் குணம் நான்கனுள் கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய பேதைமை : வாலிழை மடமங்கையர் (புறநா. 11)

**மடல்**

காண்க : உலாமடல். தான் காதலித்த தலைவியைப் பெருவிடத்துத் தலைவன் ஏறுதற்பொருட்டுப் பனங்கருக்கால்

குதிரைபோற் செய்த ஊர்தி : ஏறிய படற்றிறம் (தொல். பொ. 51)

**மடலூர்தல்**

தான் காதலித்த தலைவியை அடைதல் வேண்டிப் பனை மடலாலான குதிரையைத் தலைவன் ஏறி ஊர்தல் : மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் (குறள். 1136)

**மண்டலச் சீரந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதிச் சீரும் முதலடியின் முதற் சீரும் ஒன்றாய் வரப் பாடும் அந்தாதிவகை (யாப். வி. 52, பக். 184)

**மண்டல மயக்கந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதி எழுத்து அசை அல்லது சீர் முதலடியின் முதல் எழுத்து அசை அல்லது சீரோடு ஒத்து வருமாறு பாடப்படும் மயக்கந்தாதி வகை (யாப். வி. 52, உரை. பக். 184)

**மண்டல வசையந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதியசையும் முதலடியின் முதலசையும் ஒன்றாக வரும்படிப் பாடப்படும் அசையந்தாதி வகை (யாப். வி. 52, உரை, 184)

**மண்டல வடியந்தாதி**

இறுதிப் பாட்டின் இறுதியடியும் முதற்பாட்டின் முதலடியும் ஒன்றாய் வரும் அடியந்தாதி வகை (யாப். வி. 52, உரை, பக். 184)

**மண்டல வந்தாதி**

ஒரு செய்யுளிறுதியடியின் இறுதி எழுத்து அசை அல்லது சீர் முதலடியின் முதலெழுத்து அசை அல்லது சீருடன் ஒத்து வருமாறு பாடப்படும் அந்தாதி வகை (யாப். வி. 52, உரை, பக். 184)

**மண்டல வெழுத்தந்தாதி**

ஒரு செய்யுளின் இறுதியடியின் இறுதியெழுத்தும் முதலடியின் முதலெழுத்தும் ஒன்றாய் வரப் பாடப்படும் எழுத்தந்தாதி வகை (யாப். வி. 52, உரை, பக். 184)

**மண்டலித்தல்**

இறுதிப் பாட்டின் அல்லது இறுதி அடியின் இறுதி எழுத்து அசைச்சீர் என்பவற்றுள் ஏதேனும் ஒன்று முதற் பாட்டின் அல்லது முதல் அடியின் முதல் எழுத்து அசை சீர் என்பவற்றுள் ஒன்றாய் வருமாறு இசைத்தல்

**மண்டில யாப்பு**
நாற்சீரடிச் செய்யுள் (தொல். பொ. 427)

**மண்ணுமங்கலம்**
1. அரசன் முடிபுனைந்த காலம் தொடங்கி யாண்டு தோறும் முடிபுனைந்து நன்னீராடுதலைக் கூறும் புறத்துறை: சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும் (தொல். பொ. 91)
2. மாற்றரசனது மதிலை யழித்த அரசன் மங்கலமாக நன்னீராடுதலைக் கூறும் புறத்துறை : மன்னெயி லழித்த மண்ணு மங்கலமும் (தொல். பொ. 91)
3. பட்ட வேந்தனான பகைவன் பெயரானே அவன் முடி புனைந்து வென்ற வேந்தன் நன்னீராடுதலைக் கூறும் புறத்துறை : குடுமி கொண்ட மண்ணு மங்கலமும் (தொல். பொ. 68)

**மணிப்பிரவாளம்**
வடமொழியுந் தென்மொழியும் போன்ற இரு மொழிச் சொற்கள் விரவி வரும் நடை (வீரசோ. அலங். 40)

**மணிமாலை**
96 பிரபந்தங்களுள் ஒன்றான வெண்பா இருபதும் கலித் துறை நாற்பதும் விரவிவரச் செய்யும் பிரபந்தம் (சது.)

**மணிமிடை பவளம்**
1. அகநானூற்றின் இரண்டாம் பிரிவு: பாட்டு நூற் றெண்பதும் மணிமிடை பவளம் எனப்படும் (அகநா. பாயி. உரை, பக். 406)
2. மணியும் பவளமும் கலந்த அணி

**மத்திமம்**
நடுவுநிலைமை யென்னுஞ் சுவை (தொல். பொ. 245, இளம்பூ.)

**மதங்கியார்**
இரண்டு கைகளிலும் வாளெடுத்துச் சுழற்றியாடும் இளம் பெண்ணான மதங்கி மீது ஒருவன் காமுறுவதாகப் பாடும் கலம்பகவுறுப்பு (குமர. பிர. மதுரைக்கலம். 15, தலைப்பு)

**மதலைத் தூக்கு**
இரு சீருடைய இசைத்தூக்கு (சிலப். 3, 26, உரை, பக். 91)

**மதலை வாழ்த்து**

தலைவனது ஆஸ்தான மண்டபத்துத் தூணைப் புகழ்ந்து கூறும் துறைவகை (மாறன. 91, 125)

**மதிக்கணம்**

காண்க : சந்திரகணம் (திவா.)

**மதியுடம்படுத்தல்**

1. தலைவன் தலைவியரிருவர் கருத்தொற்றுமையால் அவர்தம்முட் கூட்ட முண்மையைத் தோழியுணரும் அகத்துறை (தொல். பொ. 127)
2. தலைவிமீது தான் கொண்ட காதலைத் தலைவன் தோழிக்கு உணர்த்தி அவளது அறிவையொருவழிப் படுத்தும் அகத்துறை (களவியற். பக். 42)

**மதியுடம்படு-தல்**

1. தலைவி தலைவன் கருத்தோடு இணங்கியவளாதல் : மிதிலை மூதா ரெய்திய ஞான்றே மதியுடம்பட்ட மாக்கட் சீதை (தொல். பொ. 54, உரை)
2. தலைவன் தலைவியரிருவர்க்குங் கூட்டமுண்மையை அவர் தம் கருத்தொற்றுமை பற்றித் தோழியுணர்தல் (தொல். பொ. 128, உரை; திருக்கோ. 71, கொளு.)

**மதுரகவி**

நாற்கவிகளுள் இனிமை பெருகப் பாடுங்கவி (பிங்.)

2. கவி பாடும் புலவன்
3. நம்மாழ்வாரின் சிஷ்யரும் திவ்விய பிரபந்தத்தில் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற பிரபந்தம் பாடிய வருமான ஆழ்வார் (திவ். கண்ணி நுண். 10)

**மந்திரச் சக்கரம்**

சித்திரகவி

**மந்திரத் தோழி**

தலைவியின் அந்தரங்கமான பாங்கி : யாப்பியாயினுமெனு மந்திரத் தோழியொடு (பெருங். மகத. 9, 54)

**மயக்கந்தாதி**

எழுத்து, அசை, சீர் இவற்றின் அந்தாதிகள் விரவிவரப் பாடும் அந்தாதி வகை (யாப்.வி. பக். 184)

**மயக்கம்**

1. கலப்பு : வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி (கல்லா. 62.18)
2. எழுத்துப் புணர்ச்சி ; உடனிலை மயக்கம்

**மயக்கவணி**

ஒற்றுமைபற்றி ஒரு பொருளை வேறொரு பொருளென மயங்குவதாகக் கூறும் அணி (அணியி. 6)

**மயக்க விதி**

தமிழ்ச் சொல்லில் இன்ன மெய்யெழுத்து இன்ன மெய்யெழுத்தோடு சேர்ந்து வரும் என்பது பற்றிய விதி (நன். எழுத். 299, விருத்.)

**மயக்க வொழிப்பு**

ஒரு பொருளை மற்றொரு பொருளென மயங்குவதையொழித்தற்கு வேற்றுமை கூறித் தெரிவிக்கும் அணி (யாழ். அக.)

**மயங்கவைத்தல்**

நூற்குற்றம் பத்தனுள், பொருள் இன்னது என்று துணியக் கூடாமற் கூறும் குற்றம் (நன். பொது. 12)

**மயங்கிசைக் கொச்சகம்**

தரவு முதலிய உறுப்புக்கள் மயங்கியும் மிக்கும் குறைந்தும் வரும் கொச்சகக்கவி (வீரசோ.யாப். 12, உரை)

**மயங்குதிணை நிலைவரி**

வரி பாட்டு வகை (சிலப். கானல்வரி. அரும்.)

**மரபியல்**

முன்னோர் வழங்கிய சொல் வழக்கைக் கூறும் இலக்கணப் பகுதி

**மரபு**

1. முறைமை : ஈண்டு செலன் மரபிற் றன்னியல் வழாது (புறநா. 25)
2. சான்றோரின் சொல் வழக்கு முறை (நன். 388)

**மரபுப்பெயர்**

ஒன்றுக்குத் தொன்றுதொட்டு வழங்கி வரும் பெயர் (நன். 274, உரை)

**மரபு வழு**

தொன்று தொட்டு வழங்கி வரும் முறைமைக்கு மாறானது (தொல். சொல். 11, உரை)

**மரபு வழுவமைதி**

மரபு வழுவை அமைதியுடையதென்று சான்றோர் அமைத்துக் கொள்வது (தொல். சொல். 11, உரை)

**மருட்கை**
மெய்ப்பாடு எட்டனுள் ஒன்றாகிய வியப்பு (தொல். பொ. 251)
ஐயமு மருட்கையுஞ் செவ்விதினீக்கி (தொல். பொ. 659)

**மருட்கையுவமை**
ஒரு பொருட்குக் கூடாத பண்பினைக் கூடுவதாகக் கொண்டு அதனை யுவமையாக்கிக் கூறும் அணிவகை (மாறனலங். 101, உரை)

**மருட்செந்தொடை**
செந்தொடை வகை (யாழ். அக.)

**மருட்பா**
வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்து வரும் செய்யுள் வகை (தொல். பொ. 398; இலக். வி. 749)

**மருதத் திணை**
காண்க : மருதம்
1. ஐந்திணையுளொன்றான வயலும் வயல் சூழ்ந்த இடமும் (தொல். பொ. 6)
2. அகத்திணை ஏழனுள் ஒன்றானதும் ஊடியும் கூடியும் போகம் நுகர்வதுமான ஒழுக்கம்: மருதஞ் சான்ற மருதத் தண்பனை (சிறுபாண். 186)

**மருஉ**
1. இயல்பு வழக்கு மூன்றனுள் இலக்கணஞ் சிதைந்து மருவி வழங்குஞ் சொல் முதலியன (நன். 267)
2. நட்பு : மருஉச்செய் தீயார்மாட்டுந் தங்கு மனத்தார் (நாலடி. 246)

**மருஉத்தொகை**
முன் பின்னாக வந்த ஆறாம் வேற்றுமைத் தொகை (பி.வி 19)

**மல்வென்றி**
வாகைத் திணையுள், மற்போரில் வெற்றியைக் கூறும் ஒரு புறத்துறை (பு. வெ. 12, 3)

**மலர்**
வெண்பாவின் இறுதிச்சீர் வாய்பாடுகளுள் ஒன்று (காரிகை. செய். 5, உரை)

**மலி—தல்**
1. புணர்ச்சியின் மகிழ்தல் : மலிதலுமூடலும் (தொல். பொ. 235)

2. செருக்குதல் : மகிழ்ந்தன்று மலிந்தன்று மதனினு மிலனே (புற. 77)
3. மிகுதல் : கனிப்பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம்பு (சீவக. 2541)

**மலைவணமதி**
இடம் காலம் கலை, முதலிய அறுவகை மலைவும் சில காரணங்கருதிப் பொருத்தமுடையனவாக அமைத்துக் கொள்ளப்படுவது (தண்டி. 123, உரை)

**மலைவு**
இடம், காலம், கலை, உலகம், நியாயம், ஆகமம் என்பவற்றைப் பொருத்தமின்றிக் கூறுகையாகிய குற்றம் (தண்டி. 123)

**மழபுலவஞ்சி**
பகைவர் புலம் பாழ்படக் கொள்ளையூட்டுதலைக் கூறும் புறத்துறை (புறநா. 7)

**மற்றொன்று விரித்தல்**
நூற்குற்றம் பத்தனுள், எடுத்துக்கொண்ட விஷயத்தை விடுத்துப் பிறிதொன்று கூறுதலாகிய குற்றம் (நன். 12)

**மறக்களவழி**
போரிற் பகையழிக்கும் அரசனை உழும் வேளாளனாக மிகுத்துக் கூறும் புறத்துறை (புறநா. 373, பு.வெ. 8, 5)

**மறக்கள வேள்வி**
காண்க : களவேள்வி (புறநா. 372)
யாங்கணு மறக்கள வேள்வி செய்வோயாயினை (சிலப். 28, 131)

**மறக்காஞ்சி**
போரில் விழுப்புண் பெற்ற வீரன் தம் வாழ்க்கை வேண்டாது அப்புண்ணைக் கிழித்துக் கொண்டு இறத்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 79, உரை)

**மறம்**
1. வீரம் : மறவா ளேந்திய நிலந்தரு திருவினெடியோன் (சிலப். 28, 2)
2. தம் குலத்துப் பெண்ணை விரும்பிய அரசற்கு மறவர் உடம்படாது மறுத்துக் கூறுவதாகப் பாடுங் கலம்பக வுறுப்பு (இலக். வி. 812)

**மறமுல்லை**
வேந்தன் வேண்டியது கொடுப்பவும் கொள்ளாத வீரனது பயன் கருதாநிலையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8, 27)

**மறனுடைப்பாசி**
எயில் காத்த சினமன்னர் வீரசொர்க்க மடைந்ததைக் கூறும் புறத்துறை (பு.வெ. 5, 2, கொளு.)

**மறுத்து மொழி நிலை**
ஓர் அணிவகை (பிங்.)

**மறுபொருளுவமை**
காண்க: பிரதிவஸ்தூபமை (தண்டி. 30, உரை)

**மறை**
1. களவுப் புணர்ச்சி: மறையலராகி மன்றத் தஃதே (குறுங். 97)
2. மறைவிடம் (சங். அக.)

**மறைத்து மொழி கிளவி**
இடக்கரடக்கல் (திவா.)

**மறைமொழி**
மந்திரம்: மறைமொழி தானே மந்திர மென்ப (தொல். பொ. 491)

**மறைவிடை**
மறுத்துக் கூறும் விடை (நன். 386, உரை)

**மன்னுறு தொழில்**
வீரர் அரசன் கட்டளை பெற்றுப் பகைவரின் பசுநிரை கவர்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 1, 1)

**மன்னைக் காஞ்சி**
இறந்தவனைப் பற்றிச் சிறப்பித்து ஏனையோர் இரங்கிக் கூறும் புறத்துறை (தொல். பொ. 79, உரை)

**மன் விருத்தம்**
ஆசிரிய விருத்தம்

## மா

**மா[1]**
1. விலங்கின் பொதுப் பெயர்: "மாவு மாக்களு மையறி வினவே" (தொல், பொ. 587)

2. மாமை நிறம் : "அம்மா வரிவை" (புறநா. 147)
3. வியங்கோளோடு வரும் அசைச் சொல்: "விளிந் தன்று மாதவ" (நற். 178) ; "உப்பின்று: புற்கை யுண்கமா கொற்கையோனே"

**மா²**
இயற்சீர் இறுதியிலுள்ள நேரசையைக் குறிக்கும் வாய்பாடு

**மாச்சீர்**
நேரசையால் இறும் இயற்சீர்

**மாட்டு**
அகன்று கிடப்பினும் அணுகிய நிலையிற் கிடப்பினும், பொருள் முடியுமாற்றாற் கொண்டு கூட்டிச் சொல் முடிபு கொள்ளும் முறை : அகன்று பொருள் கிடப்பினும்... மாட்டெனமொழிய (தொல். பொ. 522)

**மாட்டெறிந்தொழுகல்**
முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்றானதும், ஒரு சூத்திரத் திற் கூறிய விதியை அதனையொத்த சூத்திரங்கட்கும் இணைத்துக் கொள்வதுமான உத்தி (நன். 14)

**மாட்டேற்று**
மாட்டெறிந்தொழுகல் : முப்பத்திரண்டு உத்திகளுள் ஒன்றானதும், ஒரு சூத்திரத்திற் கூறிய விதியை அதனை யொத்த சூத்திரங்கட்கும் இணைத்துக் கொள்வதுமான உத்தி (நன். 14)

**மாத்திரை**
1. கணப்போது : சகமூன்றுமோர் மாத்திரை பார்க்கு மெங்கள் கண்ணவனார் (திருநூற். 25)
2. கண்ணிமைத்தல் அல்லது கைநொடித்தல் அளவான காலம். கண்ணிமை நொடியென வவ்வே மாத்திரை (தொல். எழுத். 6)
3. செய்யுளின் வரும் எழுத்தொலியளவு : மாத்திரை யெழுத்தியல் (தொல். பொ. 313)

**மாத்திரைச் சுதகம்**
மாத்திரைச் சுருக்கம் (யாப்.வி. பக். 510)

**மாத்திரைச் சுருக்கம்**
ஒரு பொருள் தந்து நிற்கும் ஒரு சொல் ஒரு மாத்திரை குறையுமிடத்து வேறொரு பொருள் தந்து நிற்குஞ் சொல்லணி (தண்டி. 95, உரை)

**மாத்திரை வருத்தனம்**

ஒரு பொருள் தந்து நிற்கும் ஒரு சொல் ஒரு மாத்திரை கூடுமிடத்து வேறொரு பொருள் தந்து நிற்குஞ் சொல்லணி (தண்டி. 95, உரை)

**மாமை**

அழகு : மணிமிடை பொன்னின் மாமை சாய் (நற். 304)
கருமை : மாமைக் களங்கனி யன்ன (மலைபடு. 35)
நிறம் : நெடுந்தகை தற்கண்டு மாமைத் தகையிழந்த (பு. வெ. 12, 2)
மேனி : மாமை பொன்னிறம் பசப்ப (பு. வெ. 11, பெண்பாற்.6)
துன்பம்

**மாயப்புணர்ச்சி**

தலைவன் தலைவியரதுக் களவுக் கூட்டம் (தொல். பொ. 92, உரை)

**மார்**

1. ஓர் அசை (தொல். எழுத். 186)
2. பல்லோர் படர்க்கை விகுதியுள் ஒன்று (தொல். சொல். 209)
3. ஒரு வியங்கோள் விகுதி (நன்.)
4. ஒரு பன்மை விகுதி : தாய்மார் மோர் விற்கப் போவார் (திவ். பெரியாழ். 3, 1, 9)

**மாராய வஞ்சி**

அரசனாற் சிறப்பெய்திய வெற்றி வீரனின் பெற்றிமை கூறும் புறத்துறை (பு.வெ. 3, 11)

**மாருத கணம்**

தேமாங்கனி என்னும் வாய்பாடு பற்றி வருவதும் நூன்முதற் செய்யுளின் முதலில் அமையத்தகாது அமங்கலமுமான செய்யுட் கணம் (திவா.)

**மாலா தீபகம்**

ஒரு சொல் மாலை போலத் தொடர்ந்து எல்லா வாக்கியங் களோடும் சென்று பொருள் தருவதாகிய அணிவகை (சங். அக.)

**மாலை நிலை**

இறந்த கணவனுடைய சிதையில் தீப்பாயும் பொருட்டு அவன் மனைவி மாலைக் காலத்து நின்ற நிலை கூறும் புறத் துறை (தொல். பொ. 77, இளம்பூ.; பு.வெ. 10, 8)

**மாலை மாற்று**

எழுத்துக்களை ஈறு முதலாகப் படிக்குமிடத்தும் பாட்டு மாறாமல் இருக்கும் மிறைக்கவி வகை (யாப். வி. பக். 493); திருமாலை மாற்று (தேவா. 123, தலைப்பு)

**மாலையணி**

அணிவகை (சங். அக.)

**மாலையுவமை**

பூமாலைபோல் உவமை பல ஒன்றற்கொன்று தொடர்புடையதாய் வரும் அணிவகை (தண்டி. 30, 24)

**மாறுகொளக் கூறல்**

நூற்குற்றம் பத்தனுள் முன்னொடு பின் முரணக் கூறும் குற்றவகை (நன். 12)

**மாறுபடு புகழ்நிலை**

சொல்லக் கருதிய பொருளை விடுத்து அதனைப் பழிக்கும் பொருட்டு வேறொன்றை வெளிப்படையாகப் புகழும் அணிவகை (தண்டி. 81)

**மாறுபடு பொருண்மொழி**

முன் மொழிந்ததற்கு மாறாகப் பொருள் தோன்றி வருஞ் சொல்லுடையதாகிய அலங்காரவழு (தண்டி. 100)

## மி

**மிகற்கை**

எழுத்து இரட்டிக்கை : இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும் (தொல். எழுத். 157)

**மிகைபடக்கூறல்**

நூற்குற்றம் பத்தனுள், வேண்டுமளவின் மிக்கதைக் கூறும் குற்றம் (நன். 12)

**மிகைமொழி**

காண்க : உயர்வுநவிற்சியணி (பிங்.)

**மிகையுவமை**

உவமானம் உவமேயம் இரண்டற்கும் ஆதாரம் வேறு என்பதன்றி வேற்றுமையில்லை யென்னும் உவமையணி (வீரசோ. அலங். 14, உரை)

**மிறைக்கவி**

காண்க : சித்திரக்கவி (திவா.)

## மீ

**மீமிசைச் சொல்**
சிறப்புப் பொருளைத் தெரிவித்தற்கு முன்னுள்ள சொல்லின் பொருளிலேயே அடுத்து வருஞ்சொல்

**மீலிதம்**
ஒப்புமைச் சிறப்பால் இரு பொருள்கட்குத் தம்மிலுள்ள வேற்றுமை காணப்படாமையைக்கூறும் ஓரலங்காரம் (அணியி.)

## மு

**முக்காலம்**
இறப்பு, நிகழ்வு, எதிர்வு, என்ற மூன்று காலங்கள்: அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளும் (தொல். சொல். 200) காண்க: காலம்

**முகவைப்பாட்டு**
களத்திற் சூடடிக்கும்போது பாடும் பொலிப் பாட்டு: பெருஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும் (சிலப். 10, 137)

**முச்சங்கம்**
பாண்டிய மன்னர் ஆதரவின்கீழ்த் தமிழாராய்ந்த புலவர்களாலாகிய தலைச்சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்ற மூவகைத் தமிழ்ச் சங்கங்கள் : ஆதி முச்சங்கத் தருந் தமிழ்க் கவிஞர் (சிலப். பக். 8, கீழ்க்குறிப்பு)

**முச்சொல்லலங்காரம்**
ஒரு தொடர் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டு மூன்று பொருள் கொண்டு நிற்கும் சொல்லணிவகை

**முடித்துக் காட்டல்**
உத்தி முப்பத்திரண்டனுள், மேலோர் முடித்தவாறு முடித்துக் காட்டுவது (நன். 145, உரை)

**முடிந்தது முடித்தல்**
உத்தி முப்பத்திரண்டனுள், முன்னர் விளக்கிக் கிடந்தவற்றைத் தொகுத்துக் கூறுவது (நன். 382, உரை)

**முடிபெழுத்து**
எழுத்து வகைகளுள் ஒன்று (நன். 256, மயிலை.)

**முடிபொருட்டொடர் நிலை**
காண்க : பொருட்டொடர்நிலைச் செய்யுள்: முடி பொருட் டொடர்நிலையுள் தானப்பயன் கூறும் வழி (சிலப். 2, 9, உரை)

**முடிவிடங்கூறல்**
உத்தி முப்பத்திரண்டனுள், தான் சொல்லும் இலக்கணத்திற்கு விதி கூறும் இடத்தைக் குறிப்பது (நன். 97, உரை)

**முடுகியல்**
காண்க: அராகம் (வீரசோ. யாப். 11, உரை)

**முடுகியல் வண்ணம்**
காண்க : முடுகியல் (பிங்.)

**முடுகு வண்ணம்**
அராகந் தொடுத்த அடியொடு பிற அடி சேர்ந்து தொடர்ந் தோடுஞ் சந்தம் (தொல். பொ. 595)

**முடுகு வெண்பா**
சந்த முடுகுள்ள வெண்பா வகை.

**முண்டப்பாட்டு**
மிறைக்கவி வகை (யாப். வி. பக். 510)

**முத்தகம்**
1. தனி நின்று பொருள் முடியுஞ் செய்யுள் (தண்டி. 2)
2. இசைப்பா வகையுள் ஒன்று (சிலப். 6, 35)

**முத்தப் பருவம்**
பிள்ளைத்தமிழ்ப் பருவங்களுள் குழந்தையை முத்தந் தரும் படியாகப் பாடும் பகுதி

**முத்தமிழ்**
இயல், இசை, நாடகம் என்னும் மூவகையான தமிழ் : மும்முரசு முத்தமிழும் (வள்ளுவமா. 10)

**முதல்**
1. ஆதி; தொடக்கம் : முதலூழி யிறுதிக்கண் (சிலப். 8, 1, உரை)
2. இடம் முதலியவற்றில் முதலாயிருப்பது : முதல் நீடும்மே (தொல். எழுத். 458)
3. ஏழாம் வேற்றுமையுருபு (நன். 302)
குணமுதற்றோன்றிய...... மதியின் (மதுரைக். 195)
4. ஐந்தாம் வேற்றுமை யுருபு : "அது முதல் இதுவரை"
5. காண்க : முதற்பொருள்

**முதலக்கரம்**
பன்னீருயிரெழுத்தும் பதினெண் மெய்யெழுத்தும் (சங். அக.)

**முதற் காரண காரியம்**
காரியப்படும் காரணப் பொருள்

**முதற்காரணம்**
காரிய நிகழ்ச்சிக்கு இன்றியமையாத காரணம் (நன். 296, மயிலை)

**முதற்குறை**
1. சொன் முதலில் எழுத்துக் குறைந்து வரும் செய்யுள் விகாரவகை (நன்.156, உரை)
2. காரியத் தொடக்கத்திற்றானேயுள்ள குறை : முதற் குறை முற்றுங்குறை
3. முதலாவதாயுள்ள தேவை

**முதற் சீர்**
ஈரசைச்சீர் (வீரசோ. யாப். 2)

**முதற்பா**
காண்க : முற்பா: நால்வகைப் பாவினுள் முதலாவதாகிய வெண்பா (சூடா.)

**முதற்பெயர்**
அவயவியான முழுப்பொருளைக் குறிக்கும் பெயர் (நன். 281)

**முதற்பொருள்**
1. கடவுள்
2. அகப்பொருட்குரிய நிலம் பொழுதுகளின் இயல்பு (தொல். பொ. 4)
3. மூலதனம் (சங். அக.)

காண்க : முதற்-பெயர் (தொல். சொல். 59, தெய்வச்.)

**முதன்மறிநிலை**
சினைப் பெயர் முதற்கும் முதற்பெயர் சினைக்கும் வரும் அலங்காரம் (யாழ். அக.)

**முதனிலை**
1. முதலில் நிற்பது: முதனிலை மூன்றும் (தொல். சொல். 230)
2. பகுதி (நன். 144, சங்கர.)
3. காரணம் : ஆயெட்டென்ப தொழின் முதனிலையே (தொல். சொல். 112)
4. தலைவாயில்

**முதனிலைத் தீவகம்**

ஒரு சொல் கவியின் முதலில் நின்று குண முதலிய பொருள் குறித்து ஏனையிடத்துஞ் சென்று பொருள் விளக்குந் தீவகவணி வகை (தண்டி. 38)

**முதனிலைத் தொழிற் பெயர்**

தன்னியல்பின் மாறாத வினைப்பகுதியே தொழிற் பெயராக நிற்பது (குறள். 117, உரை)

**முதனிலை திரிந்த தொழிற்பெயர்**

வினைப்பகுதி முதலெழுத்து திரிந்து வருவதனால் தொழிற் பெயராய் நிற்பது

**முதனிலை விளக்கு**

காண்க : முதனிலைத் தீவகம்: ஒரு சொல் கவியின் முதலில் நின்று குணம் முதலிய பொருள் குறித்து ஏனையிடத்துஞ் சென்று பொருள் விளக்குந் தீவகவணி வகை. (தண்டி. 38)

**முதனினைப்பு**

நூல் அல்லது உதாரணப் பாடல்களை நினைப்பூட்டும் அப்பாடல்களின் முதற் குறிப்புச் செய்யுள்: பாட்டின் முதனினைப் பாகுமன்றே (காரிகை. ஒழிபி. ஈற்றுச் செய்யுள்)

**முதனூல்**

1. நூல்வகை மூன்றனுள் பிற நூலைப் பின்பற்றாது இறைவனால் இயற்றப்பெற்றது (தொல். பொ. 649)
2. வழிநூலுக்கு மூலமாகவுள்ள நூல் (நன். 7, விருத்.)

**முதுகாஞ்சி**

1. அறிவின் மிக்க மூத்தோர் அறிவில்லாத இளையோர்க்கு இளமை நிலையாமை முதலியவற்றை எடுத்து மொழியும் புறத்துறை (தொல். பொ. 79, உரை)
2. முதுகாஞ்சித் துறை பற்றிய பிரபந்த வகை. (சது.)

**முதுசொல்**

1. பழமொழி (தொல். பொ. 489)
   காண்க : முதுமொழி
2. சான்றோர் செய்யுட்கள்: செவி செறுவாக முதுமொழி நீரா (கலித். 68)
3. அறிவுரை: முதுமொழி கூற முதல்வன் கேட்டு (மணி. 25, 119)

**முதுபாலை**

கணவனை இழந்த தலைவி காட்டில் தனி நின்று புலம்பு வதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 79)

**முதுமொழி**

1. பழமொழி (தொல். பொ. 489)
2. அறிவுரை: முதுமொழிகூற முதல்வன் சேட்டு (மணி. 25, 119)
3. சான்றோர் செய்யுட்கள்: செவி செறுவாக முதுமொழி நீரா (கலித். 68)
4. வேதம்: முன்னை மரபின் முதுமொழி முதல்வ (பரிபா. 3, 47)

**முதுமொழிக் காஞ்சி**

1. அறிவுடையோர் அறம் பொருளின்பங்களைப் பலரும் அறியச் சொல்லும் புறத்துறை (பு. வெ. 10, காஞ்சிப். 1)
2. பதினென்கீழ்க்கணக்கு ளொன்றானதும் கூடலூர்க் கிழார் இயற்றியதுமான நீதி நூல்

**முதுமொழி வஞ்சி**

மகன் தகப்பனுடைய வீரச்செயலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 13)

**முதுவேனில்**

பருவம், ஆறனுள் ஆனி, ஆடி மாதங்களாகிய கோடைக் காலம் (பிங்.)

**முப்பால்**

1. அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பகுப்புக்கள்
2. திருக்குறள்: வள்ளுவர் முப்பாலாற் றலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு (வள்ளுவ மா. 11)
3. ஆண்பால், பெண்பால், அலிப்பால் என்பன: அத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே (தொல். சொல். 212)

**மும்மடியாகு பெயர்**

கருமையென்று பொருள்படுங் கார் என்பது, மேகத்தை யுணர்த்திப் பின் மழைக்காலத்தை யுணர்த்திப் பின் மழைக் காலத்துப் பயிரை யுணர்த்துவது போல, ஒன்றன் மேலொன்றாக மும்முறை சென்று பொருளுணர்த்தும் ஆகுபெயர்வகை (நன். 290, உரை)

**மும்மணிக் கோவை**

1. பிரபந்தம் 96னுள் அகவலும் வெண்பாவும் கலித்துறையும் முறையே மாறிவர அந்தாதித் தொடையாக பாடப்பெறும் முப்பது பாடல்களையுடைய பிரபந்த வகை (இலக். வி. 815)
2. மூன்று கொத்துள்ள கழுத்தணி வகை

**மும்மணி மாலை**

பிரபந்தம் 96னுள் வெண்பாவும் கலித்துறையும் அகவலும் முறையே மாறிவர அந்தாதித் தொடையாகப் பாடப் பெறும் முப்பது பாடல்களையுடைய பிரபந்தவகை (இலக். வி. 820)

**மும்மலம்**

ஆணவ மலம், கன்ம மலம், மாயா மலம் என்ற மூவகை மலங்கள்: மயக்க மாயமே்தார் மும்மலப் பழவல்வினைக்குள் (திருவாச. 30, 7)

**மும்மை**

1. மூன்றாயிருக்குந் தன்மை (யாழ். அக.)
2. உம்மை, இம்மை, மறுமையாகிய மூவகை நிலைபேறு
3. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று காலங்கள்: எதிர்மறை மும்மையு மேற்கும் (நன். 145)

**மும்மைத் தமிழ்**

1. முத்தமிழ்
2. எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று பகுதிப் பட்ட தமிழ் இலக்கணம் (மாறனலங். சிறப்புப் பாயிரம்)

**முரச வாகை**

அரசனது மாளிகையிற் பலி பெறும் வீர முரசினுடைய தன்மையைக் கூறும் புறத்துறை (பு. வெ. 8, 4)

**முரசவுழிஞை**

பொன்னாலே செய்த உழிஞை மாலை யணிந்து ஆடு வெட்டியிடும் பலியை நுகரும் வீரமுரசின் நிலைமையைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 4)

**முரண் : முரண்டொடை**

தொடை ஐந்தனுள் மொழியானும் பொருளானும் மறு தலைப்படப் பாட்டுத் தொடுப்பது (இலக். வி. 723, உரை)

**முரண்டொடை**
தொடையைந்தனுள் மொழியானும் பொருளானும் மறு தலைப்படப் பாட்டுத் தொடுப்பது (இலக். வி. 723, உரை)

**முரண்மொழி**
1. பொருள் மாறுபடும் சொல்
2. எதிர்மொழி: செய்யுட் குற்றங்களுள் ஒன்று (யாழ். அக.)

**முரண்விளைந்தழிவணி**
மேனோக்கிய மாறுபாடு தோன்றக் கூறும் அணி

**முரண்வினைச் சிலேடை**
மொழியப்பட்ட வினைப்பொருள் முரணச் சிலேடைப் படுத்தும் அணிவகை (மாறனலங். 152)

**முரணணி**
சொல்லேனும் பொருளேனும் முரண அமையும் ஓரலங் காரம் (வீரசோ. அலங். 12)

**முரற்கை**
1. கலிப்பா (தொல். பொ. 382)
2. தாள வகை

**முரற்சி**
பாட்டு: நரம்பின் முரலும் நயம்வரு முரற்சி (மதுரைக். 217)

**முரி**
இசைப்பாவில் இறுதிப் பகுதி (சிலப். 6, 35, உரை)
2. நாடகத் தமிழின் இறுதியில் வரும் சுரிதகம் (தொல். பொ. 444, உரை)

**முரிநிலை**
இயற்பாவில் இறுதியில் பாடுந்தரவு (சிலப். 6, 35, உரை)

**முருகியம்**
குறிஞ்சி நிலத்தில் முருகனுக்குரிய வெறியாட்டுப் பறை (தொல். பொ. 18, உரை)

**முல்லை**
1. ஐந்திணையுள் ஒன்றான முல்லை நிலம் (தொல். பொ. 5)
2. உரிப்பொருளில் ஒன்றாகிய இருத்தல்: முல்லை போன் புறவு (மதுரைக். 285)

**முல்லைப் பண்**
முல்லை நிலத்துக்குரிய பெரும்பண் வகை (திவா.)

**முல்லைச் சூட்டு**
கற்பிற்கறிகுறியாகத் தலையிலணியும் முல்லைப் பூவாலான மாலை : பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார் (சீவக. 624)

**முற்கு**
எழுத்திலா ஒலி : முற்குவீளை முதலியன (தொல். சொல். 1, உரை).

**முற்பா**
நால்வகைப் பாவினுள் முதலாவதாகிய வெண்பா (சூடா.)

**முற்பாற் கிழமை**
பழமையான நட்புரிமை : முற்பாற் கிழமை யின்றி (பெருங். மகத. 18, 25)

**முற்றளபெடை**
அடியின் எல்லாச் சீர்க்கண்ணும் அளபெடை வரத் தொடுப்பது (யாப். வி. 48)



**முற்றாய்தம்**
தன்மாத்திரையிற் குறைதலில்லாத ஆய்தவெழுத்து : முற்றாய்த மெட்டு (நன். 90, விருத்.)

**முற்றியலிகரம்**
தனது மாத்திரையிற் குறையாத இகரம் (யாழ். அக.)

**முற்றியலுகரம்**
தனது மாத்திரையிற் குறையாத உகரம் (நன். 164, விருத்.)

**முற்றியைபு**
அடியின் எல்லாச் சீர்க்கண்ணும் இயைபுவரத் தொடுப்பது (யாப். வி. 48)

**முற்று**
1. முடிவு
2. வினைமுற்று : வினையொடு முடியினும் விளம்பிய முற்று (நன். 333)
3. பூர்ணம் : முற்றிலாதானை முற்றனேயென்று மொழியினுங் கொடுப்பாரிலை (தேவா. 648, 9)

**முற்றுகரம்**
காண்க : முற்றியலுகரம் (நன். 94, உரை)

**முற்றுச்சொல்**
வினைமுற்றாகிய பதம் (திருமுரு. 102, உரை)

**முற்றுத்தொடர் மொழி**
எழுவாயும் பயனிலையும் கொண்டு பொருள் முடிவு பெற்று நிற்கும் வாக்கியம் (யாழ். அக.)

**முற்றுத்தொடை**
அளவடியின் நான்கு சீரிலும் மோனை முதலியன வரத் தொடுத்தல் (இலக். வி. 723, உரை)

**முற்றும்மை**
காண்க: உம்: முற்றும்மை யெரரோவழி யெச்சமு மாகும் (நன். 426)

**முற்று மடக்கு**
ஒரு செய்யுளின் முதலடி முழுதும் பின் மூன்றடிகளாக மடங்கி வரும் சொல்லணி வகை (தண்டி. சொல். 4, உரை)

**முற்று முடுகு வெண்பா**
நான்கடியும் முடுகு சந்தமாக வரும் வெண்பா (சங். அக.)

**முற்றுமுரண்**
அளவடியின் சீர் முழுதும் முரண்வரத் தொடுப்பது (யாப். வி. 48)

**முற்று மோனை**
அளவடியின் எல்லாச் சீர்க்கண்ணும் மோனை வரத் தொடுப்பது (யாப்.வி. 48)

**முற்றுருவகம்**
அவயவமும் அவயவியும் முற்றும் உருவகம் செய்யப்படும் அணி (தண்டி. 35, 13)

**முற்றுவமை**
எல்லாவகையினும் உவமானவுவமேயங்கள் ஒத்து வர அமைக்கும் உவமை

**முற்றுவினை**
வினைமுற்று: முற்றுவினைப் பதமொன்றே (நன். 324)

**முற்றுழிஞை**
திரிபுரங்களை அழித்தபோது சிவபெருமான் சூடிய உழிஞைப் பூமாலையின் சிறப்புரைக்கும் புறத்துறை (பு.வெ. 6, 8)

**முற்றெச்சம்**
எச்சப் பொருளில் வரும் முற்று (நன். 351)

**முற்றெதுகை**
அளவடியின் எல்லாச் சீர்க்கண்ணும் எதுகை வரத் தொடுப்பது (யாப். வி. 48)

**முறை நிரனிறை**
பெயர்களை நிறுத்த முறைக்கேற்ப அவற்றிற்குரிய வினை முதலியவற்றை அடைவே நிறுத்துகை (மாறனலங். 172)

**முறைநிலைப் பெயர்**
காண்க : முறைப் பெயர் (தொல். சொல். 165)
உறவு முறைகாட்டும் பெயர்ச் சொல் (தொல். சொல். 138)

**முறைப் பெயர்**
உறவுமுறை காட்டும் பெயர்ச்சொல் (தொல். சொல். 138)

**முறை பிறழ் வைப்பு**
செய்யுட் குற்றங்களுளொன்று



**முறையின் வைப்பு**
நூலழகு பத்தனுள் எடுத்துக்கொண்ட பொருள்களை வரிசைப்படி வைப்பது (நன். 13)

**முன்பனி**
பருவம் ஆறனுள் இரவின் முற்பகுதியிற் பனிமிகுதியுடைய மார்கழி, தை மாதங்கள் (தொல். பொ. 10, உரை) (பிங்.)

**முன் முடுகு வெண்பா**
முன்னிரண்டடிகள் முடுகிய சந்தங் கொண்டு வரும் வெண்பாவகை

**முன்மொழி**
1. பழமொழி
2. தொகை மொழியில் இரண்டாவதாக வரும் மொழி : முன்மொழி நிலையிலும் (தொல். சொல். 419)

**முன்மொழிந்து கோடல்**
உத்தி முப்பத்திரண்டனுள் பின்னர் அடிக்கடி கூற வேண்டியவற்றை முன்னர் எடுத்துக் கூறும் உத்தி வகை (நன். 14)

**முன் மொழி நிலையல்**
தொகை மொழியுள் இரண்டாவது மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்கை (தொல். சொல். 419)

**முன்தேர்க்குரவை**

வெற்றியடைந்த வேந்தன் வெற்றிக் களிப்பால் தன் தேர்த் தட்டிலே நின்று போர்த் தலைவரோடு கைபிணைந்து ஆடுவதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 76)

**முன்னம்**

1. குறிப்பு : முன்னதா னொன்று குறித்தாய் போற் காட்டினை (கலித். 61)
2. குறிப்புப் பொருள் : முன்னவிலக்கு
3. இம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னாரெனப் படிப்போர் அறியுமாறு செய்யப்படுவதாகிய செய்யுளுறுப்பு (தொல். பொ. 519)
4. கருத்து : முன்ன முகத்தி னுணர்ந்து (புறநா. 3)
5. மனம் (திவா.)

**முன்னவிலக்கு**

குறிப்பினால் ஒன்றனை மறுத்து மேன்மை தோன்றச் சொல்லும் விலக்கணிவகை (தண்டி. 42)

**முன்னிலை**

1. முன்னிற்பவன்-வள்-து : முன்னிலையாக்கல் (தொல். பொ. 101)
2. தன்மை முதலிய மூவிடங்களுள் ஒன்று : உயரீருகிய முன்னிலைக் கிளவியும் (தொல் எழுத். 152)
3. சமூகம் : அவர் முன்னிலையிற் சொல்லியுள்ளேன்
4. வெளிப்படும் இடம் : முன்னிலை தமரேயாக (பெரியபு. அரிவாட்டாய்.)

**முன்னிலைப் படர்க்கை**

முன்னிலைப் பொருளில் வழங்கும் படர்க்கைச் சொல் : எம்பி முன்னிலைப் படர்க்கை (சீவக. 1760, உரை)

**முன்னிலைப் பரவல்**

கடவுளை முன்னிலைப் படுத்திப் புகழுகை (சிலப். 17, பக். 448)

**முன்னிலைப் புறமொழி**

முன்னிலையாக நிற்பாரைக் குறித்துப் பிறனைக் கூறுமாறு போலக் கூறுஞ்சொல் (தொல். பொ. 165, இளம்பூர.)

**முன்னிலைப் பெயர்**

முன்னிலையிடத்து வரும் பெயர்ச்சொல் (தொல். எழுத். 321)

**முன்னிலையசை**
முன்னிலையில் வழங்கும் அசைச்சொல் (புறநா. 40, உரை)

**முன்னுறவுணர்தல்**
தலைவிக்கு முன்னுற்ற களவு நிலையைத் தோழி அறிதலைக் கூறும் அகத்துறை (திருக்கோ. 62, கொளு.)

**முன்னுறு புணர்ச்சி**
காண்க : இயற்கைப் புணர்ச்சி (இறை. 2, பக். 33)

## மூ

**மூதானந்தம்**
1. பேரானந்தம் : மூதானந்த வாரிதியே (அருட்பா. 5, முறையிட்ட. 9)
2. தன் கணவன் இறந்த போதே மனைவி உயிர் நீங்கிய பேரன்பை நினைந்து கண்டோர் கூறும் புறத்துறை (தொல். பொ. 79)

**மூதின் முல்லை**
மறக்குடியிற் பிறந்த ஆடவர்க்கேயன்றி அக்குடியில் உள்ள மகளிர்க்கும் மறமுண்டாதலைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு. வெ. 8, 21)

**மூவசைச்சீர்**
உரிச்சீர் : வெண்பா வினமா நேரசையாலிற்ற மூவசைச் சீர் (காரிகை. உறுப். 6)

**மூவிடம்**
தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூன்று இடங்கள் (பிங்.)

**மூவினம்**
வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மூவகை மெய்யெழுத்து (நன். 236)

**மூவேந்தர்**
சேர சோழ பாண்டியர் ஆகிய மூன்று தமிழ் வேந்தர்கள் : முடியாலுலகாண்ட மூவேந்தர் முன்னே (தேவா. 880, 11)

## மெ

**மெய்க்கீர்த்தி**
1. புகழ்

2. அரசனது புகழ் வரலாறுகளைக் கூறி, அவன் தேவி யுடன் வாழ்க என்று வாழ்த்தி, அவன் இயற்பெய ருடன் ஆட்சி வருடத்தைக் கூறும் பாடல் வகை (பன்னிருபா. 31)

**மெய்க்கீர்த்தி மாலை**

96 பிரபந்தங்களுள் ஒன்றும் அரசனது புகழ்களைக் கூறுவதுமாகிய நூல் வகை (இலக்.வி. 805)

**மெய் தொட்டுப் பயிறல்**

தலைவியின் மனக்குறிப்பை யறிதற் பொருட்டுத் தலைவன் அவளைத் தொட்டுப் பழகுவதைக் கூறும் அகத்துறை (தொல். பொ. 102)

**மெய்ந்நிலை மயக்கம்**

காண்க : மெய்ம்மயக்கம் (நன். 109, மயிலை.); சொற்களில் ஒற்றெழுத்து இயைந்து வருகை (தொல். எழுத். 22, இளம்பூர.)

**மெய்ப்படு பருவம்**

பாளை, பாலன், காளை, இளையோன், முதியோன் என்ற ஐவகை ஆண்மக்கட் பருவம் (பிங்.)

**மெய்ப்பாடு**

நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என எண்வகைப் பட்டதும்; புறத்தார்க் குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுவதுமான உள்ள நிகழ்ச்சிகள் (தொல். பொ. 251)

**மெய்ம்மயக்கம்**

சொற்களில் ஒற்றெழுத்து இயைந்து வருகை (தொல். எழுத். 22, இளம்பூர.)

**மெய்யிறு**

மெய்யெழுத்தை இறுதியில் உள்ள சொல் : மெய்யிறெல் லாம் (தொல். எழுத். 105, இளம்பூர.)

**மெய்யுவமம்**

வடிவு பற்றி வரும் உவமை (தொல். பொ, 276, உரை)

**மெய்யுறு புணர்ச்சி**

சரீரத்திற் கூடுங் கூட்டம் (தொல். பொ. 145, உரை)

**மெய்யெழுத்து**

ஒற்றெழுத்து : உயிரெழுத்திற்கு உடம்பாயிருப்பது (வீரசோ. சந்திப். 1, உரை)

**மெய்வசை**

ஒருவனைப் பற்றி வசை தோன்றக் கூறும் பாட்டுவகை (இலக். வி. 753)

**மெய் வாழ்த்து**

ஒருவனை வாழ்த்திக் கூறும் பாட்டுவகை (இலக். வி. 753)

**மெல்லிசை வண்ணம்**

மெல்லெழுத்து மிகுந்து வரும் சந்தம் (தொல். பொ. 529)

**மெல்லினம்**

மூவினத்துள் மெல்லோசையுடைய எழுத்துக்களின் வர்க்கம் (நன். 69)

**மெல்லெழுத்து**

மெல்லோசையுடைய ங், ஞ், ண், ந், ம்,ன் என்ற எழுத்துக்கள் (தொல். எழுத். 20)

**மெலி—தல்**

1. இனமொத்த மெல்லெழுத்தாக மாறுதல்: குழைத்த வென்பது குழைந்தவென மெலிந்து நின்றது (புறநா. 21, உரை)
2. வலிகுறைதல்

**மெலி—த்தல்**

1. வல்லின வெழுத்தை இனமொத்த மெல்லின வெழுத்தாக மாற்றுதல்: மெலிக்கும் வலி மெலித்தலும் (தொல். சொல். 403)
2. வலி குறைத்தல்
3. உடல் மெலியச் செய்தல்

**மெலித்தல்**

செய்யுள் விகாரம் ஒன்பதனுள், வல்லெழுத்து இன்மெல்லெழுத்தாக மாறும் விகாரம் (நன். 158)

**மென்கணம்**

காண்க : மெல்லினம் (நன். 158, உரை)

மூவினத்துள் மெல்லோசையுடைய எழுத்துக்களின் இனம் (நன். 69)

**மென்றொடர்க் குற்றியலுகரம்**

மெல்லொற்றைத் தொடர்ந்து வரும் குற்றியலுகரம் (நன். 94)

**மென்றொடர் மொழி**

காண்க : மென்றொடர்க் குற்றியலுகரம் (தொல். எழுத். 415)

## மே

**மேகவிடு தூது**

காதலரிடம் மேகத்தைத் தூது விடுவதாகக் கூறும் பிரபந்த வகை : திருநறையூர் நம்பி மேகவிடு தூது

**மேற்கதுவாய்**

காண்க : மேற்கதுவாய்த் தொடை : அளவடியுள் முதலயற் சீர்க்கன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது (இலக். வி. 723, உரை)

**மேற்கதுவாய்த் தொடை**

அளவடியுள் முதலயற் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக் வி. 723, உரை)

**மேற்கோள் மலைவு**

செய்யுட் குற்றங்களுளொன்று (யாப். வி. பக். 525)

## மை

**மை**

1. பண்புப் பெயர் விகுதியுள் ஒன்று
2. தொழிற் பெயர் விகுதியுள் ஒன்று
3. வினையெச்ச விகுதியுள் ஒன்று : ஒற்றொற் றுணராமை யாள்க (குறள். 589)

## மொ

**மொழிச் சாரியை**

இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட எழுத்துக்களால் ஆகிய சாரியை (நன். 252, மயிலை.)

**மொழிந்தது மொழிவு**

காண்க : கூறியது கூறல் (தண்டி. 102)

**மொழி மாற்று**

பொருள்கோ ளெட்டனுள் ஏற்ற பொருளுக்கு இயையு மாறு மொழிகளை மாற்றிப் பொருள் கொள்ளும் முறை (நன். 413)

**மொழியிடை யெழுத்து**

சொல்லின் நடுவில் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாகவும் உடனிலை மெய்ம்மயக்கமாகவும் வரக் கூடிய எழுத்துக்கள்

## மோ

**மோகவுவமை**
பொருண்மேலுள்ள வேட்கையால் உவமானோபமேயங்களை மயங்கக் கூறும் உவமையணி வகை (தண்டி. 30, உரை)

**மோனை**
மோனைத் தொடை : செய்யுட்டொடை ஐந்தனுள் சீர்களின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது (இலக். வி. 723, உரை)

## ய

**யதி**
1. சீரோசை முடியுமிடம் (தண்டி. 110, உரை)
2. மோனை
3. வாசகத்தில் நிறுத்திப் படிக்கும் இடம்

**யதி பிரஷ்டம்**
யதிபங்கம் : யதிவழு : ஓசையறும்வழி நெறிப்பட வாராமல் நிற்பது (தண்டி. 110)

**யதிவழு**
ஓசையறும்வழி நெறிப்பட வாராமல் நிற்பது (தண்டி. 110)

**யதோத்தேசபக்ஷம்**
ஒரு சொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல வோத்துக்களுந் தன் பொருளே நுதலிவரச் செய்வது (நன். எழுத். விருத். அவ.)

**யமகம்**
வந்த எழுத்துக்களே பொருள் வேறுபடச் செய்யுளின் சீர் அல்லது அடிகளிற் பின்னும் வருவதாகிய மடக்கணி (தண்டி. 90, உரை)

**யமகவந்தாதி**
யமகத்தோடு வரும் அந்தாதி : யமக வந்தாதியை வாசிமினே (அஷ்டப். திருவரங். கந்தந். தனியன்)

**யவமத்தியயதி**
இறுதியடிகளைவிட மத்தியிற் பெரிதாயிருக்கும் அடிகளையுடைய பாட்டுவகை

## யா

**யாப்பதிகாரம்**
செய்யுளிலக்கணம் கூறும் நூற்பகுதி (தொல். பொ. 313, பேரா.)

**யாப்பானந்தம்**
பாட்டில் தலைவன் பெயர்க்கு முன்னும் பின்னும் சிறப்புடை மொழியினைப் புணர்த்து இடர்ப்படப் பாடும் ஆனந்தக் குற்றம் (யாப். வி. 96, பக். 522)

**யாப்பிலக்கணம்**
செய்யுளிலக்கணம்

**யாப்பு**
1. கட்டுகை
2. கட்டு : யாப்புடை (யாழ்.—சீவக. 2011)
3. சிறப்புப் பாயிர விலக்கணம் : பதினொன்றனுள் இன்ன நூல் கேட்டபின் இன்னது கேட்கத் தக்க தென்னும் சம்பந்தம் (நன். 49)
4. உறுதி : யாப்புறு மாதவந்து (மணி. பதி. 57)
5. பொருத்தம் : அதற்கு யாப்புடைமையின் (தொல். சொல். 77)

**யாப்பு வழு**
செய்யுட் குற்றங்களுள் ஒன்று

**யாற்று நீர்**
எண்வகைப் பொருள்கோளில் சொற்களை முன் பின்னாக மாற்றாமல் நேராகவே பொருள் கொள்ளும் முறை (நன். உரை. 412)

**யானை கைக்கோள்**
பகைவரை யெறிந்து அவர் யானையையும் காவலையும் கைக்கொண்டதாகக் கூறும் புறத்துறை (பு.வெ. 6, 24)

**யானை மறம்**
அரசனது யானையின் போர் வீரத்தைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 6)

**யானை வென்றி**
ஓர் யானை பிறிதொன்றோடு பொருது வெற்றி பெறுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. ஒழிபு. 8)

## யோ

**யோக்கியதை**

தொடரில் பதங்கள் பொருட் பொருத்தமுற்றிருக்கை (பி.வி. 19, உரை)

2. கல்வி ஒழுக்கம் முதலியவற்றால் வரும் சிறப்பு

3. தகுதி

**யோகவிபாகம்**

ஒரு சூத்திரத்தில் ஒரு பகுதியைத் தனியே பகுத்து வேறு சூத்திரமாக்கிப் 'பொருள் கோடலாகிய நூற்புணர்ப்பு' (தொல். சொல். 11, சேனா.)

## ல

**லுப்தோபமை**

காண்க : தொகையுவமம்

## வ

**வக்கிரோக்தி**

சொன்ன சொற்களுக்கு வெவ்வேறு பொருள் கொண்டு மறுமொழி யுரைப்பதாகிய அணி

**வகுத்துக் காட்டல்**

உத்தி முப்பத்திரண்டனுள் முன் தொகுத்துக் கூறியதைப் பின்னர் முறையே விரித்துக் கூறுவது (நன். 14)

**வகைச் சூத்திரம்**

தொகுத்துச் சொல்லப்பட்டதனை வேறு வேறாக வகுத்துரைக்குஞ் சூத்திரம் (நன். 20)

**வகைநிலைக் கொச்சகம்**

கொச்சக வகை (சீவக. 2514, உரை, பி-ம்.)

**வகைபெறக் காட்டல்**

தொகுத்துரைத்ததை விரித்துக் கூறும் உத்தி வகை (மாறனலங். பாயி. 25)

**வகை முதலடுக்கலங்காரம்**

பலவகையான முதற்பொருள்களை அடை சினை புணராது செய்யுள் முழுதும் அடுக்கிக் கூறுவதாகிய அணி (மாறனலங். 179)

**வகையுளி**
அசை முதலுறுப்புகளைச் சொல் நோக்காது இசைநோக்கி வண்ணமறுக்கை (யாப்.வி. 375) தண்டி. 111)

**வசந்த மாலை**
தென்றலைச் சிறப்பிக்கும் பிரபந்தம் (இலக்.வி. 836)

**வசைக் கவி**
1. வசை கூறும் பாடல்
2. வசை பாடுவோன்

**வஞ்ச நவிற்சி**
ஏதேனும் ஒரு காரணத்தால் நிகழ்ந்த மெய்ப்பாடு முதலிய வற்றை மற்றொரு காரணத்தால் நிகழ்ந்தனவாகக் கூறும் அணி (அணியி. 86)

**வஞ்சப் பழிப்பு**
ஒன்றன் பழிப்பினால் மற்றொன்றன் பழிப்புத் தோன்றக் கூறும் அலங்காரவகை (அணியி. 31)

**வஞ்சப் புகழ்ச்சி**
ஒன்றன் பழிப்பினால் அதன் புகழ்ச்சியேனும் மற்றொன் றன் புகழ்ச்சியேனும், ஒன்றன் புகழ்ச்சியால் அதன் பழிப் பேனும் மற்றொன்றன் பழிப்பேனும் தோன்றக் கூறும் அலங்கார வகை (அணியி. 30)

**வஞ்சனைப் புணர்ப்பு**
இசை கொள்ளா எழுத்துக்களின் மேலே வல்லொற்று வந்த போது மெல்லொற்று போல நெகிழ்த்துப் புணர்க்கை (சிலப். 3, 56, அரும்.)

**வஞ்சி**[1]
காண் : வஞ்சிப்பா : நால்வகைப் பாவினுளொன்று

**வஞ்சி**[2]
1. புறத்திணையுள் மண்கொள்ளப் பகைவர் மேற் செல்வ தைக் கூறுவது (தொல். பொ. 62)
2. அரசன் வஞ்சி மலரைத் தலையிற் சூடிப் பகைவர் நாட்டைக் கொள்ளுமாறு அவர் மேற் செல்லக் கருதி யதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 1)

**வஞ்சிச் சீர்**
காண்க : வஞ்சியுரிச்சீர், தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி என்று நான்கு வகைப்பட்ட

மூவசைச் சீர்கள் : நிரையிறு நான்கும் வஞ்சி யுரிச்சீர் (யாப். வி. 12, பக். 61)

**வஞ்சித் தாழிசை**
இரு சீரடி நான்காய் ஒரு பொருண்மேல் மூன்று செய்யுள் அடுக்கி வரும் வஞ்சிப்பாவினம் (காரிகை. செய். 14)

**வஞ்சித் திணை**
காண்க : வஞ்சி (பு. வெ. 3, உரை); புறத்திணையுள் மண்கொள்ளப் பகைவர் மேற்செல்வதைக் கூறுவது (தொல். பொ. 62)
2. அரசன் வஞ்சி மலரைத் தலையில் சூடிப் பகைவர் நாட்டைக் கொள்ளுமாறு அவர் மேற் செல்லக் கருதி யதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 1)

**வஞ்சித்துறை**
இரு சீரடி நான்காய் ஒரு பொருண்மேல் ஒரு செய்யுள் வருவதாகிய வஞ்சிப்பாவினம் (காரிகை. செய். 14)

**வஞ்சித் தூக்கு**
பரிபாடலில் வஞ்சியடிகளால் வரும் பகுதி (தொல். பொ. 433, உரை)

**வஞ்சி நெடும்பாட்டு**
காண்க : பட்டினப்பாலை (யாப்.வி. 37, உரை)

**வஞ்சிப்பா**
நால்வகைப் பாவினுள் ஒன்று

**வஞ்சியரவம்**
வீரமுரசுடனே யானை முழங்கப் பகைவர் மீது சேனை கோபித்துக் கிளர்வதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 3,2)

**வஞ்சியுரிச்சீர்**
தேமாங்கனி, புளிமாங்கனி, கூவிளங்கனி, கருவிளங்கனி என்று நான்கு வகைப்பட்ட நிரையசையீற்றவான மூவசைச் சீர்கள் : நிரையுறு நான்கும் வஞ்சியுரிச்சீர் (யாப். வி. 12, பக். 61)

**வஞ்சி விருத்தம்**
முச்சீரடி நான்காய் வரும் வஞ்சிப் பாவினம் (காரிகை. செய். 14)

**வஞ்சி வேந்தன்**

1. மண் வேட்கையால் மேற்சென்றேனும் எதிர்த்தேனும் போர் செய்யும் அரசன் (தொல். பொ. 62, உரை)
2. சேரன் (பிங்.)

**வஞ்சினக் காஞ்சி**

மன்னவன் தன் பகைவரைத் தாழப்பண்ண வேண்டி இன்னது செய்தலாற்றேன் ஆயின் இன்னவாறு ஆகக் கடவேன் என்று சபதஞ் செய்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 4, 9)

**வட்டச் சக்கரம்**

சித்திரகவி வகை

**வட்டெழுத்து**

ஒருவகைப் பழைய தமிழெழுத்து

**வடக்கிருத்தல்**

உயிர்த்துறக்குந் துணிவுடன் வடக்கு நோக்கியிருந்து பிராயோபவேச விரதத்தை மேற்கொள்ளுதல்: புறப் புண்ணாணி வடக்கிருந் தோனே (புறநா. 66, 8)

**வடிவவுவமம்**

உருவத்தை ஒப்பித்துக் கூறும் உவமை (யாழ். அக.)

**வண்ணக்களஞ்சியம்**

வண்ணக்கவி பாடுவதில் சமர்த்தன் : வண்ணக்களஞ்சியப் புலவர்

**வண்ணக் குழிப்பு**

வண்ணக் குளிப்பு : வண்ணச் செய்யுளின் சந்த வாய்பாடு

**வண்ணகம்**

காண்க . அராகம் : வருணித்துப் புகழ்கை (தொல். பொ. 452, உரை)

**வண்ணக வொத்தாழிசை**

அராகம் தாழிசை எண் வாரம் என்னும் உறுப்புக்களைச் சிறப்பாக கொண்டு வரும் கலிப்பாவகை (தொல். பொ. 452)

**வண்ணத்தரு**

ஒருவகைப் பாடல் (யாழ். அக.)

**வண்ணம்**

1. பாவின் கண் நிகழும் ஓசை விகற்பம் (தொல். பொ. 313)
2. சந்தப் பாட்டு : வண்ணத்திரட்டு.

**வண்ணவுவமம்**

நிறம் பற்றிக் கூறும் உவமை (தொல். பொ. 276)

**வணக்கம்**

1. மங்களாசரணை மூன்றனுள் நூலின் முகப்பில் தெய்வம் குரு முதலியவர்க்கு வணக்கங் கூறுகை: வாழ்த்தும் வணக்கமும் பொருளியல் புரைத்தலுமென மூவகைப் படும் (சி. போ. பா. மங்க. பக். 1)
2. கீழ்ப்படிகை

**வந்தது கொண்டு வாராததுணர்த்தல்**

பின் ஒரு வழி வந்தது கொண்டு முன் வாராததொரு பொருளை அறிய வைக்கும் தந்திரவுத்தி வகை (தொல். பொ. 666)

**வரகவி**

1. அருட்கவி
2. சிறந்த செய்யுள்: வீரராகவன் வரகவி மாலையை (திரு வேங்கடாச்சலம். தனியன்)

**வரலாற்று வஞ்சி[1]**

பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் தலைவனது குலப் பிறப்பு முதலிய பல சிறப்பையும் கீர்த்தியையும் வஞ்சிப் பாவாற் கூறும் பாடல் வகை

**வரலாற்று வஞ்சி[2]**

போர்க்களத்துச் செல்லும் படையெழுச்சியைக் கூறும் பிர பந்தம் (இலக். வி. 869)

**வரவெதிர்ந்திருத்தல்**

தலைவி தன்னிருப்பிடத்துத் தலைவன் வருகையை எதிர் பார்த்திருத்தலைக் கூறும் புறத்துறை (சங். அக.)

**வரி**

கூத்திற்குரிய வெண்டுறைப் பாட்டுள் ஒருவகை

**வரிதகம்**

முப்பத்திரண்டடியான் வரும் இசைப்பாட்டு (சிலப். 3, 3, உரை, பக். 88)

**வருக்கக் கோவை**

பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் மொழி முதலில் வரும் எழுத்துக்களை அகர முதலாம் எழுத்து முறையே அமைத்துக் கலித்துறைப் பாட்டாக இயற்றும் பிரபந்த வகை (சது.)

**வருக்க மாலை**
பிரபந்தம் தொண்ணூற்றாறனுள், மொழி முதலில் வரும் எழுத்துக்களை அகர முதலான எழுத்து முறையில் பாடலின் தொடக்கவெழுத்துக்களாக அமைத்து இயற்றப் படும் பிரபந்தவகை (சது.)

**வருக்க மோனை**
பாடலடிகளில் முதலெழுத்துக்கள் வருக்கவெழுத்துக்களால் அமையும் மோனை வகை (காரிகை. ஒழிபி. 6, உரை)

**வருக்க வெதுகை**
பாடலடிகளில் ஒரு வருக்கத்தைச் சேர்ந்த எழுத்துக்கள் வரத்தொடுக்கும் எதுகைத் தொடை (காரிகை. ஒழிபி. 6, உரை)

**வருக்க வெழுத்து**
உயிர் அல்லது ஒரு மெய்யின் வருக்கத்தைச் சேர்ந்த எழுத்து (காரிகை. ஒழிபி. 6, உரை)

**வருக்காந்தியம்**
வடமொழியில் ஐவகை மெய்வர்க்கங்களில் ஒவ்வொன்றின் இறுதியாலுமுள்ள மெய்

**வருணப் பொருத்தம்**
பன்னீருயிரும் க ங ச ஞ ட ண என்ற மெய்யாறும் பார்ப் பனச் சாதியும், த ந ப ம ய ர என்ற ஆறும் மன்னர் சாதி யும், ல வ ற ன என்ற நான்கும் வணிகர் சாதியும், ழ ள இரண்டும் சூத்திர சாதியுமாகக் கொண்டு உரியவாறு செய்யுண் முதன் மொழிப் பொருத்தங் கொள்ளுமுறை (வெண்பாப். முதன். 9, 10)

**வருமொழி**
புணர்ந்த இணைச் சொற்களில் இரண்டாவதாய் நிற்குஞ் சொல்: நிலைவரு மொழிக ளியல்பொடு விகாரத் தியை வது புணர்ப்பே (நன். 151)

**வரைபொருட் பிரிதல்**
வரைவிடத்துப் பொருள்வயிற் பிரிதலைக் கூறும் அகப் பொருட் பகுதி (திருக்கோ.)

**வரையா நுகர்ச்சி**
களவுப் புணர்ச்சி: வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி (பரிபா. 8, 41)

**வரைவு கடாதல்**

தலைவியை மணம்புரிந்து கொள்ளுமாறு தோழி தலைமகனை வற்புறுத்தும் அகத்துறை (திருக்கோ. 130)

**வரைவுடன்படுதல்**

தலைவியின் சுற்றத்தார் தலைமகற்கு அவளை மணம் புரிவிக்கச் சம்மதிக்கும் அகத்துறை (கலித். 107, துறைக் குறிப்பு)

**வரைவுமலிதல்**

மண நிகழ்வது பற்றி மகிழ்வுறுதல்: அவன் வரைய வருகின்றமை தோழி தலைவிக்கு வரைவு மலிந்து கூறியது (கலித். 37, துறைக்குறிப்பு)

**வல்லாண் முல்லை**

ஒருவனது குடியையும் பதியையும் இயல்புகளையும் புகழ்ந்து அவனது ஆண்மை பெருகச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு. வெ. 8, 23)

**வல்லிசை வண்ணம்**

வல்லெழுத்து மிக்குப் பயின்று வருஞ் சந்தம் (தொல். பொ. 528)

**வல்லினம்**

க், ச், ட், த், ப், ற் என்ற வல்லோசையுள்ள ஆறு மெய்யெழுத்துக்கள் (நன். 68)

**வல்லினவெதுகை**

எல்லாவடிகளின் முதற்சீர்க்கண்ணும் வல்லெழுத்து எதுகையான் ஒன்றிவரும் தொடை

**வல்லெழுத்து**

காண்க : வல்லினம்: வல்லெழுத்தென்ப கசடதபற (தொல். எழுத். 14)

**வலம்புரி**

1. வலமாகச் சுழிந்திருப்பது: வலம்புரி யாழினை (திவ். பெரியதி. 9,9,9)
2. சிறுவிரலும் பெருவிரலும் நிமிர்ந்து சுட்டு விரலின் அகம் வளைந்து ஒழிந்த இரண்டு விரலும் நிமிர்ந்து இறைஞ்சி நிற்கும் இணையா வினைக்கை

**வலிதல்**

1. மெல்லெழுத்து வல்லெழுத்தாதல் (புறநா. 6, உரை)
2. நேர்வழியிற் பொருள் கொள்ளாது இடர்ப்படுதல்

**வலி-த்தல்**

1. அழுத்தி யுச்சரித்தல்
2. மெல்லெழுத்தை வல்லெழுத்தாக்குதல்: வலிக்கும் வழி வலித்தலும் (தொல். சொல். 403)

**வலித்தல்**

செய்யுள் விகாரம் ஆறனுள் மெல்லொற்றை வல்லொற்றாக மாற்றுகை (நன். 155)

**வலைச்சியார்**

கலம்பக வுறுப்பினுள் தலைவன் ஒரு வலைச்சியிடம் காமக்குறிப்புப்படக் கூறும் பகுதி (குமர. பிர. மதுரைக் கலம். 66)

**வழக்கு**

1. உலக வழக்கு, செய்யுள் வழக்கு என்ற இருவகை வழக்குகள்: வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே (தொல். பொ. 647)
2. இயல்பு வழக்கு, தகுதி வழக்கு என்ற இரு வகை வழக்குகள் (நன். 266, மயிலை.)
3. பழக்க வொழுக்கம்: வாய்மையுடையார் வழக்கு (திரிகடு. 37)
4. நீதி மன்றத்தில் செய்யும் வழக்கு வாதங்கள்

**வழாநிலை**

சொற்கள் அல்லது தொடர்கள் இலக்கண விதியினின்றும் விலகாது அமைகை (நன். 374)

**வழிநடைப்பதம்**

வழி நடக்கும்போது கண்ட காட்சியை வருணித்துப் பாடும் பாட்டு

**வழிநிலைக்காட்சி**

இயற்கைப் புணர்ச்சியை யடுத்த இடந்தலைப் பாட்டில் தலைவன் தலைவியைக் காணுங் காட்சி (தொல். பொ. 16, உரை)

**வழிநூல்**

நூல் மூவகையுள் முதனூலின் முடிபைப் பெரும்பான்மை யொத்துச் சிறுபான்மை மாறுபடும் நூல் (தொல். பொ. 650)

**வழிமுரண்**

ஒரு செய்யுளில் முரண்டொடை மிகுதியாகப் பயில்வது (காரிகை. ஒழிபி. 6, உரை, பக். 157)

**வழிமொழி**

ஒருவகைச் சந்தப்பாட்டு: தமிழ் விரகன் வழிமொழிகள் (தேவா. 149, 12)

**வழிமோனை**

காண்க : அநு மோனை (தொல். சொல். 406, உரை)

**வழியசை**

கலிப்பாவில் வரும் ஓர் உறுப்பு (கலித். 90, உரை)

**வழியெதுகை**

ஒரு செய்யுளில் அடிதோறும் முதன் மூன்று சீர்க்கண்ணும் வரும் எதுகை வகை (காரிகை. ஒழிபி. 6, உரை, பக். 158)

**வழு**

1. தவறு
2. பாவம். வழுவாய் மருங்கற் கழுவாயுமுள் (புறநா. 34)
3. பழிப்புரை : வழுவெனும் பாரேன் (சிலப். 16, 69)
4. திணை பால் முதலியன தத்தம் இலக்கண நெறி மயங்கி வருவதாகிய குற்றம் (நன். 375)

**வழுநிலை**

சொல் முதலியன இலக்கணத் தவறாக வருகை (நன். 374, மயிலை.)

**வழுவமை-த்தல்**

இலக்கண வழுவாயினும் அமைவதாகக் கொள்ளுதல் (தொல், சொல். 31, சேனா.)

**வழுவமைதி**

இலக்கண வழுவாயினும் அமைக என்று கொள்ளுகை (தொல். சொல். 41, சேனா.)

**வழுஉச்சொற் புணர்த்தல்**

நூற்குற்றம் பத்தனுள் பிழையுள்ள சொற்றொடர்களை அமைக்குங் குற்றம் (நன். 12)

**வள்ளி**

1. முருகக் கடவுளுக்கு, மகளிர் மன நெகிழ்ந்து வெறியாடு தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 41)
2. குறிஞ்சி மகளிர் கூத்துவகை (தொல். பொ. 60, உரை)
3. முருகக் கடவுளின் தேவி : குறவர் மடமகள்...வள்ளியொடு (திருமுரு. 101)

**வள்ளிக் கூத்து**

குறிஞ்சி நிலத்து மக்களின் கூத்து வகை (பெரும்பாண். 370, உரை)

**வள்ளை**

வள்ளைப் பாட்டு : மகளிர் நெற்குற்றும்போது ஒரு தலைவனைப் புகழும் பாடல் (சிலப். 29); மனையளகு வள்ளைக் குறங்கும் வளநாட (வள்ளுவமா. 5)

**வளமடல்**

பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் அறம் பொருள் வீடு ஆகியவற்றினும் காமமே சிறந்தது என்று தலைவனது பெயரை எதுகையிலமைத்துங் கலி வெண்பாவாற் பாடும் நூல்வகை (இலக். வி. 856)

**வன்புறை**

1. தலைவியைத் தலைவன் ஆற்றி வற்புறுத்துகை : வன்புறை குறித்தல் (தொல். பொ. 185)
2. தலைவன் பிரிவின்கண் வாயில்கள் தலைவியை ஆற்றுவித்தலைக் கூறும் அகத்துறை (இறை. 53)
3. வற்புறுத்திச் சொல்பவன் : வன்புறையாகிய வயந்தகற் குணர்த்த (பெருங். வத்தவ. 6, 10)

**வன்புறையெதிரழிதல்**

தலைவன் ஆற்றுவித்துப் பிரிந்த பின் தனிமையால் தலைவி வருந்துதலைக் கூறும் அகத்துறை : வன்புறை யெதிரழிந் தார்க்குத் தோழி...கூறியது (கலித். 28, துறை.)

**வன்றொடர்க் குற்றியலுகரம்**

வல்லெழுத்து அடுத்துத் தொடரப் பெற்ற குற்றியலுகரம் (நன். 94)

**வனப்பு**

1. அழகு : செவ்வானத்து வனப்பு (புறநா. 4)
2. இளமை நிறம் (திருமுரு. 17, வேறுரை)
3. பலவுறுப்புந் திரண்ட வழிப் பெறுவதோர் செய்யுளழகு (தொல். பொ. 548)
4. பெருந்தோற்றம் : வனப்பஞ்சான். (ஏலா. 22)

**வனப்பு வண்ணம்**

1. இசைவகை
2. பலவுறுப்புத் திரண்டவழிப் பெறுவதோர் செய்யுளழகு (தொல். பொ. 548)

3. அழகு : செவ்வானத்து வனப்பு (புறநா. 4)
4. பெருந்தோற்றம் : வனப்பஞ்சான் (ஏலாதி. 22)

## வா

**வாக்கியக் கட்டளை**

நன்கு யாத்த சொற்றொடர் : எழுத்தானே கட்டப்பட்ட வாக்கியக் கட்டளைக் கூறுபாடுகளும் (சிலப். 3, 45, உரை, பக். 108)

**வாக்கியம்**

1. சொல் : பிதுர் வாக்கியம்
2. எழுவாய் பயனிலை முதலியவற்றாற் பொருள் நிரம்பிய சொற்றொடர்
3. மேற்கோள் : வாக்கியஞ் சொல்லி யாதொடும் வகை யலாவகை செய்யன்மின் (தேவா. 999, 10)

**வாகை**

1. வெற்றியாளர் அணியும் மாலை (பிங்.) : இலைபுனை வாகைசூடி (பு.வெ. 8,1, கொளு.)
2. வெற்றி : வாக்கும் வாகையும் வண்மையு மாறிலான் (இரகு. யாகப். 38)
3. பகையரசரைக் கொன்று வாகைப்பூச் சூடி வெற்றியா லாரவாரிப்பதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8,1)
4. நான்கு வருணத்தாரும் முனிவரும் பிறரும் தத்தங் கூறுபாடுகளை மிகுதிப் படுத்தலைக் கூறும் திணை (தொல். பொ. 74)
5. நல்லொழுக்கம்
6. ஈகை
7. மிகுதி
8. பண்பு

**வாகைமாலை**

1. போர் கல்வி கேள்வி கொடைகளில் வென்றோர் அணியும் மாலை (பிங்.)
2. பிரபந்தம் தொண்ணூற்றாறனுள், வீரனது வெற்றியைப் புகழ்ந்து பாடும் பிரபந்த வகை

**வாகையரவம்**

வெற்றிக் குறியாக வெள்ளை மாலை வீரக்கழல் செங்கச்சு முதலியவற்றை வீரர் அணிதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 8,2)

**வாசகம்**

வார்த்தை : சிறியோர்க் கருளிய வுயர்மொழி வாசகம் (பெருங். வத்தல். 13, 116)

2. சொற்றொடர் : வடமொழி வாசகஞ் செய்த நல்லேடு (சிலப். 15, 58)

3. வாய்பாடு

**வாடைப்பாசறை**

பாசறைக்கண் வீரர்தம் காதன் மகளிரை நினைந்து துயருறும்படிச் செய்கின்ற வாடைக் காற்றின் மிகுதியைக் கூறும் புறத்துறை (பு. வெ. 8, 16)

**வாண்மங்கலம்**

1. பகையரசரை வென்ற வேந்தன் தன் வாளினைக் கொற்றவை மேல் நிறுத்தி நீராட்டுதலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 68, உரை)

2. வீரனது வாள் வென்றியாற் பசிப்பிணி தீர்ந்த பேய்ச் சுற்றம் அவன் வாளினை வாழ்த்துதலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 91)

**வாண்மண்ணுநிலை**

தீர்த்த நீராலே மஞ்சனமாட்டிய அரசவாளின் வீரத்தைக் கூறும் புறத்துறை (பு.வெ. 6, 27)

**வாணாட்கோள்**

பகைவனது அரணைக் கொள்ள நினைத்து வாளைப் புறவீடு விடுவதைக் கூறும் புறத்துறை (பு.வெ. 6,3)

**வாணிக வென்றி**

வாணிகத்தாற் சிறப்பெய்திய வணிகன், தனது பொருளில் பற்றிலனாய்ப், பிறர் மிடியை நீக்கும் பெருந்தன்மையை எடுத்துக் கூறும் புறத்துறை (பு.வெ. 12, ஒழிபு. 2)

**வாணிலை**

பகைமேற் படையெடுத்தலை விரும்பி வேந்தன் வாளைப் புறவீடு விடுவதைக் கூறும் புறத்துறை (பு. வெ. 3, 4)

**வாயில்**

1. தலைவனையும் தலைவியையும் இடைநின்று கூட்டுந் தூது : வருந்தொழிற் கருமை வாயில் கூறினும் (தொல். பொ. 111)

2. ஐம்பொறி (பிங்.)

3. ஐம்புலன் (பொரு. நி.)
4. வழி : புகழ்குறை படூஉம் வாயில் (புறநா. 196)

**வாயில் வேண்டல்**
தலைவனுக்கு முகங்கொடுக்குமாறு தலைவியைப் பாணன் முதலிய தூதுவர் வேண்டிக் கொள்வதைக் கூறும் அகப் பொருட்டுறை (நம்பியகப். 95)

**வாயிலிற்கூட்டம்**
பாணன் முதலியோராற் கூடும் தலைவன் தலைவியரின் சேர்க்கை (இலக். வி. 424)

**வாயிற் கூத்து**
கூத்து வகை : வாயிற் கூத்துஞ் சேரிப் பாடலும் (பெருங். உஞ்சைக். 37, 88)

**வாயின் மறுத்தல்**
தூது வந்த பாணன் முதலியவர்க்குத் தலைவி முகங் கொடுக்க மறுத்தலைக் கூறும் அகத்துறை (தொல். பொ. 3, உரை)

**வாயினிலை**
அரசனிடத்துத் தன் வரவு கூறுமாறு வாயில் காப்போனுக்குப் புலவன் சொல்வதாகக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 2)

**வாயினேர்வித்தல்**
தலைவியிடம் தூது செல்லுமாறு தலைவன் தூதுவரை உடன்படுத்துவதைக் கூறும் அகத்துறை (நம்பியகப். 96)

**வாயுகணம்**
செய்யுட்கண மெட்டனுள், நூலின் முதற்சீராக அமைக்கத் தகாததும் நேர் நேர் நிரை என்னும் வாய்பாடுடையதுமாகிய கணம் (இலக். வி. 800, உரை)

**வாயுறை வாழ்த்து**
1. தலைவன் வேண்டானாயினும் அவற்கு உறுதி மொழிகளைச் சான்றோர் கூறும் புறத்துறை (தொல். பொ. 90)
2. பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் ஒன்று

**வார்த்தை**
காண்க ; சொற்பின் வருநிலை

**வாரம்**

1. சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைய இசைப் பாட்டு (சிலப். 3, 67, அரும்.)
2. கலிப்பாவுறுப்புக்களுளொன்று (தொல். பொ. 464)
3. பின்பாட்டு : தோரிய மடந்தை வாரம் பாடலும் (சிலப். 6, 19)
4. தெய்வப் பாடல் : வாரமிரண்டும் வரிசையிற் பாட (சிலப். 3, 136)

**வாரம் பாடுதல்**

பின்பாட்டுப் பாடுதல் : வாரம் பாடுந் தோரிய மடந்தையும் (சிலப். 14, 155)

**வாரம் படுதல்**

ஒருபாற்கோடல் அல்லது பட்சபாதமுறுதல் : வாரம் பட்டுழித் தீயவு நல்லவாம் (சீவக. 888)

**வாராததனால் வந்தது முடித்தல்**

ஒரு பொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் நிரம்ப வாராததோர் சூத்திரத்தானே அங்ஙனம் வந்த பொருண் மைக்கு வேண்டும் முடிபு கொள்ளும் தந்திரவுத்தி வகை (தொல். பொ. 666)

**வாரானை-பருவம்**

பிள்ளைத்தமிழில் ஆண் அல்லது பெண் குழந்தையைத் தன்னிடம் வருக என்று தாய் முதலியோர் அழைப்பதைக் கூறும் பருவம் (பிங்.); மாற்றரிய முத்தமே, வாரானை (வச்சணந். செய். 8)

**வாவன் ஞாற்று**

சித்திரகவி வகை (பிங்.)

**வாழ்த்தணி**

இன்னார்க்கு இன்ன நன்மை இயைகவென்று முன்னியது விரிக்கும் அலங்கார வகை (தண்டி. 86, தலைப்பு)

**வாழ்த்தியல்**

தலைவனைப் புலவன் வாழ்த்தும் புறத்துறை (புறநா. 2, துறைக்குறிப்பு)

**வாழ்த்து**

1. ஆசி

2. துதி : அவனுயிரை மாய்த்தானை வாழ்த்தேவலி (திவ். இயற். பெரியதிரு. வங். 40)
3. நூலின் தொடக்கத்துக் கூறப்படும் மங்களாசரணை மூன்றனும் கடவுளை வாழ்த்துகை : வாழ்த்து வணக்கம் வருபொருளிவற்றினொன்று ஏற்புடைத் தாகி (தண்டி. 7; தொல். பொ. 421, உரை)

**வாழி**

1. 'வாழ்க' என்னும் பொருளில் வரும் வியங்கோட் சொல் (நன். 168); தடமலர்த்தாள் வாழி (திருவாச. 24, 6)
2. ஓர் அசைச்சொல் (சூடா. 10, 16)

**வாள் செலவு**

எதிர்த்து வந்த அரசனது பொருபடையிடத்து எதிரூன்றும் வேந்தன் தன் அரசவாளை முன்னதாக விடுத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 4, 7)

## வி

**விகற்பத்தின் முடித்தல்**

உத்தி முப்பத்திரண்டனுள் விளங்குதற் பொருட்டுப் பல திறப்பட்டாற் பொருளை முடித்துக் காட்டும் உத்தி வகை (நன். பொது. 4)

**விகற்ப நடை**

மிறைக்கவி வகை (பிங்.)

**விகற்பம்**

1. வேறுபாடு
2. ஓர் இலக்கண விதி ஒருகால் வந்து ஒருகால் வாராமை : அவ்வழி இஐ முன்னராயின் இயல்பும் மிகலும் விகற்பமுமாகும் (நன். 176)

**விகற்பித்தல்**

1. ஓர் இலக்கண விதி ஒருகால் வந்து ஒருகால் வாரா திருத்தல் : கிளி குறிது, கிளிக்குறிது; தினை குறிது, தினைக் குறிது என விகற்பித்தன (நன். 176, விருத்.)
2. பகுத்தறிதல்
3. வேறுபடுத்தல் : ஒரு பொருளை விகற்பித்தறியும் துணையான் அறியுமாறில்லை (இறை. 23, பக். 116)

**விகாரப் புணர்ச்சி**

நிலைமொழி வருமொழிகளின் முதலிடை கடைகளில் வரும் தோன்றல் திரிதல் கெடுதல்களாகிய சந்தி வேறுபாடு (நன். 154)

**விகாரம்**

1. புணர்ச்சியில் வரும் தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய விகாரங்கள் (நன்.)
2. வேறுபாடு: விலங்கிய விகாரப்பாட்டின் (கம்பரா. கடறாவு. கடவுள்பா.)
3. மனக்கலக்கம்
4. காம விகாரம் (யாழ். அக.)
5. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பு, அசூயை என எண்வகைப்பட்ட துர்க்குணம்

**விகார வுவமை**

உவமானத்தின் வேறுபாடே உபமேயமென்று சொல்லும் உவமையணிவகை (தண்டி. 30, 17)

**விகாரியம்**

வேறுபடுக்கப்படுவதாகிய செயப்படுபொருள் (பி.வி. 12)

**விகுதி**

பகுபதவுறுப்பினுள் இறுதி நிலையான வுறுப்பு (நன். 133)

**விசாரதம்**

பிராசமுள்ள நான்கடிச் செய்யுள் வகை

**விசேடம்**

1. காரிய சித்திக்கு வேண்டுவனவாகிய குணம், தொழில் முதலியன குறைவுபடுதல். காரணமாக ஒரு பொருளை மேம்பாடு தோன்றக் கூறும் அணிவகை (தண்டி. 77)
2. பதவுரையைச் சிறப்பாகவன்றி வேண்டுவன தந்துரைக்கும் உரைவகை: வினாவிடை விசேடம். (நன். 21)
3. சிறப்பு: மெய்பெறு விசேடம் வியந்தன னிருப்ப (பெருங். மகத. 14, 102)

**விசேடியம்**

அடையடுத்தது: நிலகுண விசேட மொடுற்பல விசேடியத் தான் (வேதா. சூ. 104)

**விசேடோக்தியலங்காரம்**

காண்க : காரணவாராய்ச்சி : காரணம் குறைவின்றி யிருந்தும் காரியம் பிறவாமையைச் சொல்லும் அணி (அணியி. 35)

**விட்டடி**

படித்து நிறுத்திய பாட்டின் இறுதியடி : விட்டடியும் தொட்டடியும் அவனுக்குத் தெரியாது

**விட்டதுறை**

முன்னிகழ்த்திய பேச்சு, செயல் முதலியவற்றில் நிறுத்தி வைத்த இடம்

**விட்டவாக்கச்சொல்**

விட்ட விலக்கணையாக வரும் சொல் (யாழ். அக.)

**விட்டவிலக்கணை**

இலக்கணை மூன்றனுள் சொல்லப்பட்ட வாசகத்தின் பொருளை இயைபின்மையாற்கைவிட்டு, அவ்வாசகத்திற்கு வேறு பொருள் கொள்ளுமாறு நிற்பது (இலக். அக.; நன். 269, விருத்.)

**விட்டிசை**

1. அசையுள் எழுத்து முதலியன பிரிந்திசைக்கை (தொல். பொ. 411, உரை, பக். 340
2. பாட்டில் வருந் தனிச்சொல் : (காரிகை. செய். 10; உரை)

**விட்டிசைத்தல்**

அசை முதலியன பிரிந்திசைத்தல் : விட்டிசைத்து வந்த குற்றெழுத்து நேரசையாம் (காரிகை. ஒழிபி. 2, பக். 138, உரை)

**விட்டும் விடாத வாக்கச்சொல்**

விட்டும் விடாத விலக்கணையாக வருஞ்சொல் (யாழ். அக.)

**விட்டும் விடாத விலக்கணை**

இலக்கணை மூன்றனுள், ஒரு வாசகத்திலே ஒரு பாகத்தின் பொருளை விட்டு மற்றைப் பாகத்தின் பொருள் இயைபு பெற நிற்கும் இலக்கணை (வேதா. சூ 119) (இலக். அக.)

**விடாத வாக்கச்சொல்**

விடாத விலக்கணையாக வரும் சொல் (யாழ். அக.)

**விடாத விலக்கணை**

இலக்கணை மூன்றனுள், வாசகத்தின் பொருட்கும் இயை புற நிற்கும் இலக்கணை (வேதா, சூ. 120; இலக். அக.)

**வித்தார கவி**

1. கவி நான்கனுள் விரிவாகப் பாடும் பிரபந்தம் (பிங்.)
2. வித்தாரகவி பாடுவோன்

**வித்தாரம்**

கவி நான்கனுள் விரிவாகப் பாடும் பிரபந்தம் (பிங்.)

**வித்தைக் கவி**

செய்யுளிலக்கணம் முதலியன கற்றுக் கவி பாடுவோன்

**விதப்பு விதி**

சிறப்பு விதி (நன். 165, சங்கரநமச்.)

**விதலை யாப்பு**

செய்யுளின் முதலும் இடையும் கடையும் பொருள் கொள்ளுமுறை (இறை. 56, உரை)

**விதிச் சூத்திரம்**

இன்னதற்கு இதுவாம் என்று முன்னில்லாததை மொழியுஞ் சூத்திரம் (யாப்.வி. பாயி. பக். 11)

**விதிப் பிரயோகம்**

சூத்திரங்களை உரிய இடங்களில் உபயோகிக்கை (யாழ். அக.)

**விதி விலக்கு**

1. விதித்தலும் விலக்கலும்
2. விதிக்கு விலக்கைக் கூறும் சூத்திரம்

**விதூடக் கூத்து**

நகை விளைக்கும் ஒருவகைக் கூத்து (சிலப். 3, 12, உரை)

**விபரீத வுவமை**

தொன்றுதொட்டு வரும் உவமானத்தை உவமேயமாக்கி உவமேயத்தை உவமானமாக்கிச் சொல்லும் அணிவகை (தண்டி. 30)

**விபாக யோகம்**

பிரிந்துள்ள சூத்திரம் முதலியவற்றை ஒன்றாகக் கூட்டுகை: யோக விபாகம் விபாக யோக மென்று முறைமைகள் அறிந்து கொள்ள மாட்டாமையின் அவ்வாறு குழறினர் (சித். மரபுகண். 11)

**விபாவனை**

1. பிரசித்தமான காரணமின்றியே காரியம் பிறந்ததாகச் சொல்லும் அணிவகை (தண்டி. 59)
2. பார்வதி (கூர்மபு. திருக்கலியாண. 22)

**விம்பப் பிரதிவிம்ப பாவம்**

ஒரு உருவமும் அதன் பிரதி பிம்பமும் போல வேற்றுமைப் பட்டிருந்தும் ஒன்றாயிருக்கும் தன்மை (அணியி.18, பக். 13)

**வியங்கியம்**

1. குறிப்புப் பொருள் (நன். 269, விருத்.)
2. குத்தலான வார்த்தை

**வியங்கோள்**

1. ஏவல் (சூடா.)
2. வினை முற்று வகை : முன்னிலை வியங்கோள் வினை யெஞ்சு கிளவி (தொல். சொல். 224)

**வியஞ்சனம்**

1. மெய்யெழுத்து : மெய்கள் விளம்பு மல்லொடு வியஞ் சனமாம் (பி. வி. 4)
2. குறிப்பிற் பொருளுணர்த்தும் சொல்லினது ஆற்றல்
3. அடையாளம் (சங். அக.)

**வியஞ்சனா விருத்தி**

குறிப்பாற் பொருளுணர்த்தும் சொல்லின் ஆற்றல் (பி.வி. 50, உரை)

**வியதிரேகம்**

1. வேறுபாடு; 2. எதிர்மறை; 3. வேற்றுமையணி (தண்டி. 47, பக். 88)

**வியறிலை யுருவகம்**

அவயவியை உருவகஞ் செய்தும் அவயவங்களும் சிலவற்றைச் செய்யாது விடுத்தும் வரும் அணிவகை (தண்டி. 35, 6)

**வியப்பு**

1. அதிசயம் : வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர் (மதுரைக். 764)
2. ஒரு பயனைக் கருதி அதற்கு மாறாகிய முயற்சி செய்வ தாகக் கூறும் அணி (அணியி. 40)
3. மேம்பாடு : சால்பும் வியப்பு மியல்புங் குன்றின் (குறிஞ்சிப். 15)

**வியபதேசம்**

1. மாட்டேற்று (பி. வி. 37); 2. சாட்டு (யாழ். அக.); 3. தந்திரம் (யாழ். அக.); 4. வியாஜ்யம்

**வியனிலை மருட்பா**

வெண்பாவடியும் ஆசிரியவடியும் ஒவ்வாது வரும் மருட்பா வகை (இலக். வி. 749, உரை)

**வியனிலை பகுதி**

முச்சீரடி வஞ்சிப்பா (தொல். பொ. 350, உரை)

**வியாச நிந்தை**

1. நிந்திப்பது போலப் புகழ்வதான அணி (யாழ். அக.)
2. வஞ்சப் பழிப்பு (அணியி. 31)

**வியாயோகம்**

ரூபகம் பத்தனுள் காமமும் ஆசியமும் நீக்கித் தலைவனது வீரச்செயலைக் கூறும் ஓரங்கமுடைய நாடக வகை (சிலப். பக். 84, கீழ்க்குறிப்பு)

**விரவியல்**

1. வடவெழுத்து விரவி வரும் சொல் : இடையே வட வெழுத் தெய்தில் விரவியல் (வீரசோ. அலங். 40)
2. சங்கீரணம்

**விரவுத்திணை**

உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாக வருஞ் சொல்லின் திணை (யாழ். அக.)

**விரவுப்பெயர்**

பொதுப் பெயர் : விரவுப் பெயரின் விரிந்து நின்றும் (நன். 255)

**விராட்டு**

1. ஓரடியுள் இரண்டெழுத்துக் குறைந்து சீரொத்து வரும் செய்யுள் (யாப்.வி. பக். 482)
2. பிரபஞ்ச ரூபமான பரப்பிரமம் : அண்டமாய் விளங்கிய விராட்டுமாம் புருடன் (பாகவத. 1, மாயா வமி. 23)

**விராமம்**

காண்க : தூக்கு; 2. யதி

**விராவலங்காரம்**

காண்க : சங்கீரணம் (வீரசோ. அலங். 34, உரை); கலவை யணி (தண்டி. 87)

2. கலப்பு

**விரி-தல்**

1. பரத்தல் : விரிமுக விசும்பு (சீவக. 329)

2. மலர்தல் : மணத்துடன் விரிந்த கைதை (கல்லா. 2)
3. தொக்க வேற்றுமையுருபு முதலியன வெளிப்பட விரிதல்
4. முற்றுதல்

**விரித்தல்**

1. செய்யுள் விகாரம் ஒன்பதனுள், சொல்லிடையே எழுத்துத் தோன்றுவது (நன். 155)
2. நூல் யாப்பு நான்கனுள், முன்னூலிற் றொகுத்துக் கூறப்பட்டதனை விளங்குமாறு விரித்துக் கூறுவது (தொல். பொ. 652)

**விரிமுரண்**

ஒருவகை இசைப்பா (சிலப். 6, 35, உரை)

**விரியுருவகம்**

காண்க : முற்றுருவகம் (தண்டி. 35)

**விரியுவமம்**

பொதுத் தன்மை விரிந்து நிற்றலுடைய உவமை (தண்டி.30)

**விருத்தக் கலித்துறை**

கலித்துறைப் பாவகை (சீவக. 1, உரை)

**விருத்தகந்தி**

செய்யுட் கதியிற் பெரும்பாலும் பயின்றுவரும் வசனம் (இலக். அக.)

**விருத்த கவிதை**

காண்க : வித்தார கவி (திவா.)
கவி நான்கனுள் விரிவாகப் பாடும் பிரபந்தம் (பிங்.)

**விருத்த நடை**

வேற்றிசைப்பா (திவா.)

**விருத்தம்**

1. பாவினம் மூன்றனுள் ஒன்று (யாப். வி. 56)
2. ஒழுக்கம் : விருத்தமா தவரை நோக்கி முறுவலன் விளம்ப வற்றான் (கம்பரா. கங்கை 41)
3. ஒரு சிற்ப நூல்.

**விருத்த விலக்கணம்**

பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் அரசனது வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை இவ்வொன்பதனையும் பப்பத்து விருத்தத்தால் ஒன்பது வகையுறப் புகழ்ந்து பாடும் பிரபந்தம் (சது.)

**விருத்த சந்தி**

அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் ஏகார ஐகாரங்களில் ஒன்று வந்தால் ஐகாரமாகவும் ஓகார ஔகாரங்களில் ஒன்று வந்தால் ஔகாரமாகவும் மாறும் வடமொழிச் சந்தி

**விருந்து**

1. புதுமை: விருந்துபுவயர (பரிபா. 6, 40)
2. நூலுக்குரிய எண்வகை வனப்புக்களுள் ஒன்று (தொல். பொ. 551)
3. அத்தி முதலியோர்க்கு உணவளித்துபசரிக்கை: யாது செய்வேன் கொல் விருந்து (குறள். 1211)

**விருபக உருவகம்**

ஒரு பொருட்குக் கூடாத தன்மைகள் பலவுங் கூட்டிச் செய்யும் உருவகம் (தண்டி. 35, 8)

**விரைசொல்**

விரைவைக் குறிக்கும் அடுக்குச் சொல்: விரைசொல் லடுக்கே மூன்று வரம்பாகும் (தொல். சொல். 424)

**விரோதச் சிலேடை**

முன்னர்ச் சிலேடிக்கப்பட்ட பொருள்களுள் ஒன்று பின்னர் வரும் பொருள்களோடு விரோதிப்பத் தொடுக்கப்படும் சிலேடை (தண்டி. 75, 6)

**விரோதவணி**

சொல்லாலாவது பொருளாலாவது மாறுபட்டுத் தன்மை தோன்ற உரைக்கும் அணி (தண்டி. 80)

**விரோதவுவமை**

உவமான உவமேயங்கள் தம்முள் விரோத குணமுடையன வாகச் சொல்லும் உவமை வகை (தண்டி. 31, 4)

**விலக்கணி**

காண்க: 1. முன்னவிலக்கு (தண்டி. 43)
2. பிரசித்தமான விலக்கை ஒரு விசேஷ அபிப்பிராயத் தோடு சொல்லுவதாகிய அணி (அணியி. 98)

**விலக்கியற் கூத்து**

ஒருவகைக் கூத்து (தொல். பொ. 91, உரை)

**விலக்கியற் சூத்திரம்**

பொது வகையான் விதிக்கப்பட்டதனை அவ்வகையாகா தென்பது குறிக்கும் சூத்திரம் (யாப். வி. பாயி. 1, பக். 11)

**விலக்குருவகம்**

உருவகிக்கப்பட்ட பொருளினிடத்து அத்தன்மையில்லை யென்ற விலக்கோடு கூடிவரும் உருவக வணி (தண்டி. 36, உரை)

**விலக்குவமை**

உபமேயத்திற்கு உயர்வு தோன்ற உபமானத்திலே ஒப்புமைக்கு விலக்காயுள்ள சில தன்மைகள் புலப்படக் கூறும் அணிவகை (தண்டி. 31, உரை)

**விலக்குறுப்பு**
நாடகவுறுப்புவகை (அபி. சிந்.)

**விலங்கல்**
காண்க : பிரசயம். சுவரிதத்தையடுத்த அநுதாத்தங்களைச் சேர்த்துக் கூறும்போது உள்ள ஸ்வரம் (பி. வ. 40, உரை)

**விலங்கு**
உயிர்மெய்யெழுத்துக்களில் இ, ஈ, உ, ஊ, முதலிய உயிர் களைக் குறிக்கும் அடையாளமாக மேலுங் கீழுமுள்ள வளைவு (தொல். எழுத். 17, உரை)

**விழுமியது பயத்தல்**
நூலழகு பத்தனுள் சீரிய பொருளை யுணர்த்தலாகிய அழகு (நன். 13)

**விளக்குநிலை**

1. அரசனது கோலோடு விளக்கும் ஒன்று பட்டோங்கு வதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 90)
2. வலமாகத் திரியா நிற்கும் விளக்கு அரசனது வெற்றி யைக் காட்டுவதாகக் கூறும் புறத்துறை (பு.வெ. 9,12)

**விளச்சீர்**
நிரையசையில் முடியும் இயற்சீர் (யாப். வி.)

**விற்பாட்டு**
விற்போன்ற இசைக் கருவியை யொலிக்கச் செய்து கதை தழுவிப் பாடும் பாட்டு

**விற்பூட்டு**
விற்பூட்டுப் பொருள் : விற்பூட்டுப் பொருள்கோள்
காண்க : பூட்டுவிற் பொருள்கோள்

**விற்பூட்டுப் பொருள்கோள்**
பூட்டுவிற் பொருள்கோள்

**விறல்கோளணி**
பகை அல்லது அதன் துணையின் மேற் செலுத்தும் பராக் கிரமத்தைக் கூறும் அணிவகை (அணியி. 58)

**விறலி**

1. உள்ளக்குறிப்புப் புறத்து வெளிப்பட ஆடுபவள் (தொல். பொ. 91)
2. பாண் சாதிப்பெண் (பிங்.)
3. பதினாறு வயதுப் பெண் (யாழ். அக.)

**விறலியாற்றுப்படை**
அரசன்பாற் பரிசில் பெற்ற ஒரு விறலி பரிசில் பெற விரும்பும் விறலியை அவன்பால் ஆற்றுப் படுத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 9, பாடாண். 31)

**விறலிவிடு தூது**

தூர்த்தனாய்த் திரிந்த ஒருவன் தான் கழிந்ததற் கிரங்கிப் பின் ஓர் தலைவனையடுத்துப் பரிசில் பெற்றுத் தன் மனைவிபால் ஒரு விறலியைத் தூது அனுப்புவதாகக் கூறும் பிரபந்தம்

**வினா**

அறியான் வினா, ஐய வினா, அறிவொப்புக் காண்டல் வினா, அவனறிவுதான் காண்டல் வினா, மெய்யவற்குக் காட்டல் வினா என ஐவகையாகவும் (தொல். சொல். 13, இளம்.); அறியான் வினா, ஐய வினா, அறிபொருள் வினா என மூவகையாகவும் (தொல். சொல். 13, சேனா.); அறி வினா, அறியான் வினா, ஐயவினா, கொளல் வினா, கொடை வினா, ஏவல் வினா என அறுவகையாவும் (நன். 385, உரை) இலக்கண நூல்களிற் கூறப்படும் கேள்விகள்.

**வினாக் குறிப்பு**

வினாவுடன் குறிப்பு முற்றுப் பொருளதாய் வருஞ் சொல்: எவன், யாது?

**வினாதலிறை**

வினா வடிவமான உத்தரம் (நன். 386)

**வினாப் பெயர்**

வினாவெழுத்தி னடியாகப் பிறந்த பெயர்ச்சொல் (நேமிநா. சொல். 31)

**வினா முதற்சொல்**

வினா வெழுத்தை முதலிற் பெற்று வந்துள்ள சொல் (தக்க யாகப். 585, உரை)

**வினாவழு**

வினாவைப் பொருளியைபில்லாதபடி வழங்குகை (தொல் சொல். 14, சேனா.)

**வினாவழுவமைதி**

வினா வழுவை ஆமென்று அமைத்துக் கொள்வது (தொல். சொல். 14, சேனா.)

**வினாவுத்திரம்**

ஒரு பொருளைக் காட்டும் ஒரு மொழியினைப் பிரித்து ஒருவனுடைய பல்வேறு வகை வினாவிற்கும் விடையாகு மாறு அமைக்குஞ் சொல்லணி வகை (மாறனலங். 280) (பிங்.)

**வினாவெதிர் வினாதல்**

ஒருவனது வினாவுக்கு எதிர்வினா ரூபமாகக் கூறும் உத்தரம் (தொல். சொல். 14, இளம்.)

**வினாவெழுத்து**

சொல்லின் முதலில் அல்லது இறுதியில் வந்து வினாப் பொருளைத் தரும் எழுத்து (நன். 67)

**வினை**

1. தொழில் : செய்திரங்கா வினை (புறநா. 10)
2. நல்வினை தீவினை என இருவகைப்பட்ட பூருவ கருமம்: இருள் சேர் இருவினையும் சேரா (குறள். 5)
3. வினைச் சொல் (தொல். சொல். 198)
4. மேற் கொண்ட செயல் : வினை வகை யென்றிரண்டி னெச்சம் (குறள். 674)

**வினைக் குறிப்பு**

குறிப்புவினை (நன். 321, உரை)

**வினைக்குறிப்பு முற்று**

குறிப்பு வினை முற்றாய் வருவது (புறநா. 68, உரை)

**வினைச் செவ்வெண்**

தொடர்ந்து வரும் வினையெச்சங்களில் எண்ணிடைச் சொல் தொக்கு வருவது (நன். 429, மயிலை.)

**வினை செய்யிடம்**

ஒரு வினை உடனிகழ்கின்ற பிறிதொரு வினைக்கு இடமாவது (பி.வி. 16)

**வினைச் சொல்**

பொருளின் புடை பெயர்ச்சியைத் தெரிவிக்குஞ் சொல் (நன். 269)

**வினைத் திரிசொல்**

1. திரிந்த வினைச்சொல் (சீவக. 223, உரை)
2. வழக்கிலின்றி அரிதிற் பொருளுணர்தற்குரிய வினைச் சொல் (நன். 273)

**வினைத் தொகை**

காலங் கரந்த பெயரெச்சத் தொடர் (நன். 364)

**வினைப்பகுதி**

பகுபதத்தில் வினைச்சொல்லாகிய பகுதி (நன். 137, சங்கர.)

**வினைப்பெயர்**

1. தொழிற் பெயர் : செயலென்னும் வினைப்பெயர் (நெடுநல். 171, உரை)

2. செய் தொழிலினால் ஒருவனுக்கு வரும் பெயர் : நிலப் பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே வினைப் பெயர் : (தொல். சொல். 165)

காண்க : வினையாலணையும் பெயர்

**வினைமாற்று**

முன் சொன்ன தொழிலொழிய இனி வேறொன்று என்பதைக் காட்டுவதாகிய பொருண்மை: வினைமாற் றசை நிலை (தொல். சொல். 264)

**வினை மாற்றுச்சொல்**

வினை மாறுவதைத் தெரிவிக்கும் 'மற்று' முதலிய இடைச் சொல்

**வினைமுற்று**

முற்று விகுதி கொண்ட வினைச்சொல் (நன். 323, மயிலை.)

**வினையாலணையும் பெயர்**

வினைமுற்றுப் பெயர்த்தன்மைப்பட்டு வருவது (நன். 286)

**வினையிடைச் சொல்**

வினைத்தன்மை பெற்று வரும் இடைச்சொல் வகை (நன். 269, மயிலை.)

**வினையியற்சொல்**

உலக வழக்கிலுள்ள வினைச்சொல் (நன். 269, மயிலை.)

**வினையுரிச் சொல்**

வினைக்கு அடையாய் வரும் சொல்

**வினையுருபு**

வினைச் சொல்லின் உறுப்பான இடைநிலை விகுதி முதலியன (நன். 420, உரை)

**வினையுவமம்**

தொழில்பற்றி வரும் ஒப்புமை (தொல். பொ. 276, உரை)

**வினையெச்சக்குறிப்பு**

காண்க : குறிப்பு வினையெச்சம் (நன். 342, உரை)

**வினையெச்சம்**

வினையைக் கொண்டு முடியும் குறைவினை (நன். 342)

**வினையெச்ச வினைக்குறிப்பு முற்று**

குறிப்பு வினை முற்று வினையெச்சப் பொருளதாய் வருவது (புறநா. 44, உரை)

**வினையெஞ்சனி**
எஞ்சி நிற்பதாகிய அலங்கார வகை (யாழ். அக.)

**வினையெஞ்சு கிளவி**
காண்க : வினையெச்சம் (தொல். எழுத். 204)

**வினைவயிற் பிரிதல்**
தலைவன் தலைவியை நீங்கி வேந்தனாணையாற் பகைமேற் பிரியும் பிரிவைக் கூறும் அகத்துறை (முல்லைப். உரையவதாரிகை.)

**வினைவழிச் சேறல்**
காண்க : வினைவயிற் பிரிதல்

**வினோத்தி**
ஒரு முக்கியப் பொருள் பிறிதொரு முக்கியப் பொருளோடு பொருந்தாதாயின் முக்கியத் தன்மையைப் பெறாதெனக் கூறும் அணிவகை (மாறனலங். 236, பக். 355)

**வினோதக் கூத்து**
அரசர் முன்பு நடிக்கும் வெற்றிக் கொண்டாட்டக் கூத்து (சிலப். 3, 13, உரை, பக். 87)

## வீ

**வீரமாலை**
வீரனைப் புகழ்ந்து பாடும் பாடல் வகை
2. வெற்றி மாலை (யாழ். அக.)

**வீரவெட்சி மாலை**
தொண்ணூற்றாறு பிரபந்தங்களுள், வெட்சிமாலை சூடிப் பகைவர் நிரை கவர்ந்த வீரனின் வெற்றித் திறத்தைத் தசாங்கத்தோடு புகழும் நூல் (சது.)

## வெ

**வெகுவிரிசி**
காண்க :அன்மொழித் தொகை
ஐந்தொகை மொழிமேற் பிற தொக்குவருந் தொகை

**வெட்சி**
போர்த் தொடக்கமாக வெட்சிப்பூ வணிந்து பகைவர் நிரையைக் கவர்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 57)

**வெட்சிக் கரந்தை**
பகைவர் கவர்ந்து கொண்ட ஆநிரையை மீட்பதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 57, உரை)

**வெட்சி யரவம்**
பகைமுனையிடத்து நிரை கவரப் போகுங்கால் உண்டாம் ஆரவாரத்தைக் கூறும் புறத்துறை (பு.வெ. 1, 3)

**வெட்டிப் பாடுதல்**
ஒரு புலவன் தன்னைப் பழித்துக் கூறிய சொற்களாலன்றிப் பிறவாறு அவனைப் பழித்துப் பாடுதல்

**வெண்கலி**
காண்க : வெண்கலிப்பா. வெண்டளை பெற்று வரும் கலிப்பா வகை

**வெண்கலிப்பா**
வெண்டளை பெற்று வரும் கலிப்பா வகை

**வெண்கவி**
காண்க : வெண்பா : நால்வகைப் பாக்களுள் ஒன்று
2. பொருளாழமற்ற கவி

**வெண்சீர்**
காண்க : வெண்பா வுரிச்சீர் (இலக். வி. 718)

**வெண்சீர் வெண்டளை**
வெண்பா வுரிச்சீர்முன் நேர் வந்து ஒன்றுந் தளைவகை (காரிகை. உறுப். 10)

**வெண் செந்துறை**
இரண்டடிகள் தம்முள் அளவொத்துவருஞ் செய்யுள் வகை (வீரசோ. யாப். 14)

**வெண்டளை**
வெண்பாவுக்குரிய தளை (யாப். வி. 62, உரை)

**வெண்டாழிசை**
மூன்றடியாய் வேற்றுத்தளை விரவி ஈற்றடி முச்சீரான் இறுவதாகவேனும் சிந்தியல் ஒரு பொருண் மேல் மூன்றடுக்கி வருவதாகவேனுமுள்ள வெண்பாவின் இனம் (யாப். வி. 66, உரை)

**வெண்டுறை**
1. மூன்றடி முதல் ஏழடியீறாக அடிகளைப் பெற்றுச் சீர் குறைந்தும் மிக்கும் வருதலையுடைய வெண்பாவின் வகை (காரிகை.)
2. ஆடற்குரிய பாட்டு (பு. வெ. 12, வென்றிப். 18); (யாப். வி. பக். 537)

**வெண்டுறைச் செந்துறைப் பாட்டு**
கலி வரி சிற்றிசை பேரிசை சிற்றிசைச் சிற்றிசை என்ற பகுதிகளையுடை இன்னிசைப் பாட்டு வகை (யாப். வி. பக். 538)

**வெண்டுறைப் பாட்டு**
வரி குரவை மண்டிலம் சேதம் முதலாகிய பகுதிகளை உடைய கூத்திற்குரிய பாட்டு வகை (யாப். வி. பக். 538)

**வெண்டுறை மார்க்கம்**
ஒன்பது மேற்புறத்திற்கும் பதினோராடலுக்கும் உரிய பாட்டு வகை (யாப்.வி. பக். 537)

**வெண்பா**
நால்வகைப் பாக்களுள் ஒன்று (தொல். பொ. 417)

**வெண்பாப் பாட்டியல்**
குணவீர பண்டிதரால் வெண்பாவினால் இயற்றப்பட்ட பாட்டியல் நூல்

**வெண்பா விருத்தம்**
வெளி விருத்தம்

**வெண்பா வுரிச்சீர்**
நேர் நேர் நேர்; நிரை நேர் நேர்; நேர் நிரை நேர்; நிரை நிரை நேர் என, வெண்பாவுக்குரியவாய் வரும் நேரீற்று மூவசைச் சீர் (யாப். வி. 12, 61)

**வெண்புணர்ச்சி மாலை**
முந்நூறு (300) வெண்பாக் கொண்ட பிரபந்த வகை

**வெதிரேகம்**
வியதி ரேகம்; வேற்றுமையணி (தண்டி. 47, பக். 88)

**வெதிரேலங்காரம்**
காண்க : வியதிரேகம்

**வெருவருநிலை**
பகைவர் அம்பு தன் மார்பைப் பிளக்கவும் பூமியில் விழாமல் நின்ற வீரனது நிலையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 23, கொளு.)

**வெளிஅடி**
வெண்பாவுக்குரிய அடி (யாப். வி. 85, உரை)

**வெள்ளிநிலை**
துயர்தீரச் சுக்கிரன் மழை பெய்வித்தலைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு. வெ. 9, 16)

**வெள்ளிப்பாடல்**
பழைய நூல்களில் வெள்ளி என்ற புலவரால் புதியவாகப் பாடிச் செருகப்பட்ட பாடல்

**வெள்ளை**
வெண்பா : வெள்ளையுட் பிறதளை விராவா (யாப். 22)

**வெள்ளைக் கவி**
காண்க : வெண்கவி¹ : வெண்கவி²: 1. நால்வகைப் பாக்களுள் ஒன்று 2. பொருளாழமற்ற கவி 3. புன் மொழிகளாற் கவி பாடுவோன் (வெண்பாப். செய். 48) 4. பிறரைத் தொடங்கச் செய்து கவி பாடுவோன் 5. பிறர் தொடங்கப்படும் துதிக்கவி

**வெள்ளைச் சுரிதகம்**
வெண்டளையில் வரும் கலிப்பாவின் இறுதியுறுப்பு வகை (கலித். 143, உரை)

**வெள்ளை விருத்தம்**
காண்க : வெளி விருத்தம் : மூன்றடியாலேனும் நான்கடி யாலேனும் முற்றுப் பெற்ற அடிதோறும் இறுதியில் ஒரு சொல்லையே தனிச் சொல்லாகக் கொண்டு வெண்பாவுக்கு இனமாய் வரும் பாவகை (காரிகை. செய். 7, உரை)

**வெள்ளொத்தாழிசை**
காண்க : வெண்டாழிசை (காரிகை. செய். 7, உரை)

**வெள்ளோசை**
1. வெண்பாவுக்குரிய ஓசை (கலித். 52, உரை)
2. பெருக்குரல் (திருவாலவா. 57, 26, கீழ்க்குறிப்பு)

**வெளி**
வெண்பா (இலக். அக.)

**வெளிப்படை**
1. பல்பொருள் குறிக்குஞ் சொல்லை ஒரு பொருட்கு நியமிக்கும் பொருட்டு ஏற்றதோர் அடை கொடுத்துக் கூறும் அணிவகை (புறநா. 17, உரை)
2. தெளிவானது (நன். 269)
3. மேற்பார்வையில் தோன்றுவது
4. பகிரங்கம்

**வெளிப்படைநிலை**
அறத்தொடு நிற்றல் (களவியற். 122)

**வெளிப்படையுவமம்**
குறிப்பானன்றித் தெளிவாக அறியப்படும் உவமம் (இலக். வி. 639, உரை)

**வெளி விருத்தம்**
மூன்றடியாலேனும் நான்கடியாலேனும் முற்றுப் பெற்று அடிதோறும் இறுதியில் ஒரு சொல்லையே தனிச் சொல்லாகக் கொண்டு வெண்பாவுக்கு இனமாய் வரும் பாவகை (காரிகை. செய். 7, உரை)

**வெற்றிக் கரந்தை மஞ்சரி**
பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் பகைவர் கவர்ந்த நிரையைக் கரந்தை மாலை சூடிய வீரன் மீட்டல் பற்றிய இலக்கியம் (சது.)

**வெற்றெனத் தொடுத்தல்**
நூற்குற்றம் பத்தனுள், பயனில் சொற்றொடர் படக் கூறுவது (நன். பொது. 12)

**வெற்றொழிப்பு**
அவநுதியணி வகை (யாழ். அக.)

**வெறியாட்டு**
1. வேலனாடல் (பு.வெ. 1, 2, தலைப்பு)
2. களியாட்டம் : வெறியாட்டுக் காளாய் (தாயு. கற்புறு. 2)

**வெறி விலக்கு**
தலைவிக்குக் காமத்தாலுண்டான நோயை வேறு காரணத்தாலுண்டானதாகக் கொண்டு, அந்நோயைத் தணிக்க வேண்டிச் செய்யும் வெறியாட்டைத் தடுத்து நிற்றலைக் கூறும் அகத்துறை (மாறனலங். 107, உதா. பக். 204)

**வெறுத்திசை**
காண்க : வெறுத்திசைப்பு : யாப்பினுள் ஓசைக் குற்ற வகை (யாப். வி. பக். 403)

**வென்றிக் கூத்து**
மாற்றானொடுக்கமும் மன்னனுயர்ச்சியுங் காட்டுங் கூத்து (சிலப். 3, 13, உரை)

## வே

**வேட்கை முந்துறுத்தல்**
தலைவி தன் விருப்பத்தைத் தலைவன் முன் கூறும் புறத்துறை (பு.வெ. 12, 1)

**வேண்டப்பாடு**

பொருள் நிரம்புவதற்குரியதாய்த் தொக்கு நிற்குஞ் சொற்றொடர்: நின்ற வில்லி: வீரபத்திர தேவர்க்கு எதிரே பொருதற்கு நின்ற வில்லியென்பது வேண்டப்பாடு (தக்கயாகப். 704, உரை)

**வேண்டாம்**

1. இன்றியமையாது வேண்டத்தக்கதன்று என்பது குறிக்கும் வியங்கோள்வினை: ஓதாம லொருநாளு மிருக்க வேண்டாம்
2. இன்றியமையாததன்று என்ற பொருளில் ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர்கால வினை முற்று
3. உறவின்மை முதலியவற்றைக் குறித்து ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர்கால வினை முற்று
4. அவசியமின்மை என்பதைக் குறிக்கும் வினை

**வேண்டும்**

1. இன்றியமையாதது வேண்டத்தக்கது என்பது குறிக்கும் வியங்கோள் வினை: வேந்தனீயாகி வையமிசைப் படக் காத்தல் வேண்டும் (சீவக. 201)
2. இன்றியமையாதது என்ற பொருளில் ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர்கால வினைமுற்று: எனக்குப் புத்தகம் வேண்டும்
3. உறவு முதலியவற்றைக் குறித்து ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிாகால வினைமுற்று: அவன் உனக்கு என்ன வேண்டும்?
4. 'அவசியம்' என்பதைக் குறிக்கும் வினை

**வேத்தியல்**

1. வேந்தனது தன்மை (நன். 409, மயிலை.)
2. அரசர்முன் ஆடும் கூத்து வகை: வேத்தியல் பொதுவியலென விருதிறத்துக் கூத்தும் (சிலப். 14, 148, உரை)

**வேத்தியன் மலிபு**

மற மன்னனது மேம்பாட்டினை வீரர் சொல்லுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 2, 13)

**வேள்வி நிலை**

1. அரசன் யாகஞ் செய்த பெருமையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு.வெ. 9, 15)

2. தலைவன் சேதாவினை நாட்காலையிற் கொடுக்கும் கொடைச் சிறப்பினைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 90)

**வேளாண் மாந்தரியல்பு**

ஆணைவழி நிற்றல், அழிந்தோரை நிறுத்தல், கைக் கடனாற்றல், கசிவகத்துண்மை, ஒக்கல் போற்றல், ஓவா முயற்சி, பன்னிறை தருதல், ஒற்றுமை கோடல், விருந்து புறந்தருதல், திருந்திய வொழுக்கம் என்ற வேளாளர்க்குரிய பத்துவகைத் தன்மைகள்

**வேளாண் வகை**

வேளாண் செய்தற்குரிய கடமைகளை நிறைவேற்றலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 8, 11)

**வேற்றிசைப் பா**

சருக்கம் அல்லது இலம்பகத்தின் முடிவில் வேறுபாடான இசை பெற்று வரும் பா (திவா.)

**வேற்றுநிலை மெய்ம்மயக்கம்**

க்,ச்,த்,ப் வொழிந்த பதினான்கு ஒற்றுக்களும் தம்முடன் பிற மெய்கள் வந்து மயங்குகை (நன். 110, உரை)

**வேற்றுப்பொருள் வைப்பு**

சிறப்புப் பொருளைச் சாதிப்பதற்குப் பொதுப் பொருளை யும், பொதுப் பொருளைச் சாதிப்பதற்குச் சிறப்புப் பொருளையும் அமைத்துக் கூறும் அணி (தண்டி. 46)

**வேற்றுமை**

1. ஒரு பொருளின் வேறுபாடு காட்டற்குரிய தன்மை
2. செயப்படு பொருண் முதலாயினவாகப் பெயர்ப் பொருளை வேறுபடுத்துவது (தொல். சொல். 62)
3. வேற்றுமை யுருபு (நன். 420)
4. வேற்றுமைப் புணர்ச்சி (நன். 151)
5. வேற்றுமையணி (தண்டி. 49)
6. வித்தியாசம் : வேற்றுமையின்றிக் கலந்திருவர் நட்டக் கால் (நாலடி. 75)
7. விரோதம் : காமம் புகர்பட வேற்றுமை கொண்டு பொருள்வயிற் போகுவாய். (கலித். 12)
8. ஒப்புமையின்மை

**வேற்றுமைத் தொகை**

வேற்றுமை யுருபு தொக்குவருந் தொடர் (நன். 363)

**வேற்றுமை நயம்**

வேறுபடுத்திப் பார்க்கும் முறை : ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும் வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர் (நன். 451)

**வேற்றுமை நிலை**

பொருளணி வகை (யாப். வி. பக். 511)

**வேற்றுமைப் புணர்ச்சி**

வேற்றுமை யுருபுகள் இடையில் விரிந்துந் தொக்கும் வரச் சொற்கள் புணர்வது (நன். 152, உரை)

**வேற்றுமை மயக்கம்**

ஒரு வேற்றுமையுருபு வேறொரு வேற்றுமைப் பொருளில் வருகை

**வேற்றுமையணி**

காண்க : வியதிரேகம், வேற்றுமையணி (தண்டி. 47, பக். 88)

**வேற்றுமையுருபு**

இரண்டு முதல் ஏழு வரையிலுமுள்ள ஆறு வேற்றுமை களை யுணர்த்தும் உருபுச் சொல் (நன்.)

**வேற்றுமை வரி**

வேற்றுமை யுருபு விரிந்து நிற்குந் தொடர்

**வேற்றொலி வெண்டுறை**

முன்பின் சில அடிகள் ஓரோசையாயும் பின்பிற் சில அடிகள் மற்றோரோசையாயும் வரும் வெண்டுறை வகை (காரிகை. செய். 7, உரை, பக். 79)

**வேறு**

1. பிறிது
2. காவியம் முதலியவற்றில் செய்யுள் வேறுபாட்டினைக் குறிப்பதற்கு இடும் தலைப்புச் சொல்



## வை

**வைதருப்ப நெறி**

செறிவு, தெளிவு முதலிய பத்துக் குணங்களும் அமையப் பாடும் முறை (தண்டி. 14)

**வைதாளி**

புகழ்ந்து பாடும் பாட்டு





**Dr. P. Gopalan** was born on 11 th May Nineteen forty-five at Coimbatore. He pursued his education mostly from the P. S. G. College of Arts and Science, Coimbatore He took his B.A., Degree in Tamil from the University of Madras and obtained B. Ed., degree from Annamalai University. He obtained his Master and Doctoral degrees from the Calicut University and it is not idle to mention that he is the first person to get the Ph. D., Degree in Tamil from the Calicut University under the guidance of Dr. T E. Gnanamurthy, Emeritus Professor of Tamil Research.

He joined in the Education Department of Tamil Nadu Secretariat Service in January, 1974. He worked as Post-Doctoral Research Fellow at International Institute of Tamil Studies, at Madras and he is the first Person to organise the Tamil University Museum, Thanjavur and worked in the Capacity of first Assistant Museum Curator on foreign service terms. He has got the Publication of three books and twenty Research Papers to his Credit.

Having Lien at Secretariat Service, he is Since 01-03-1985 in the Collegiate Education Service as Lecturer in Tamil and at Present in Govt Arts College for Men, Udumalpet-642 126 Coimbatore District. He is at Present engaged in Post Doctoral Research work Relating to THE STUDY OF THE CULTURAL HISTORY ON KONGU BOYAR PEOPLE.